# யார் சொல்வது குறைந்த ரிஸ்க் உள்ள முதலீடுகள் அதிக லாபங்களை தர இயலாது என்று




## யூடிஐ பாண்ட் ஃபண்ட்

- தூய கடன் திட்டம்
- யூடிஐ-ன் 53 கிளை அலுவலகங்கள் மூலம் தினசரி என்ஏவி* அடிப்படையில் விற்பனை & மறுகொள்முதல்
- வரிச் சிக்கனம்
- 54 EA/EB -யின் கீழ் முதலீடு செய்ய தகுதி

**மாதாந்திர பணம் எடுக்கும் திட்டம்** தேர்வுடன்

**மாதாந்திர பணம் எடுக்கும் திட்டம்**

- குறைந்த பட்ச முதலீடாக ரூ. 30,000/- குறைந்தபட்சம் 6 மாதங்களுக்கு வைத்திருக்க வேண்டும்.
- ECSபின்தேதியிட்ட காசோலைகள் மூலம் 6 மாதங்களுக்கு ஒரு முறை பணம் வழங்கப்படும்.
- அனைத்து வரவுசெலவு விபரங்களுக்கும் வருடாந்திர விபர அறிக்கை

**உங்களின் முதலீட்டு யூடிஐ பாண்ட் ஃபண்ட் ஓர் அங்கமாக இதுவரை இடம் பெறவில்லை என்றால், முதலீடு செய்ய இதுவே தருந்த நேரம்!**



## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

13, சர்வித்தல்தாஸ் டாக்கர்ஸே மார்க், நியூ மெரீன் லைன்ஸ், மும்பை - 400 020. தொ.பேசி.: 2031818.

வருகை தருக www.unittrustofindia.com

**மண்டல அலுவலகம் :** 29 இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன் : 5210335, 5210347.

**கிளை அலுவலகங்கள்** கோயம்புத்தூர் போன் : 214973. சென்னை போன் : 5210335, 5210347. மதுரை போன் : 738186. திருச்சி போன் : 760060.

21399 C TAM A

# சிப்பாய்களின் சிப்பாய்!

'சிப்பாய்களின் சிப்பாய்' என்று அழைக்கப்படும் பர்வேஸ் முஷாரஃப், டெல்லியிலுள்ள தர்யாகஞ்ச் பகுதியில் பிறந்தவர். பாகிஸ்தான் பிரிவினையின்போது, 'இந்தியாவில் வசிக்கும் முஸ்லிம்கள் இந்தியர்களாகவே ஏற்றுக் கொள்ளப்படுவார்கள்; பாகிஸ்தானைத் தாய்நாடாகத் தேர்ந்தெடுக்க விரும்பு கிறவர்கள் பாகிஸ்தானுக்குக் குடிபெயரலாம்' என்று அன்றைய நேரு அரசு அறிவித்தபோது பாகிஸ் தானுக்குக் குடிபெயர்ந்தது முஷாரஃபின் குடும்பம்.



• தமது பேரக் குழந்தையுடன் விளையாடும் முஷாரஃப்

கராச்சியில் தமது படிப்பைத் தொடர்ந்த முஷாரஃப், 1964-ல் பாகிஸ்தான் இராணுவத்தில் ஒரு சாதாரண காலாட்படை வீரராகத்தான் சேர்ந்தார். சேர்ந்த மறுவருடமே நடந்த இந்திய-பாகிஸ்தான் யுத்தத்திலும் பிறகு 71-ல் நடந்த பங்களாதேஷ் விடுதலைப் போரிலும் தாம் காட்டிய வீரத்திற்காகச் சிறப்பு விருதுகள் பெற்றார். ஒரு சாதாரண சிப்பாயாகச் சேர்ந்தாலும் சிறப்புப் படைப் பிரிவிலும் (நமது எஸ்.பி.ஜி. போல்) சிறந்த பயிற்சியும் அனுபவமும் பெற்று முன்னணி வீரராகத் திகழ்ந்தார்.

97-ல் பிரதமரான நவாஸ் ஷெரீஃப் இவர் மீது மிகுந்த நம்பிக்கை வைக்கத் துவங்கினார். நான்காம் நிலை இராணுவத் தளபதியாக இருந்த முஷாரஃப்,

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

ஷெரீஃபின் திடீர் முடிவால் ஜெனரல் ஜஹாங்கீர் கராமத் தூக்கியெறியப்பட்டபோது, திடீர் உயர்வு பெற்று தலைமைப் பொறுப்புக்கு வந்து விட்டார். அதாவது இவருடைய சீனியர் அதிகாரிகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு, இவரைத் தளபதியாக்கினார் ஷெரீஃப்.

கடந்த மே 26-ல் கார்கில் யுத்தம் தொடங்கியபோது, இவரிடம் முழு நம்பிக்கை வைத்த ஷெரீஃப், இவரிடமே கார்கில் போர்த் திட்டங்களை ஒப்படைத்தார்.

கார்கில் போரின்போது முஷாரஃப்பிற்கும் அவரது தளபதிக்குமிடையே நடந்த உரையாடலின் ஒலிப்பதிவு நாடாவை உலக அரங்கில் இந்தியா ஒலிக்க விட்டது. ரகசியமான அந்த உரையாடல் டேப்பை, கசியவைத்தவர் முஷாரஃப்தான் என்று ஷெரீஃபும், ஷெரீஃப்தான் என்று முஷாரஃப்பும் ஒருவர்மீது ஒருவர் சந்தேகம் கொண்டனர்.

கார்கில் யுத்தம் பாகிஸ்தானுக்குத் தோல்வியில் முடிந்த போதும் கடந்த ஆகஸ்ட் இறுதியில் முஷாரஃப்பை முப்படைகளின் நாயகனாக்கினார் ஷெரீஃப். இருந்தும் அக்டோபர் 12-ல் முஷாரஃப்பைப் பதவி நீக்கம் செய்யும் உத்தரவில் ஷெரீஃப் கையெழுத்திட, ஷெரீஃபைக் கவிழ்த்து விட்டுத் தாமே அதிபராகிவிட்டார்.

முஷாரஃபின் சொந்த வாழ்க்கை எப்படி? "திருமணமாகி ஒரு மகனும் மகளும் இருக்கிறார்கள் என்பது தவிர அவரது சொந்த வாழ்க்கை பற்றிச் சொல்வதற்குப் பெரிதாக ஒன்றுமில்லை!" என்கிறார்கள் பாகிஸ்தானிய பத்திரிகையாளர்கள்.

இஸ்லாம் மதத்தில் மிகுந்த பற்றுக் கொண்டவர் என்றாலும் இதுவரை ஒரு மிதவாதியாகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார் முஷாரஃப்.

ஒரு நாட்டை ஆள்வதற்குத் தேவையான நெளிவு சுளிவுகள், தேசத்தின் பொருளாதாரம் பற்றிய அறிவு, சர்வதேச உறவுகள் பற்றிய நீக்குப் போக்குகள், ஒரு தேசத்துக்குத் தலைமையேற்று நடத்திச் செல்வதற்குத் தேவையான ஆளுமையெல்லாம் முஷாரஃபிடம் இல்லையென்றே பலரும் சொல்கிறார்கள்.

ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு உதவிய இவரது அதிரடித்தன்மை, ஆட்சியை நடத்திச் செல்வதற்கு உதவுமா உதவாதா என்பது பற்றி முஷாரஃப்பே இன்னும் ஒரு முடிவுக்கு வந்ததாகத் தெரியவில்லை யென்றே பலரும் சொல்கிறார்கள்.

— வெங்கட்

---

# கோவை வாசகர்களே, நினைவுபடுத்துகிறோம்!




கோவை நகரிலுள்ள பிரச்னைகள் பற்றியும் மாநகராட்சி செய்துள்ள நல்ல பணிகள் பற்றியுமான உங்கள் கடிதங்கள் எங்களுக்கு வந்துசேர வேண்டிய கடைசி தேதி: 13.11.99.

உடனடியாக அனுப்புங்கள். உங்கள் கடிதங்களின் அடிப்படையில் தான் வரும் 17, 18, 19-ம் தேதிகளில் நாங்கள் கோவைக்கு வரவிருக்கிறோம்.

- ஆசிரியர்

# நெல்லுக்குப் பாய்ந்தது...

காதில் விழுந்தவை :

● அம்மா ஆட்சியின் போது சசிகலா குடும்பத்தாரால் முறைகேடாக இறக்குமதி செய்யப்பட்ட வெளிநாட்டு லெக்ஸஸ் சொகுசு காரை மத்திய வருவாய் புலனாய்வுத் துறை கைப்பற்றி முடக்கி வைத்திருந்தது. தினகரனின் சகோதரர் பாஸ்கரன் இந்தக் காரைப் பயன்படுத்தி வந்தார். இப்போது இந்தக் காரை மத்திய அரசு ரிலீஸ் செய்து விட்டதாம். சென்ற பா.ஜ.க. ஆட்சியின் போது நிதி இலாகாவில் அம்மா வைத்ததுதானே சட்டம். "ஐம்பது சதவீதம் இறக்குமதி தீர்வைக் கட்டினால் இதுபோன்று பறிமுதல் செய்யப்பட்ட வெளிநாட்டு கார்களை ரிலீஸ் செய்து கொள்ளலாம்" என்ற சிறப்புத் திட்டம் (கார் விவாத் சமாதான்) கொண்டு வரப்பட்டு, அந்த லெக்ஸஸ் கார் பினாமி நபரிடம் மீண்டும் ஒப்படைக்கப்பட்டு விட்டதாம். 'புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்' என்பது போல், அம்மாவுக்காகக் கொண்டு வரப்பட்ட சிறப்புத் திட்டத்தால் நாடு முழுவதும் முறைகேடாக இறக்குமதி செய்யப்பட்டு பறிமுதல் செய்யப்பட்ட பல வெளிநாட்டு கார்களும், உரிமையாளர்களிடம், தீர்வை வசூலிக்கப்பட்டபின் திருப்பிக் கொடுக்கப்பட்டு விட்டன.

● பொதுவாகவே தூத்துக்குடிப் பகுதியில் மழை குறைவு. அதிலும் குறிப்பாக இந்த வருடம், மழை குறைவாக இருப்பதற்கு தனியார் தாமிர உருட்டாலையை காரணமாகச் சொல்கிறார்கள். சுற்று வட்டாரத்தில் நன்கு மழை பெய்யும் நிலையில் அந்த ஆலை வெளிப்படுத்தும் நச்சுப் புகை காரணமாகத் தூத்துக்குடியில் மட்டும் மழை மேகங்கள் ஏமாற்றம் கொடுத்து விட்டுச் சென்று விடுகிறதாம். விஞ்ஞானபூர்வமாக இந்த வாதம் எவ்வளவு சரி என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். ஆனால் தூத்துக்குடி நகரில் பரவலாகப் பேசப்படுகிறது. "அந்த உருட்டாலைக்கெதிராக போராட்டம், மறியல், ஆர்ப்பாட்டம் என்று செய்த அரசியல்வாதிகள் இப்போது எங்கே போய் விட்டார்கள். ஆலையில் அவ்வப்போது விபத்துகள் ஏற்பட்டு மனித உயிர்களும் பலியாகின்றன. ஆனால், 'தங்களால் ஒன்றும் செய்ய முடியாது' என்று அரசியல்வாதிகள் ஒதுங்கி விட்டார்களா அல்லது அந்த ஆலையில் பல்வேறு பணிகளுக்கான காண்ட்ராக்ட்களை எடுத்திருக்கும் தங்கள் ஆட்களின் நல்வாழ்விற்காக ஒதுங்கி விட்டார்களா என்று புரியவில்லை" என்று சொல்கிறார் நகரின் பெரிய மனிதர் ஒருவர்.

● ஏதாவது குற்றச்சாட்டுக்கள் கூறப்படுமானால், அதைப் பற்றி தீர விசாரித்து உண்மையிருந்தால் திருத்திக் கொண்டும், தவறாக இருந்தால் மறுப்புத் தெரிவிக்கும் நல்ல பழக்கத்தை வைத்திருக்கிறது மேயர் ஸ்டாலின் தலைமையில் உள்ள சென்னை மாநகராட்சி. ரிப்பன் கட்டடத்தில் உள்ள துறைகளில் 'பணிகள்' (Works) என்ற துறை மிகவும் முக்கியமான



துறை. இந்தத் துறையில்தான் காண்ட்ராக்டர்களின் பில்கள் பாஸ் செய்யப்படும். இந்தத் துறைக்கு சீனியரான ஓர் அதிகாரியை உயர்நிலையில் நியமித்திருக்கிறார்களாம். அந்த அதிகாரி, காண்ட்ராக்டர்கள் கஷ்டப்படுவதைப் பார்த்து, "இரக்கம்" காட்ட முயற்சி செய்யும்போது, பில்களை ஆராய்ச்சி செய்யும் கணக்கியல் பிரிவுக்காரர்கள் விதிகளைச் சுட்டிக்காட்டி, ஆட்சேபணை செய்தார்களாம். பொது மக்களுக்குத் தாங்கள் செய்யும் 'சேவை'க்கு அவர்கள் இடையூறாக இருப்பதால், சிலரை வெளியே பந்தாடி விட்டார்கள். இனி பிரச்னையில்லை. இந்த நிலையில் சென்னையில் கட்டப்படும் பத்து மேம்பாலங்களுக்கான உத்தேச மதிப்புத் தொகை 33 சதவீதம் கூடுதலாக உயர்த்தப்பட்டிருப்பதுதான் இப்போதைய பரபரப்பான விவகாரம். இதில் மோப்பம் பிடிப்பதற்கு விஷயம் உண்டு என்கிறார்கள் த.மா.கா. பிரமுகர்கள்.

— சஞ்சயன்

# தானம் கேட்கும் டாக்டர்!

**மோ**கன் பவுண்டேஷன் (Mohan Foundation) – இதற்கும் நடிகர் மோகனுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. Multi Organ Harvesting Aid Network என்பதன் சுருக்கம்தான் மோகன். மூளை இறப்பு ஏற்பட்டபின், ஒருவருடைய உடல் உறுப்புகளை தானமாகப் பெற்று, தேவைப்படுபவர்களுக்குப் பொருத்த சட்டப்படி இப்போது வழி இருக்கிறது. ஆனாலும், மக்களிடையே உடல் உறுப்புக்களை தானம் செய்வது பற்றிய விழிப்புணர்வு பெரிய அளவில் இல்லை. எனவே, மக்கள் மத்தியில் இது குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கத்துடன்தான் இந்த அமைப்பு உருவானது. டாக்டர், சுனில் ஷெராப் முன்னின்று துவக்கிய இந்த அமைப்பு சென்னையிலும், மும்பையிலும் செயல்பட்டு வருகிறது.

"நாங்கள் அறிமுகப்படுத்தியுள்ள டோனர் கார்டு என்பது ஒருவர், தமது (மூளை) மரணத்துக்குப் பின் தமது உறுப்புக்களை தானம் தருவதற்குத் தம் சம்மதத்தைத் தெரிவிக்கிற அடையாள அட்டை. சென்னையிலும், மும்பையிலுமாகச் சுமார் ஐம்பதாயிரம் பேருக்கு இந்த அடையாள அட்டையை வழங்கியிருக்கிறோம். விபத்தில் சிக்கி, ஆழ்ந்த கோமா நிலையில் இருப்பவர் ஒருவருடைய குடும்பத்தினரிடம், உடல் உறுப்பு தானம் பற்றி எடுத்துச் சொல்லி, அவர்களுடைய சம்மதத்தைப் பெறுவது என்பது மிகவும் சிரமமான, தர்மசங்கடமான காரியம். டோனர் கார்டு வைத்திருப்பவர்களாக இருந்தால், அவரது குடும்பத்தினருக்கு, அவருடைய விருப்பம் ஏற்கெனவே தெரிந்திருக்கும். அப்போது பேசி, சம்மதிக்க வைப்பது சுலபம். மேல்நாடுகளில் உள்ளதைப் போல, இங்கேயும், டிரைவிங் லைசென்ஸ் வழங்குகிறபோது, அதிலேயே அவருக்கு, (மூளை மரணச் சூழ்நிலையில்) தம் உடல் உறுப்புக்களை தானம் செய்யச் சம்மதமா என்றும் கேட்டுக் குறிப்பிட வேண்டும் என்பதை அரசிடம் வற்புறுத்தப் போகிறோம். அதற்காகப் பத்தாயிரம் பேரிடம் கையெழுத்து வாங்கும் பணியில் இப்போது ஈடுபட்டிருக்கிறோம்" என்கிறார்கள் இந்த அமைப்பைச் சேர்ந்த திருமதி. ஷைலா ஷெராப்பும், டாக்டர் சுமனாவும்.


• திருமதி ஷைலா ஷெராப்


• டாக்டர் சுமனா

**ச**ரி, மூளை இறப்பு என்றால் என்ன? யார் யாரெல்லாம் இதுபோன்று தானம் தரலாம் என்பது பற்றி டாக்டர் சுமனாவிடம் கேட்டோம்.

**• யார் தம் உடல் உறுப்புக்களை தானம் செய்யலாம்?**

நல்ல ஆரோக்கியமானவராக இருந்தால், அறுபது அல்லது அறுபத்தைந்து வயது வரை தானம் செய்யலாம். கண் தானத்துக்கு வயது வரம்பே கிடையாது. தானம் செய்பவர் பதினெட்டு வயதுக்குட்பட்டவரானால், அவரது பெற்றோர்,

அல்லது காப்பாளரின் சம்மதம் வேண்டும். பொதுவாகவே சம்பந்தப்பட்ட குடும்பத்தினரின் ஒப்புதல் இதற்கு மிகவும் அவசியம்.

**● கண் தானத்துக்கு மட்டும் ஏன் விதிவிலக்கு?**

கண் என்பது, சிறுநீரகம், இதயம் போன்ற உறுப்பு இல்லை. அது திசுக்களால் ஆனது. எனவேதான் விதிவிலக்கு. அது மட்டுமில்லை. கண்களை மட்டுமே, ஒருவர் இறந்த பின்னர், ஆறு மணி நேரத்துக்குள் எடுத்து, மற்றவர்களுக்குப் பொருத்த முடியும். மற்ற உறுப்புகளை உயிர் பிரிந்தபின் எடுத்துப் பயன்படுத்த இயலாது. மூளை மரணம் நிகழ்ந்தவுடன் எடுத்தால் மட்டுமே பலன் உண்டு.

## நிஜமான உண்மைக் கதைகள்!

**லொ**ரெட்டா ஆண்ட்ரூஸ். அமெரிக்காவின், மிதக்கும் பல்கலைக் கழகமான 'எஸ்.எஸ். யூனிவர்ஸ் எக்ஸ்புளோரர்' என்கிற பிரம்மாண்டமான கப்பலில் இருக்கும் பெரிய நூல் நிலையத்தில் லைப்ரரியனாகப் பணி புரிந்து வந்தார். உலகைச் சுற்றி வரும் இந்த மிதக்கும் பல்கலைக் கழகம், சுமார் ஒரு வருடத்துக்கு முன்பாகச் சென்னை துறைமுகத்தில் நங்கூரமிட்டதை விதியின் சதி என்றுதான் சொல்ல வேண்டும். கப்பலை விட்டு இறங்கிய லொரெட்டா ஆண்ட்ரூஸ் சென்னை நகருக்குள் வந்தார். சாலையில் நடந்து சென்று கொண்டிருந்த அவரை, மாநகரப் போக்குவரத்து பஸ் உருவில் வந்த எமன் பலிவாங்கி விட்டான்.

• சுசித்ரா

• ஜான் ஆண்ட்ரூஸ்

• ஷீலா சாமுவேல்

அப்போலோ மருத்துவமனையில் சிகிச்சைக்காகச் சேர்க்கப்பட்டார் லொரெட்டா. அமெரிக்காவில் வசிக்கும் அவரது பிள்ளைகளுக்குச் செய்தி தெரிவிக்கப்பட்டது. உடனடியாய் சென்னை வந்த அவருடைய ஒரு மகன் ஜான் ஆண்ட்ரூஸ், கோமா நிலையில் இருக்கும் தம் தாய் இனி பிழைக்க வாய்ப்பு இல்லை என்று அறிந்ததும், தமது தாயின் விருப்பம் ஒன்றை நிறைவேற்றி வைக்க முன்வந்தார். ஆம்! அவர், தமது தாயின் உடல் உறுப்புக்களை தானமாக அளிக்கச் சம்மதம் தெரிவித்தார். அவரது கண்கள் மூலம் பார்வையிழந்த இருவர், கண்ணொளி பெற்றனர். நாற்பது வயதுப் பெண்மணி ஒருவருக்குப் பொருத்தப்பட்டிருப்பது லொரெட்டாவின் சிறுநீரகம்தான்!

அண்மையில் சென்னை வந்திருந்தார் ஜான் ஆண்ட்ரூஸ். "என்

**● மூளை மரணம் என்பது பற்றி விளக்கமாகக் கூறுங்களேன்....**

உயிர் பிரிவதால் ஏற்படும் மரணத்துக்குச் சற்று முந்தைய நிலைதான் மூளை மரணம் என்று கூறலாம். வழக்கமாக விபத்தில் சிக்கி, தலையில் பலமாக அடிபட்டவர், கோமா நிலைக்குப் போவார். அவர் கோமா நிலையில் இருந்தாலும், இதயம், நுரையீரல் போன்ற உறுப்புக்கள் தானாகவே இயங்கிக் கொண்டிருக்கும். மருந்து கொடுத்தால் பலன் தெரியும். ஆனால், ஆழ்ந்த கோமா நிலை என்று உண்டு. வென்டிலேடர் என்கிற கருவி மூலமாக இதயத்தை, நுரையீரலை செயற்கையாக இயங்க வைக்கும் கட்டம் இது. வென்டிலேடர் கருவியை எடுத்து விட்டால், 'மரணம் நிச்சயம்' என்கிற சூழ்நிலையைத்தான் மூளை மரணம் என்கிறோம். கால வரையறையின்றி, வென்டிலேடர் வைத்தே காலம் தள்ளுவது சாத்தியமில்லை.

**● ஒருவர் மூளை மரணம் அடைந்து விட்டார் என்பதை எப்படி முடிவு செய்வார்கள்?**

மூளை மரணம் என்ற நிலையே 1968-ல்தான் கண்டுபிடிக்கப்பட்டது. ஹார்வர்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மருத்துவ நிபுணர்கள், மூளையில் பலமான பாதிப்பு ஏற்படுகிறபோது, நோயாளி ஆழ்ந்த கோமா நிலையை அடைகிறார். சுய நினைவுக்கு அவர் வருவது சாத்தியமேயில்லை. அவருடைய இதயம் தொடர்ந்து இயங்கி, ரத்த ஓட்டம் தடையின்றி நிகழ்ந்தாலும் கூட, மருத்துவரீதியாக நோயாளி இறந்து விட்டதாகவே கொள்ள வேண்டும்

தாய் இன்னும் இறக்கவில்லை. அந்த மூவர் மூலமாக இந்த உலகில் தன் வாழ்க்கையைத் தொடர்ந்து கொண்டிருக்கிறார்!'' என்றார்.

பாண்டிச்சேரிக்குச் சென்று கொண்டிருந்தார் உஷா சுதாகர். எதிரில் வந்த வேன் ஒன்று, இவர் சென்ற கார் மீது பலமாக மோதியதால் பயங்கரமான விபத்து. தலையில் அடிபட்ட உஷா, சென்னைக்குக் கொண்டு வரப்பட்டார். எவ்வளவோ முயற்சிகள் செய்தும் பலனில்லை. கோமா நிலையில் இருந்தார்.

உஷா சுதாகரின் பெண் சுசித்ரா, மகன் வருண் இரண்டு பேரும் பள்ளிக்கூடத்தில் படிப்பவர்கள். அம்மாவுக்கு கோர விபத்து ஒருபுறம் என்றால், இவர்களது அப்பா ஏற்கெனவே மரணமடைந்து விட்டார் என்கிற சோகம் மறுபுறம். ''எங்களுக்கு அப்பாவும், அம்மாவுமாக இருந்து எங்களை வளர்த்தார் எங்கள் அம்மா. விபத்தில் அடிபட்டு கோமா நிலையை அடைந்த அவரைப் பார்த்த போது, என் நெஞ்சே நின்று விட்டது. நானும், என் தம்பியும், டாக்டர்களின் ஆலோசனைப்படி எங்கள் சம்மதத்தைத் தெரிவித்தோம். அவரது உடல் உறுப்புகளால், இன்று இரண்டு பேர் வாழ்வு பெற்றிருக்கிறார்கள் என்கிறபோது, எங்களுக்கு, துக்கத்தையும் மீறின ஆத்ம திருப்தி!'' என்கிறார் கண்கள் கலங்கியபடி சுசித்ரா.

ஒரு கிறிஸ்துமஸ் தினத்துக்கு முந்தைய நாள் மாலைப் பொழுது. ஒரு குப்பைத் தொட்டியருகே கண்டெடுக்கப்பட்ட, இரண்டரை வயது மதிக்கத் தக்க குழந்தைக்கு, செண்டிமெண்டலாக உதவும் கரங்கள் வித்யாகர் வைத்த பெயர்: மோசஸ். ஆரம்பம் முதலே உடல்நலக் குறைவுடன் இருந்த மோசஸ், நாளடைவில் இன்னும் மோசமானான். அப்போலோவில் சிகிச்சையளித்தும் பயனில்லை. அந்தக் குழந்தையின் உடல் உறுப்புகள் 'காப்பாளர்' என்ற முறையில் வித்யாகரின் சம்மதத்துடன் தானமாக அளிக்கப்பட்டன. இந்தியாவில் மிகக் குறைந்த வயதில் உடல் உறுப்புகளை தானம் செய்த பெருமை பெற்றிருக்கிறான் மோசஸ்.


• வித்யாகர்

இது போலவே, 'பான்யன்' என்ற மன நோய் பாதிப்புக்குள்ளான, ஆதரவற்ற பெண்களுக்கான அமைப்பால் பராமரிக்கப்பட்டு வந்த பெண் மரணத்தைத் தழுவியபோது, அவரது உடல் உறுப்புக்களும் தானமாகப் பெறப்பட்டன.

சீதாராமனுக்கு வயது அறுபத்தைந்து. தமது பேரனைப் பள்ளிக்கூடத்தில் கொண்டு விடுவதற்கு, இரண்டு சக்கர வாகனத்தில் சென்ற போது, ஒரு சாலை விபத்து. குழந்தை அதிருஷ்டவசமாக, ஒரு சிராய்ப்பு கூட இல்லாமல் தப்பித்துக் கொண்டாலும், தாத்தாவுக்கு, மண்டையில் பலமான அடி. கோமாவில் விழுந்தார். சீதாராமன் குடும்பத்தினர் பெருந்தன்மை காரணமாக, இன்று ஐந்து பேருக்கு மறுவாழ்வு கிடைத்திருக்கிறது.

திருமணமான இரண்டாவது மாதத்திலேயே, விபத்தில் சிக்கி, தலையில் பலத்த காயம் ஏற்பட்டது ராஜுவுக்கு. இளமையிலேயே பெற்றோரை இழந்த எட்டு சகோதர, சகோதரர்களின்

என்று கண்டுபிடித்து, இத்தகைய நிலைக்கு 'மூளை மரணம்' (Brain Death) என்று பெயரிட்டனர். இத்தகைய நோயாளிகளுடைய சிறுநீரகம், இதயம், நுரையீரல், கல்லீரல், கணையம் ஆகியவற்றை எடுத்து, அவை செயலிழந்து விட்ட வேறு நோயாளிகளுக்குப் பயன்படுத்தலாம். இந்திய அரசும், இதைப் புரிந்து கொண்டு, உடல் உறுப்புக்களை தானம் செய்ய சட்டரீதியில் வழி வகுத்துள்ளது. இதன் அடிப்படையில், உடல் உறுப்பு தானத்துக்கான சட்டம் இயற்றிய முதல் இந்திய மாநிலம், தமிழ்நாடு தான்.

ஒருவர் மூளை செயலிழந்து, மூளை மரணம் அடைந்து விட்டார் என்பதை டாக்டர்கள் அடங்கிய குழுதான் முடிவு செய்கிறது. ஆழ்நிலை கோமா நிலையை அடைந்து விட்ட ஒருவருக்கு பலவித பரிசோதனைகளையும் செய்து, அவருக்கு மூளை மரணம் நிகழ்ந்து விட்டதாக முடிவு செய்யப்படும். அதன்பின் ஆறு மணி நேர கண்காணிப்பு நடக்கும். மறுபடி டாக்டர்கள் குழு பரிசோதிக்கும். அதன்பின், குடும்பத்தினர் ஒப்புதல் அளித்தால், உடல் உறுப்புக்கள் தானமாகப் பெறப்படும்.

**● உடல் உறுப்பு தானம் மூலம், சம்பந்தப்பட்டவரின் குடும்பத்துக்குப் பணம் கிடைக்க வழி உண்டா?**

மனித உடல் உறுப்புக்களை தாமாக முன் வந்து, தானமாகத்தர வேண்டுமே தவிர, விற்பனை செய்யக் கூடாது. இதற்கு சட்டமே இருக்கிறது. மீறினால் ஐந்து வருடம் வரை ஜெயில் தண்டனை



• குமார்

ஒருவர் ராஜு. ஆஸ்பத்திரியில் நம்பிக்கையிழந்த நிலையில், ராஜுவின் மனைவி மற்றும் அண்ணன் குமாரிடம் உடல் உறுப்பு தானம் பற்றி டாக்டர் கேட்டபோது, குடும்பத்தில் அனைவரிடமும் இதுபற்றி கருத்து கேட்டறிந்தால், ஆதரவு கிடைக்காது என்று, இவர்கள் மட்டுமே முடிவெடுத்து, சம்மதம் தெரிவித்தனர். ''எங்கள் சக்திக்கு மீறி முப்பத்தி ஐயாயிரம் ரூபாய் வரை செலவழித்து வைத்தியம் பார்த்தோம். பிழைக்க வைக்க முடியாத சூழ்நிலையில், அவரது உடல் உறுப்புகள், வாழ்க்கைக்குப் போராடிக் கொண்டிருக்கும் மற்ற சிலருக்குப் பயன்படட்டும் என்றுதான், சம்மதம் தெரிவித்தோம்'' என்கிறார் ராஜுவின் மனைவி.

**சா**முவேல் தம்பதிகளின் மகன் ஸ்டீபனுக்கு மோட்டார் பந்தயம் என்றால் அப்படி ஒரு வெறி. பல போட்டிகளில் கலந்து கொண்டிருக்கிறான். வெளிநாடுகளுக்குப் போய், பந்தயங்களில் பங்கேற்க வேண்டும் என்பது அவனது லட்சியம். ஆனால், அவனுக்கு எமன் சாலை விபத்து உருவில் வந்தான். இனி 'நோ சான்ஸ்' என்ற நிலையில், அவனுடைய உறுப்புகள் தானம் பெறப்பட்டன. இதில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவெனில், இதனால் ரொம்ப அப்செட் ஆகிவிடுவார் என்பதற்காக இது பற்றி தம் மனைவியிடம் எதுவும் தெரிவிக்க வேண்டாம் என்று கூறி விட்டாராம் சாமுவேல். ஆனால் பின்னர், விஷயம் தெரிவிக்கப்பட்ட போது, அதன் மேன்மையை உணர்ந்து, அந்த முடிவுக்காக, சந்தோஷப் பட்டாராம் வீலா சாமுவேல்.

**அ**ண்மையில், உடல் உறுப்புகள் தானம் அளித்தவர்களின் குடும்பத்தினருக்கு நன்றி தெரிவிக்கும்விதமாய் சென்னையில் ஒரு விழா ஏற்பாடு செய்யப்பட்டது. அனைவரும் தெரிவித்த ஒரு செய்தி : ''இறந்து போனவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து விட்டார்கள் என்பது உண்மைதான்! ஆனால், அவர்கள் இந்த உலகில் இன்னமும் சிரஞ்சீவிகளாய் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள்.''

— எஸ். சந்திரமௌலி

படங்கள் : ஸ்ரீஹரி

கிடைக்கும்.

• **உடலிலிருந்து எடுக்கப்பட்ட உறுப்புக்கள் எவ்வளவு நேரத்துக்குள் மீண்டும் இன்னொருவருக்குப் பொருத்தப் பட வேண்டும்?**

இரசாயன திரவத்தில் வைத்து பாதுகாக்கப்படும் உடல் உறுப்புக்களுள், இதயமும் நுரையீரலும் எடுக்கப்பட்ட நாலு மணி நேரத்துக்குள் பொருத்தப்பட வேண்டும். கல்லீரலை பன்னிரண்டு மணி நேரத்துக்குள் பயன்படுத்தி விட வேண்டும். கணையத்துக்கு கெடு இருபத்தி நாலு மணி நேரம். சிறுநீரகத்துக்கு நாற்பத்து எட்டு மணி நேரம்.

• **ஆனாலும் டாக்டர்கள் நோயாளியைப் பிழைக்க வைக்க இன்னும் தீவிரமாய், முயற்சி செய்திருக்கலாமோ! வேறு யாருக்கோ உதவும் சுயநோக்கத்துடன் மூளை மரணம் பற்றி முடிவெடுத்து விட்டார்களோ என்று சம்பந்தப்பட்ட குடும்பத்தினர் சந்தேகப் படலாமில்லையா?**

சந்தேகப்படலாம். ஆனால், அந்த சுய நோக்கில், டாக்டர்கள் செயல்படுவதாக உண்மையாகவே நம்பினால், தானம் தர மறுத்து விடலாமே! உங்களை மீறி டாக்டர்கள் எதுவும் செய்ய முடியாதே!

• **ஒருவரிடமிருந்து எடுத்து பொருத்தப்பட்ட உறுப்புக்களை, பின்னர், அவரிடமிருந்து எடுத்து, இன்னொருவருக்குப் பொருத்துவது முடியுமா?**

தாராளமாக முடியும். இத்தாலியில் ஒரு தொடர் இதய மாற்று ஆபரேஷன் நடந்துள்ளது. ஒரு பெண்மணியிடமிருந்து, இன்னொரு பெண்மணிக்கும், அவரது மரணத்துக்குப் பின் வேறு ஒரு ஆணுக்கும் ஒரே இதயம் பொருத்தப்பட்டது.

-இப்படிச் சொல்லும் சுமனா, டாக்டருக்குப் படித்துவிட்டுப் பணிபுரிந்தபோது, உறுப்புகள் மாற்று அறுவைச் சிகிச்சையின் தேவையை உணர்ந்தார். அதன் காரணமாகவே, டாக்டர் பணியை விட்டுவிட்டு, உறுப்புகள் தானம் பற்றிய விழிப்புணர்வை மக்களிடம் ஏற்படுத்துகிற பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

— மௌலி

அட்டை மற்றும் வண்ணப்படங்கள்: ஸ்ரீஹரி

**சிமெண்ட் விவகாரத்தில், சிமெண்ட் தயாரிப்பாளர்கள் சார்பில் என்ன விளக்கம் தரப்படுகிறது? 'இந்தியா சிமெண்ட்ஸி'ன் மானேஜிங் டைரக்டர் என். சீனிவாசன் கூறுகிறார்...**

# "விவரம் தெரியாமல் அரசியல் ஆக்குகிறார்கள்!"



• என். சீனிவாசன்

"ஆளும் அரசியல்வாதிகளுடன் தொடர்பு இருப்பதால்தான், தமிழக சிமெண்ட் உற்பத்தியாளர்கள் சில்லறை சிமெண்ட் விலையை ஏகத்துக்கு ஏற்றி விட்டு கொள்ளை லாபம் அடிக்கிறார்கள் என்பது எந்தவித அடிப்படையும் இல்லாத குற்றச்சாட்டு ஆகும். சரியாக விவரம் தெரியாத (அல்லது தெரிந்தும் வேண்டுமென்றே) சில அரசியல்வாதிகளால், பிரச்னை ஊதப் பட்டு பெரிதாக்கப்படுகிறது. கடந்த பல வருடங்களாக நிகழ்ந்து வரும் சிமெண்ட் உற்பத்தி மற்றும் விற்பனையைப் பற்றி ஏதும் அறிந்து கொள்ளாமல் ஏனோ தானோவென்று அரசியல் சாயம் பூசுகிறார்கள்.

"சுதந்தரக் காற்றை சுவாசிக்கும் தொழில்களில் சிமெண்ட் உற்பத்தியும் ஒன்று. இதற்கான பிள்ளையார் சுழி இந்திரா காந்தி காலத்திலேயே போடப்பட்டது. பின்னர் ராஜீவ் காந்தி காலத்தில் வெளிநாட்டு இந்தியர்களும் சிமெண்ட் கம்பெனிகளில் முதலீடு செய்ய அனுமதிக்கப் பட்டனர். உற்பத்தி மற்றும் விற்பனையில் இருந்த கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு, தாராளமயமாக்கப்பட்டது. இதன் விளைவு என்னவென்றால் நாடு முழுவதும் புதிய சிமெண்ட் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டன. சுதந்தரம் பெற்று 40, 45 வருடங்களுக்குப் பிறகு சிமெண்ட் உற்பத்தியில் இந்தியா

தன்னிறைவு பெற்றது. சிமெண்ட் சந்தைப் பொருளாதாரத்தில் அரசின் தலையீடு எதுவும் இல்லாவிட்டாலும், வாரம் ஒரு முறை நாட்டின் பல பகுதிகளில் விற்கும் சிமெண்ட் சில்லறை விலை பற்றிய விவரங்களை மத்திய தொழில் துறை அமைச்சகத்துக்கு உற்பத்தியாளர் சங்கம் அனுப்பிக் கொண்டே இருக்கிறது. தமிழ்நாட்டில் தனியாக சிமெண்ட் உற்பத்தியாளர் சங்கமோ அல்லது 'குழுவோ' கிடையாது.

"De control செய்யப்பட்ட பொருளாதலால், சிமெண்ட் விற்கப்படும் விலைக்கும் அரசுக்கும் எந்த தொடர்பும் கிடையாது. மார்க்கெட்டில் நிலைத்து நிற்க தரம் முக்கியம். வியாபாரப் போட்டி காரணமாக விலைகள் ஏறுமாறாக இருப்பதற்கான வாய்ப்பு அதிகம். மூட்டை 140க்கும் சிமெண்ட் உண்டு. மூட்டை 175க்கும் சிமெண்ட் உண்டு. சில கம்பெனிகள் 120க்கும் 130க்கும் கூட மார்க்கெட்டில் விற்கின்றன. தரம் மற்றும் மக்களின் வாங்கும் சக்தியைப் பொறுத்ததுதான் சிமெண்ட் விற்பனை. எங்கள் குழும தயாரிப்புகள் கூட மூட்டை 140க்கும் விற்கிறோம். ஆனால் கடந்த இரு வருடங்களாக எங்கள் விலைகள் அப்படியேதான் இருக்கின்றன. குறிப்பிடத்தக்க அம்சம் என்னவென்றால், நாங்கள் அதிக விலை விற்கும் சிமெண்ட்தான் அதிகமாக விற்கிறது.

## சிமெண்ட் விலையேற்றம்:

# இவர்கள் என்ன சொல்கிறார்கள்?

**பீட்டர் அல்போன்ஸ்: (தமிழ்மாநில காங்கிரஸ்):**


• பீட்டர் அல்போன்ஸ்

ஆந்திராவில் விற்பது போன்றே தமிழகத்திலும் சில்லறை விற்பனையில் மலிவான விலையில் சிமெண்ட் விற்க முடியும் என்பதை காட்டுவதற்காகதான், ஸிம்பாலிக்காக ஒரு நாள் சிமெண்ட் விற்கப் போகிறோம். சமீப காலங்களில், ஏற்றப்பட்டு வந்த விலை காரணமாக நான்கு தனிப்பட்ட முதலாளிகளுக்கு கோடிக்கணக்கில் லாபம் கிடைத்திருக்கிறது. எந்த தனிப்பட்ட நபரையும் நான் குற்றம் சாட்ட விரும்பவில்லை. தனியார் கம்பெனிகளில் பெரும் பான்மை பங்கிருப்பவர்கள் தங்கள் மனச்சாட்சியைத் தட்டிப் பார்த்துக் கொள்ளட்டும்.

'சிமெண்ட் விலைக்கும் எங்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை' என்று முதல்வர் சொல்லக் கூடாது. இப்போது மத்திய மாநில அரசுகள் இரண்டும் முதல்வர் கையில்தான். நிதிக் கம்பெனிகள் மக்களை ஏமாற்றிய போது 'நாங்கள் என்ன செய்ய முடியும்?' என்றார் முதல்வர். அப்புறம் சட்டம் கொண்டு வந்து தனி நீதிமன்றம் போடவில்லையா? எனவே மக்களுக்கு பாதிப்பு வரும்போது அரசு தலையிட்டே ஆகவேண்டும்.

"வீடுகள் கட்டும் தனி நபர்களுக்கு மலிவான விலையிலும், திறந்த மார்க்கெட்டில் ஒரு விலையிலும் விற்க ஏற்பாடு செய்யலாம். இந்த ரீதியில் முயற்சி செய்வதை விட்டுவிட்டு, சிமெண்ட் உற்பத்தியாளர்களின் வாதங்களைத் தமது நீண்ட அறிக்கையில் முதல்வர் தெரிவித்திருப்பதுதான் வருத்தமாக இருக்கிறது.

**ஆர். ராதாகிருஷ்ணன் (பில்டர்ஸ் அசோஸியேஷன்):**


• ஆர். ராதா கிருஷ்ணன்

நாங்கள் மொத்தமாக சிமெண்ட் வாங்குவதால் மூட்டைக்கு 130 ரூபாய்தான் விலை தருகிறோம். அப்படியிருக்க மக்களிடம் 160, 170 ரூபாய் விலையில் விற்றால் எப்படி சரியாகும்? அதிகபட்சம் 140,- 150 ரூபாய்க்கு விற்கலாம். ஏழை, எளிய மக்கள் நல்வாழ்வில் அக்கறை கொண்ட முதல்வர் நிச்சயம் ஏதாவது செய்தே ஆக வேண்டும் என்று பொதுமக்கள் எதிர்பார்க்கிறார்கள்.

**குலசேகரன் (கட்டடத் தொழிலாளர் சங்கத் தலைவர்):**


• குலசேகரன்

கிராமங்களில் விவசாய வேலைக்கு அடுத்தபடியாக வேலை வாய்ப்பு கொடுப்பது கட்டடத் தொழில்தான். ஆனால் சிமெண்ட் விலை உயர்ந்த காரணத்தால் கட்டடப் பணிகள் நிறுத்தப்பட்டு விட்டன. இன்னமும் சொல்லப் போனால், கம்பி விலை குறைந்தும் கட்டடப் பணிகள் சுறுசுறுப்படையவில்லை. காரணம் சிமெண்ட் விலையேற்றம்தான். கட்டடத் தொழிலாளர்களின் வேலை வாய்ப்பை அன்றாடம் கவனித்து வருபவன் என்ற முறையில் இதுதான் யதார்த்த நிலை என்று உறுதியாகக் கூற முடியும்! சிமெண்ட் விலையேற்றத்தினால் சுருட்டப்பட்ட கோடிக்கணக்கான ரூபாய் எங்கே போனது என்று விசாரிக்க கமிஷன் போட வேண்டும்.

போன வருடம் 15 சதம் விற்பனை அதிகம்.

"இந்திய சிமெண்ட் உற்பத்தியில், இந்தியா சிமெண்ட்ஸ் குழுமத்தின் பங்களிப்பு 9 சதவீதம்தான். தென்னிந்திய அளவில் பார்த்தால் 27 சதவீதம்தான். எனவே நாங்கள் ஏகபோகமாக இருக்கிறோம்; ஆளும் அரசியல்வாதிகள் உதவியோடு விலையை நிர்ணயிக்கிறோம் என்பதெல்லாம் மேடையில் வேண்டுமானால் பேசலாம். உண்மைக்குச் சற்றும் பொருத்தமில்லாத பேச்சுக்கள்.

"சந்தைப் பொருளாதாரம் ஆதலால் வருடத்தின் சில மாதங்களில் விலை ஏறுமுகமாகவும் சில மாதங்களில் இறங்கு முகமாகவும் இருக்கிறது. குறிப்பாக மூன்று, நான்கு மாத மழைக் காலத்தில் விலை குறையும். ஏனென்றால் அப்போது கட்டடப் பணிகள் நடப்பது மிகவும் குறைவு (இப்போதும் குறைந்திருப்பதற்கு அதுதான் காரணம்). சென்னையில், கடந்த மார்ச், ஏப்ரல் மாதங்களில் மூட்டை 120க்கும், 1[illegible]க்கும் விற்றதே! இப்போது 'விலை ஏறிவிட்டது' என்று கூக்குரலிடும் அரசியல்வாதிகள் 1997ல் எங்கு போயிருந்தார்கள்? அப்போதும் மூட்டை 170க்கும் அதற்குச் சற்று அதிகமாகவும் விற்றதே! இவர்கள் சொல்வது போல் கேரளாவில் விலை குறைவு கிடையாது. இந்த அரசியல்வாதிகள் சொல்லும் குஜராத் சிமெண்ட், மும்பையில் 170 ரூபாய்க்குத்தான் விற்கிறது. பல மாநிலங்களை ஒப்பு நோக்கும்போது, கடந்த சில வருடங்களாக, ஆந்திராவில் விலை குறைவாகத்தான் இருக்கிறது.

"இதற்குக் காரணம் நவீனமயமாக்கப்பட்ட ஆலைகள், அதிக செலவில்லாமல் குவாரியின் மேற்புறத்திலேயே கிடைக்கும் சுண்ணாம்புக் கற்கள். விற்பனை வரி வித்தியாசம், தவிர அதிகமான உற்பத்தி. தமிழகத்தை விட உற்பத்தி அங்கு இரண்டு மடங்கு அதிகம். நான் மற்றொன்றையும் கேட்க விரும்புகிறேன். "தாராளமயமாக்குதல்' மூலம் கிடைத்த சுதந்தரக் காற்றை நாங்கள் சுவாசிக்கும் அதே தருணத்தில், குறைவான விலைக்கு சிமெண்ட் விற்கும் காலங்களில் நஷ்டம் ஏற்படுகிறதே... அதையும் தாங்கிக் கொள்வது நாங்கள்தானே! இப்போது குற்றச் சாட்டுக்களை தூக்கிப் போடும் அரசியல்வாதிகளா அந்த நேரத்தில் எங்கள் உதவிக்கு வருகிறார்கள்?

"ஒரு மாதத்துக்கு தமிழகத்தில் ஆறு முதல் ஏழு லட்சம் டன் வரை சிமெண்ட் விற்கிறது. அதில் இந்தியா சிமெண்ட்ஸ் குழுமத்தின் பங்களிப்பு மூன்றில் ஒரு பகுதிதான். இந்தியா சிமெண்ட்ஸ் நிறுவனத்துக்கென்று ஏதும் தனியான சலுகைகள் கிடையாது. தமிழகத்தில் உள்ள மற்ற தயாரிப்பாளர்களுக்கு, குவாரியில் எடுக்கப்படும் கற்களுக்கு என்ன ராயல்டி விதிக்கப்படுகிறதோ அதேதான் எங்களுக்கும். எல்லோருக்கும் உள்ள அதே மின் கட்டணம்தான்.

அரசு சார்பில் தயாரிக்கப்படும் சிமெண்ட் மற்ற தனியார் நிறுவனங்களுடையதைவிட குறைவாக விற்கப்படலாம்; அந்த ஆலைகள் லாபம் கூட சம்பாதிக்கலாம். ஆனால் தனியார்களைப் போன்று அந்த அரசு ஆலைகள் யாரிடமும் கடன் வாங்க வேண்டியதில்லை; மாதந்தோறும் கோடிக் கணக்கில் வட்டி கட்டவும் வேண்டியதில்லை.

"இங்கு விலை அதிகமாக இருக்கிறது என்றால் வெளி மாநிலங்களிலிருந்து கொண்டு வந்து விற்கலாம். 'செக்போஸ்டில் தடுக்கிறார்கள்' என்றெல்லாம் பொய் சொல்கிறார்கள். இது கடைந்தெடுத்த அரசியல்.

"33, 43, 53 என்று தரவாரியாக சிமெண்ட் ரகங்கள் உண்டு. இந்திய தர நிர்ணயக் கழகம் அவ்வப்போது எங்களுக்குத் தெரியாமலேயே எங்கள் தயாரிப்பின் தரத்தைப் பரிசோதித்து வருகிறது. அது நிர்ணயிக்கும் தரத்தை விட எங்கள் தரம் உயர்ந்ததாகவே இருக்கிறது சிமெண்டின் தரம் என்பது குறிப்பிட்ட நாட்களுக்கு பிறகு அழுத்தத்தைத் தாங்கும் சக்தியைக் கொண்டுதான் நிர்ணயிக்கப்படுகிறது. இதில் யாரும், யாரையும் ஏமாற்ற முடியாது.

"இந்தியா சிமெண்ட்ஸ் நிறுவனம் கடந்த 50 வருடங்களாக மக்கள் நம்பிக்கையைப் பெற்று வளர்ந்து வரும் நிறுவனம். அதன் முன்னேற்றத்திற்குப் பின்னால் கடுமையான உழைப்பு இருக்கிறது. பங்கு மார்க்கெட்டில் எங்களுடைய ஷேர்களை யார் வேண்டுமானாலும் வாங்கலாம். யாருக்கெல்லாம் பங்கிருக்கிறது, எவ்வளவு இருக்கிறது என்பதையெல்லாம் சம்பந்தப்பட்ட அலுவலகத்தில் விசாரித்தால் தெரிந்து கொள்ளலாம். அதையெல்லாம் தெரிந்து கொள்ளாமல், மனம் போன போக்கில் 'ஏதோ தொடர்பு இருக்கிறது' என்றெல்லாம் சில அரசியல்வாதிகள் பேசி வருவது, அவர்களது அரசியலுக்கு வேண்டுமானால் பொருந்தி வரலாம்; ஆனால் உண்மை நிலைக்கு மாறானது. தமிழ் நாட்டில் சிமெண்ட்டில் தமிழர்களான நாங்கள் market leader ஆக இருக்கிறோம். அதற்காக பெருமைப்படாமல் சேற்றை வாரி வீசுவது தான் வேதனையாக இருக்கிறது!"

சந்திப்பு: ப்ரியன்

படங்கள்: சௌந்தர்ராஜன்

# தண்கதிர் தெய்வத் திங்களூர்

ஆனந்தி



• நாவுக்கரசர்



• அப்பூதியடிகள், அவர் மனைவி, பெரிய திருநாவுக்கரசு, சிறிய திருநாவுக்கரசு.



• முன்வாயில் கோபுரம் இல்லை

திங்களூர் என்று ஒரு ஊர் காவிரி பாயும் சோழவள நாட்டில் இருக்கிற தென்று பள்ளிக்கூடம் படிக்கும் நாளி லேயே கேள்விப்பட்டிருந்தேன்.

எங்கள் வகுப்புக்கு, அப்பூதியடிகள் கதை பெரிய புராணத்திலிருந்து தமிழ்ப் பாடப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருந்தது. எங்கள் தமிழ் வாத்தியார் வ.கை.கே. சர்மா அவர்கள் அப்பூதியடிகள் கதையைப் படிக்கும்போது கண்ணீர் விடுவார். காலட்சேபம் போலப் பாடம் சொல்லுவார். சிறு பெண்ணான எனக்கு அந்தக் கதை என்னமோ போலிருக் கும்.

திங்களூரில் அப்பூதியடிகள் என்ற அந்தணர் தண்ணீர்ப் பந்தல் கைங்கரியம் செய்து வந்தார். சிவநேசச் செல்வரான அவ ருக்கு ஏகலைவனைப் போல் திருநாவுக் கரசரிடம் அளவற்ற பக்தி. தான் அந்தணர் என்ற அகங்காரம் இல்லாமல் நாவுக்கர சரையே குருவாக நினைத்திருந்தார். ஆனால் அவரைப் பார்த்ததில்லை.

தன் மகன்களைக் கூட பெரிய திருநாவுக்கரசு, சிறிய திரு நாவுக்கரசு என்று கூப்பிடுவாராம். 'திரு நாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல்' என்று தமது கைங்கரியத்துக்குப் பெயர் வைத்திருந்தார். திங்களூர் திருப்பழனத்துக்கு அருகாமையில் இருக்கிறது. அப்பர் பெருமான் திருத்தல யாத்திரை செய்து கொண்டு வந்தபோது திருப்பழனத்துக்கு வந்தார். சிவபெரு

தெய்வ தரிசனம் - 2



• திங்களூர்

மாளைச் சேவித்தார். அடுத்துள்ள திங்களூருக்கு வந்தார்.

"நாவினுக்கு
வேந்தர்தாம்
மேவினார்
செப்பருஞ்சீர்
அப்பூதிய
டிகளூர்
திங்களூர்."
(பெரிய புராணம்)

அங்கே நாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல் என்ற பெயர்களைப் பார்த்தார். அப்பருக்கு ஆச்சரியம். அப்பூதி அடிகள் தண்ணீர்ப் பந்தல் வைத்திருப்பவர் என்று தெரிந்ததும், "உங்கள் பெயரால் விளங்காமல் வேறொரு பெயரால் அழைப்பது என்ன காரணம்?" என்று கேட்டார். அப்பூதி அடிகளுக்குக் கோபம் வந்து விட்டது. "சிவபக்தியில் திளைத்த சிவத்தொண்டரான திருநாவுக்கரசர் பெயரை வேறொரு பெயர் என்றீரே? உமக்கு ஒன்றுமே தெரியாதா? சிவ வேடம் அணிந்திருக்கிறீரே?" என்றார்.

"அந்தப் பெயருக்கு உரிய சிறியேன் நான்தான்" என்று நாவுக்கரசர் சொன்னபோது, அப்பூதியடிகளுக்கு எப்படியிருந்திருக்கும்? தம் வீட்டில் விருந்துண்ண அழைத்தார். அவருடைய இல்லத்தரசியும் ஆர்வத்துடன் விருந்து சமைத்தார். பெரிய மகனை வாழைக் குருத்து கொண்டு வர அனுப்பிய



• கணபதி அக்ரஹாரம் - குழந்தை போல் தோற்றம்



• சந்திரன் சந்நிதி

போது அவனைப் பாம்பு கடித்து விட்டது. குழந்தையும் அதைப் பொருட்படுத்தாமல் இலையை எடுத்துக் கொண்டு ஓடி வந்து தாயாரிடம் கொடுத்து விட்டு மயங்கி விழுந் தான். அப்பூதியடிகள் பார்த்துவிட்டு மகன் இறந்து விட்டான் என்று தெரிந்து கொண் டார். குழந்தையின் உடலைப் பாயில் சுற்றி வைத்து விட்டு நாவுக்கரசரை உபசரித் தார்கள். உணவு பரிமாறியதும் அப்பர், "மகனைக் கூப்பிடுங்கள்" என்று சொல்ல, "அவன் இப்போது உதவான்" என்று கலக்க மில்லாமல் சொன்னார் அப்பூதியடிகள். அப்பருக்குத் தெரியாதா? விஷயத்தைப் புரிந்து கொண்டார். குழந்தையை எடுத்துக் கொண்டு கோவிலுக்குப் போனார்கள். கோவில் வாசலில் கிடத்திவிட்டு அப்பர் பெருமான்,

"ஒன்றுகொலாம்" என்று தொடங்கி பத்துப் பதிகங்கள் பாடினார். குழந்தை கண் விழித்து எழுந்தான். நஞ்சுண்ட கண்டனான சிவபெருமானுக்கு விடம் தீர்ப்பது கஷ்டமா என்ன?

அப்பூதியடிகளின் பக்திப் பெருக்கைப் புரிந்து கொள்ள முடியாத வயதில் இந்தக் கதை எனக்குப் பிடிக்காமல் இருந்தது. "இறந்து போன குழந்தையை ஒளித்து வைத்து விட்டு, அப்பாவும் அம்மாவும் விருந் தாளியை உபசரித்தார்களாமே. இப்படிக் கூட கல் நெஞ்சம் உண்டா?" என்று நான் சர்மா சாரிடம் வாதிட்டிருக்கிறேன்.

"அவருடைய குரு பக்தியை நீ புரிஞ்சுக் கணும். மகான் வந்திருக்கார். சுண்ணாம்புக் காளவாயிலே அவரைப் போட்டபோது, "மாசில் வீணையும் மாலை மதியமும் வீசு தென்றலும் வீங்கிளவேனிலும் மூசு வண் டறை பொய்கையும் போன்றதே ஈசன் எந்தை இணையடி நிழலே"ன்னு பாடினவர். கல் தூணிலே கட்டி கடலில் போட்டபோது, அந்தத் தூணே மிதந்தது. அப்படிப்பட்டவர் வந்திருக்கிறபோது, தன்னுடைய கஷ்டத் தையா காமிச்சுக்கறது. அவருக்கு அந்தத் தைரியம் குருபக்தியினாலே வந்தது" என்று சர்மா சார் கொஞ்சம் கோபமாக, அதாவது நான் விதண்டாவாதம் பேசுகிறேனே என்ற கோபத்துடன் படபடவென்று பேசியது இன்னும் நினைவிருக்கிறது.

இப்படிக் கூட ஒரு பக்தி. ஈசுவர பக் தியை விஞ்சிய அடியார் பக்தி. சிவத் தொண்டர் என்றவுடனே உள்ளம் உருகும் பக்தி. இந்தப் பக்தி பரவசத்துக்குக் காரணம் சொல்ல முடியாது. அதை விளக்க முடியாது. தலைவணங்கிப் போற்றத்தான் வேண்டும். சிவமே கண்டிருப்பார் சித்தியார்.

இந்த மாதிரி ஒரு அற்புதத்தை அப்பர் பெருமான் நிகழ்த்திய ஊரில் உள்ள கோவில் சிறிய கோவில்தான். கோவில் வாசலிலேயே இந்தப் பதிகங்களைப் பாடிய போதிலும் திங்களூர் வைப்புத் தலம்தான். அதாவது திங்களூர் கோவிலில் குடிகொண் டுள்ள ஈசுவரனைப் பற்றி அப்பர் பெருமான் பாடவில்லை. வேறு பதிகளைக் குறிப்பிடும் போது திங்களூரைச் சேர்த்துச் சொல்லி யிருக்கிறார்.

இதனால் சுவாமி அம்பிகையின் பெயர் கள் ஊர்ஜிதமாகவில்லை. விடம் தீர்த்தபடி யால் பரமேசுவரன் என்று பெயர் என்பதாக ஒரு புத்தகத்தில் பார்த்தேன். ஸ்ரீ சிவ பாத சுந்தரம் எழுதியுள்ள, "சேக்கிழார் அடிச்சுவட்டில்" என்ற புத்தகத்தில் சுவாமி பெயர் கைலாசநாதர் என்று எழுதியிருக் கிறார். அம்பிகையின் பெயர் பூங்கோதை.

1978-இல் ஸ்ரீ சிவபாத சுந்தரம்




கருத்து: வெ. ராஜாராமன்

கோவிலைப் பற்றி எழுதியிருப்பதிலிருந்து, அப்போது திங்களூர் யாரும் அறியாமல் அமாவாசை நிலா போல இருந்திருப்பது தெரிகிறது. பகல் பனிரெண்டு மணிக்கு கைலாச குருக்கள் வந்து விளக்கேற்றி பூஜை பண்ணினாராம்!

இப்போது மினி பஸ்களில் சுற்றுலா பயணிகளைப் போல அன்பர்கள் வந்து பக்தியுடன் வழிபடுகிறார்கள். நான் திங்களூர் போன அன்று கோவிலில் அடியார் கூட்டம். திருவிழா மாதிரியிருந்தது.

கழனிகளும் நெல்வயல்களும் சூழ்ந்து பச்சைப் பசேலென்று காட்சி தருகிறது திங்களூர். கோவிலுக்கு அருகில் வீடுகளைக் காணோம். தனியாகத்தான் இருக்கிறது. முதலில் ஏதோ மடத்துக்கு வந்து விட்டோம் என்று நினைத்தேன். கோபுர வாசல் காணப்படவில்லை. உள்ளே கருவறை விமானங்கள் பளிச்சென்று தெரிந்தன. சிற்ப சித்திர வேலைப்பாடுகளைக் காணவில்லை. சமீபத்தில் கட்டிய கோவில் போலத்தான் காட்சியளித்தது.

நுழைவாயில் புகுந்து உள்ளே போகலாம். கணபதி காட்சி தருகிறார். பிராகாரத்தில் சின்னச் சின்னக் கோவில்களில் நவக்ரஹ நாயகர்கள். நந்தியாவட்டைச் செடிகளை வளர்த்திருக்கிறார்கள். பிராகாரத்தைச் சுற்றி வரும் போது அருகில் உள்ள செடியிலிருந்து ஒரு பூப் பறித்து பக்கத்தில் இருக்கும் கிரஹ தேவதைக்குச் சாத்துகிறோம். "சந்த்ரம் பஜ மானஸ" என்று பாடிக் கொண்டே வந்தால் விசேஷ அலங்காரங்களுடன் வெண்ணிற ஆடையும், மல்லிகைப் பூ மாலைகளும் அணியப் பெற்று உச்சியில் கூம்பிய தாமரையுடன் காட்சி தருகிறார் சந்திர பகவான். சந்திரனைக் கண்ட தாமரை இதழ் மூடித்தானே இருக்கும்! மனம் குளிர தரிசிக்கிறோம்.

சந்திரனுக்கு வேதகாலத்தில் ஸோமன் என்று பெயர். தூய வெண்ணிற ஆடை அணிந்தவன். ஆத்ரேய கோத்திரத்தில் வந்தவன். குமுத மலர் மீது பிரியமுடையவன். முத்து மாலைகள் அணிந்தவன்.

தக்ஷப்ரஜாபதிக்கு 27 பெண்கள். எல்லோரையும் சந்திரனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்து விட்டார். சந்திரன் மற்ற பெண்களை அலட்சியம் செய்து ரோகிணியிடம் மட்டும் பிரியமாக இருந்தான். இதை அறிந்த தக்ஷன், "நீ தேய்ந்து போ" என்று சபிக்க, சந்திரன் சிவபெருமானைச் சரணடைந்து அவருடைய சடையில் அடைக்கலமானான். ("ரோஹிணீ ப்ரியகரம்" என்று முத்துஸ்வாமி தீக்ஷிதர் கூடப் பாடியிருக்கிறாரே!)

சந்திரன் அழகன். பத்துச் சக்கரங்களுடைய தேரில் உலகைச் சுற்றி வருபவன். பயிர்கள் நிலவொளியில் வளரும் என்று நம்புகிறார்கள். மூலிகைகளுக்கு சக்தி தருபவன். அதனால் சந்திரனுக்கு ஔஷதீசன் என்று பெயர் உண்டு.

திருப்பாற்கடலில் மகாலக்ஷ்மியுடனும், அமுதத்துடனும் பிறந்தவன் சந்திரன். திருப்பாற்கடலைக் கடையும்போது உஷ்ணத்தில் தேவ, அசுரர்கள் மீது அவன் குளிர் கிரணங்கள் படவும், அவர்கள் புத்துணர்ச்சி அடைந்தார்களாம். குமுதமித்ரன், கதாகரன் என்றெல்லாம் சந்திரனை அழைப்பார்கள். அலைகடலில் அலைகள் எழவும் விழவும் சந்திரனுடைய ஆகர்ஷண சக்தி காரணமாக இருக்கிறது.

சிவபெருமானுக்கு உகந்த நாள் திங்கட்கிழமை. சோமவார விரதம் எடுத்துக் கொள்ளும் பெண்கள் ஓராண்டு காலம் திங்கட்கிழமைகளில் மாலையில் அம்பிகையுடன் கூடிய பரமேசுவரனைப் பூஜித்த பிறகு அர்க்கியம் கொடுத்து விட்டு உணவு அருந்தினால் சகல சௌபாக்கியங்களையும் அடைவார்கள். உமா மகேச்வரன் தீர்க்க ஸௌமங்கல்யத்தை அளிப்பார் என்பது நம்பிக்கை. அதுவும் அமாவாசையில் வரும்

## கச்சேரியை ரசித்தால் தலைக்கு ஆபத்து!

லக்னோவை ஆண்ட வாஜித் அலி ஷா என்கிற நவாப் கலா ரசிகர். புகழ் பெற்ற பல கலைஞர்களுடைய கச்சேரிகளை தமது அரசவையில் நடத்தியவர். ஒரே ஒரு தலை சிறந்த வித்வான் மட்டும் நவாபின் அழைப்பை ஏற்று, அரசவைக்கு வர ஒப்புக் கொள்ளாமலேயே இருந்து வந்தார். கடைசியில், ஒரு விசித்திரமான கண்டிஷனுடன், கச்சேரிக்கு வர ஒப்புக் கொண்டார். தமது கச்சேரியின்போது, யாராவது தம்மையும் மறந்து, தலையை ஆட்டி, ரசித்து விட்டால், அவரது தலையை வெட்டி விட வேண்டும் என்பதுதான் அந்தக் கண்டிஷன்.



இதை தண்டோரா மூலம் மக்களுக்கு அறிவித்தார் நவாப். கச்சேரியைக் கேட்க மிகச் சிலரே வந்திருந்தனர். கச்சேரி ஆரம்பமானது. மிக அற்புதமான கச்சேரி என்பதால் அனைவரும், நவாப் உட்பட, தம்மை மறந்து தலையை ஆட்டி ரசித்து விட்டனர். கச்சேரி முடிந்தபோது, ஒரு விதமான அழுத்தமான அமைதி நிலவியது. ''அனைவரது தலையையும் எடுத்து விடலாம்'' என்றார் நவாப். அப்போது, வித்வான், ''தலையை எடுக்க வேண்டிய அவசியமில்லை. சிறந்த ரசிகர்கள் மட்டுமே என் கச்சேரிக்கு வர வேண்டும் என்பது என் நோக்கம். அதற்குத்தான் அப்படி ஒரு விசித்திரமான கண்டிஷன் போட்டேன். தலை போய் விடும் என்று தெரிந்திருந்தும், தம்மை மறந்து, தலையை ஆட்டி ரசித்தவர்கள் உண்மையான ரசிகர்கள். அவர்களை கௌரவிப்பதுதான் சரியே தவிர, தண்டனை தரக்கூடாது!'' என்றார்.

— புகைப் படக் கலைஞர் யோகாவின் மகன் அருண் ராகேஷ் மிருதங்க அரங்கேற்றத்தின்போது இறையன்பு ஐ.ஏ.எஸ். வாழ்த்துரையிலிருந்து : மௌலி

திங்கட்கிழமை ரொம்ப முக்கியமானது. அன்று சோமவார விரதமிருப்பவர்களுக்கு எல்லா மனோரதங்களும் நிறைவேறும்.

சந்திரனுடைய தானியம் பச்சரிசி. வாகனம் முத்து ரதம். உலோகம், ஈயம். புஷ்பம் வெள்ளை அரளி. அவன் உவக்கும் சுவை இனிப்பு.

சித்தர்கள் பாடியுள்ள வெண்ணிலாப் பாடல்கள் பிரசித்தம். யோகிகள் தங்களுடைய சித்தி கைவரப் பெற்று சந்திரனிலுள்ள அமுதத்தைப் பருகினார்கள்.

''குண்டலிப் பால் நின்றிலங்கும்
வெண்ணிலாவே – அந்தக்
குண்டலிப்பால் வேண்டுகின்றேன்
வெண்ணிலாவே'' என்பது சித்தர் பாடல்.

சந்திரனுக்கும் ஆன்மீக எழுச்சியின் சித்திக்கும் தொடர்பு உண்டு.

புத்தர் பெருமான் பிறந்தது கைலாச பௌர்ணமியில். அவர் போதி மரத்தடியில் ஞானம் பெற்றது ஆஷாட பௌர்ணமியில். பௌத்தர்களுக்கு இந்த இரண்டு பௌர்ணமிகளும் ரொம்ப விசேஷம். முஸ்லிம்களுக்கும் பிறை முக்கியமானது அல்லவா?

நமது சாஸ்திரங்களின்படி அம்பிகையின் அருள் சந்திரன் மூலமாகப் பூவுலகில் வியாபிக்கிறது.

காதலர்கள் நிலவை நேசிக்கிறார்கள். நிலா முற்றத்தில் அமர்ந்து அரசிளங்குமரிகள் கலைகள் பயின்றார்கள். ராமபிரானை ராமச்சந்திரன் என்று அழைக்கிறோம். ராமன் குழந்தையாக இருந்தபோது, ''அம்புலியைத் தா'' என்று அடம்பிடித்தான். யாராலும் சமாதானப்படுத்த முடியவில்லையாம். கடைசியில் குலகுரு வசிஷ்டரை அழைத்தாராம் தசரதர். வசிஷ்டர் ஒரு கண்ணாடி கொண்டு வரச் சொன்னாராம். கண்ணாடியில் சந்திரனைப் பார்த்து ராமன் சிரித்து மகிழ்ந்தானாம். இப்படியெல்லாம் சந்திரனை வைத்து எத்தனையோ கதைகள்.

சின்னஞ்சிறு குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு, ''அம்புலி மாமா வா வா! ஆடவே நீ இங்கு வா வா!'' என்று அழைக்கச் சொல்லிக் கொடுப்பது நமக்கெல்லாம் தெரியும்.

கன்னிப் பெண்கள் பிறையைத் தொழுது, ''நல்ல கணவன், அன்புடைய கணவன்'' வேண்டுமென்று பிரார்த்திப்பது சங்ககால வழக்கமாம். ''ஆயிரம் பிறை கண்டவர்'' என்று வயதானவர்களைப் போற்றி வணங்குகிறோம்.

மூன்றாம் பிறையைக் கண்டால் அதிர்ஷ்

டம்; நான்காம் பிறையைப் பார்த்தால் வீண்பழி வரும் என்றெல்லாம் பலவிதமான நம்பிக்கைகள்.

சுந்தரர் தாம் வழிபடு தெய்வமான, சிவ பெருமானை முதன் முதலில், "பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா" என்று பாடினார்.

ஞானசம்பந்தர் முதன் முதலில் பால கனாகப் பாடிய பாடலில், "தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடி"என்று சந்திரனைத் தலையில் அணிந்த சிறப்பையே கூறுகிறார்.

நிலவையும் நிறை மதியையும் பாடாத புலவர் இல்லை. மகாகவி பாரதியாரும் சந்திரனைப் புகழ்ந்து பாடியிருக்கிறார்.

அமரர் கல்கியவர்களோ கவியரசர் பாரதியின் கவிதை இன்பத்தை சந்திரனின் கதிரொளியில் கண்டார்.

"கவியரசர் பாரதியின் கவிதை இன்பம் உன்
கதிரொளியில் காண்பதென்ன
வெண்ணிலாவே"

ஆழ்வார், தன்னை யசோதையாகவே பாவித்துக் கொண்டு

என் மகன் கோவிந்தன் கூத்தனை
இளமா மதி!
நின் முகம் கண்ணுளாகில் நீ இங்கு
நோக்கிப் போ"

என்று குழந்தை கண்ணன் விளையாடும் அழகை சந்திரனுக்குக் காட்டுகிறார்.

காமாக்ஷி அம்மனின் கிரீடத்தில் ஒளி வீசி தண்கதிர் பொழியும் இளம்பிறையைக் காணலாம்.

துன்னிய நீல நிறத்தள் பராசக்தி
வெண்ணிலாவே – இங்கு
தோன்றும் உலகவளேயென்று கூறுவர்
வெண்ணிலாவே!
பின்னியமேகச் சடைமிசைக் கங்கையும்
வெண்ணிலாவே! நல்ல
பெட்புற நீயும் விளங்குதல் கண்டனன்
வெண்ணிலாவே"

என்று பாரதியார் சிவபெருமானுடைய கோலத்தையே பராசக்தியாகக் கண்டு பாடுகிறார். சிவனும் சக்தியும் ஒன்றுதானே?

திருப்பழனத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது திங்களூர். வழியில் கணபதி அக்ரஹாரம் என்ற சிறு கிராமம் இருக்கிறது. இறங்கித் தரிசித்துக் கொள்ள வேண்டும். விநாயகப் பெருமான் குழந்தை மாதிரி இருக்கிறார். கோவில் பரம சுத்தம். வாசலிலேயே பரமாச்சாரியாள் மூவருடைய படமும் எழுதி வைத்திருக்கிறார்கள். மகாபெரிய வாளுக்கு ரொம்ப இஷ்டமான கணபதி இவர். தரிசிக்கக் கிடைப்பது பாக்கியம்.

கணபதி அக்ரஹாரத்திலிருந்து வயல் வரப்பு வழியே நடந்து திங்களூருக்கு வந்து விடலாமென்று தோன்றுகிறது.

சந்திரன் சிவபெருமானைப் பூஜித்து வழி பட்டதால் திங்களூர் என்று பெயர் வந்தது. பங்குனி புரட்டாசி மாதங்களில் சந்திர கிரணங்கள் மூன்று தினங்கள் சிவலிங்கத்தின் மீது படுமாம். உத்திர நட்சத்திரமும் பௌர்ணமியும் சேரும் தினம் ரொம்ப விசேஷம்.

திங்களூர் சமீப காலத்திலேதான் சந்திரனுடைய தலமாக, நவகிரஹ பதிகளில் ஒன்றாகப் புகழ்பெற்றிருக்கிறது.




**"என்ன இது... வீடு பூரா உன் கணவர் 'பார்வதி வாழ்க' என்று உன் பேரை எழுதிப் போட்டிருக்காரு?"**

**"ஒரு நாள் அவர்கூட சண்டை போட லேணா உடனே உணர்ச்சிவசப்பட்டு இப்படி பாராட்டிருவாரு!"**

**— அம்பை தேவா**

சந்திரனுடைய அருளுக்காகப் பிரார்த்தனை செய்பவர்கள் திங்களூர் பிரசித்தி அடைவதற்கு முன் திருப்பதிக்குத்தான் சென்று வேண்டிக் கொள்வது வழக்கம். திருவேங்கடமுடையானை வழிபட்டு சந்திரன் அரிய பேறு பெற்றதாக ஐதீகம். சகோதரியின் கணவரல்லவா வேங்கட நாதன்! மாப்பிள்ளையாயிற்றே.

இருந்தாலும் சந்திரசேகரன் என்றும், ஸோமசுந்தரன் என்றும் பெயருடைய சிவஸ் தலமே சந்திரனுடைய தலமாக இருக்க வேண்டும் என்று சிவத்தொண்டர்கள் நினைத்தார்கள் போலும். திங்களூருக்கு யோகம் அடித்தது. சுக்கிரதசை!

திங்களூரில் கைலாசநாதராகிய சந்திர சேகரரையும் உமாதேவியாரையும், சிவ

பெருமானை வழிபட்டுத் தன் குறைநீங்கப் பெற்ற சந்திரனையும், மற்ற நவகிரஹ தேவதைகளையும் வழிபட்டால் நமது குறைகள் எல்லாம் தீரும். சந்திரன் தன் வெண்ணிலவைப் பொழிவார். அமுத கிரணங்களின் மூலம் நாம் சிவபெருமானின் அருளைப் பெறுவோம். சந்திர சகோதரியின் கடைக்கண் பார்வையால் தனம் தான்யம் முதலிய எல்லா லாபங்களையும் அடையலாம்.

**ச**ந்திரனுக்கு காந்தி, சோபா என்று இரு மனைவிகள் என்று சொல்கிறார்கள். இந்த ஐதிகங்களையெல்லாம் உருவகப்படுத்திப் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். 27 முக்கியமான நட்சத்திரங்கள் வானவீதியில் இருப்பதை அறிவோம். சந்திரன் உலகைச் சுற்றி வரும் போது ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நக்ஷத்திரத்துடன் இருப்பதாகத் தோற்றம் ஏற்படுகிறது. இந்த நட்சத்திரங்கள் எத்தனையோ ஒளி ஆண்டுகளுக்கு அப்பால் இருப்பது விஞ்ஞான உண்மை என்பதும் தெரியும்.

ஆனால், நம்முடைய சம்பிரதாயங்களை நாம் நம்புகிறோம்.

சந்திர மண்டலத்தைக் கண்டு தெளிந்து விட்ட இந்த நாளிலும் நமக்கு சந்திரன் நன்மை தரும் கோள்தான்!

கோள்களின் வழிபாடு ஏழாம் நூற்றாண்டுக்குப் பின்னரே தமிழகத்தில் ஏற்பட்டது என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

ஆனால், இவ்வளவு சிறப்புகள் வாய்ந்த திங்களூர்க்கோவிலின் வரலாறு தெரியவில்லை. ஏழாம் நூற்றாண்டில் இருந்த கோவிலுக்கு வரலாறு இல்லாமல் இருக்க முடியாது.

கோவிலில் உள்ள முதியவரான குருக்கள் சந்திரனின் மகிமையைப் பற்றிச் சொன்னார். ஈசுவரனின் கிருபையைப் பற்றிக் கூறினார். வரலாறு இருக்கிறதா என்று நாம் கேட்டபோது, மடியில் தேடி ஒலிக் கருவியைக் காதில் அணிந்து கொண்டு அந்தப் பெரியவர் பதில் சொன்னது மகிழ்ச்சியளித்தது. "தோடுடைய செவியன்" என்ற உபமானம்தான் மனத்தில் தோன்றியது.

இன்னும் இளைஞர்களான குருக்கள் இரண்டு மூன்று பேர் இருக்கிறார்கள். சிரத்தையோடு பூஜை செய்து விபூதி குங்குமம் வழங்குகிறார்கள்.

திங்களூரில் சந்திரனுக்கு குருக்கள் அர்ச்சனை செய்து கொண்டிருந்தபோது, நீல் ஆம்ஸ்ட்ராங் ஞாபகமும் புத்தனேரி சுப்ரமணியமும் நினைவுக்கு வந்தனர். புத்தனேரி எழுதியுள்ள வேடிக்கைப் பாடல், ஒரு குழந்தை சொல்வதாக அமைந்திருக்கும் வரிகள் ஞாபகம் வருகின்றன.

"அம்புலி மானே வா வா
ஆடவே நீ இங்கு வா வா"

என்று தாயார் இடுப்பில் உள்ள குழந்தைக்கு வேடிக்கை காட்டுகிறாள் குழந்தை அம்மாவிடம் கூறுகிறான்.

"என்னை நிலவுப் பாட்டாலே
ஏமாற்ற வேண்டாம் என் தாயே
அம்புலி இங்கே வரமாட்டான்
அமெரிக்க மாமா விடமாட்டான்!"

என்னதான் வேடிக்கையாக இருந்தாலும் சந்திரனை அவனுடைய உன்னதமான பதவியிலிருந்து நம்மால் இறக்க முடியாது.

வேயுறு தோளி பங்கனான சிவபெருமான் மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து நம் உள்ளத்தில் புகுந்து விட்டால் எப்போதும் நன்மைதான். குளிர் நிலவுதான்.

(அடுத்த வாரம் செவ்வாய் ஸ்தலம் – வைதீஸ்வரன் கோவில்.)

வெங்கடேஷ்








1999 நவம்பர் 14
பிரமாதி ஐப்பசி 28
மலர் : 58
இதழ் : 16

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சூறாவளி கொடுமை; சுரண்டல் பெருங்கொடுமை!

ஒரிசாவில் இரண்டாவது கடும்புயல் வீசிய இரு தினங்களுக்குப் பின்னர் தலைநகர் புவனேசுவரில் ஒரே ஒரு தொலைபேசிதான் இயங்கிக் கொண்டிருந்தது. முதல்வர் இல்லத்தின் தொலைபேசி! அதன் மூலம் ஸ்டார் டி.வி.யின் செய்திப் பிரிவைத் தொடர்பு கொண்ட நிருபர், எந்தவிதமான உதவியும் பெறாமல் மக்கள் தத்தளித்துக் கொண்டிருப்பதாகச் சொன்னார்.

இயற்கையின் சீற்றத்தால் விளையக்கூடிய சோகத்தை மட்டும் எடுத்துக் காட்டவில்லை இந்நிகழ்ச்சி; ஒரிஸ்ஸா அரசாங்கத்தின் சோப்ளாங்கித்தனத்துக்கும் சாட்சியாக அமைந்தது.

இந்தியாவின் மிகவும் பின்தங்கிய மாநிலம் என்னும் இடத்துக்கு பீஹாருடன் போட்டி போடும் மாநிலம் ஒரிசா. இவ்விரு மாநிலங்களிலும் கல்வியறிவின்மையும் ஏழைமையும் மிக அதிகம் என்பதால் அப்பாவிகளான மக்களை அரசியல்வாதிகள் சுரண்டிப் பிழைப்பதும் பொறுப்புகளை நிறைவேற்றுவதில் அலட்சியம் காட்டுவதும் சர்வ் சகஜமாயிருக்கிறது.

புயலை யாராலும் தடுத்து நிறுத்த முடியாதுதான். அதுவும் பத்து நாள் இடைவெளியில் இரண்டு பெரும்புயல்கள் ஒரே இடத்தில் தாக்குவதென்பது மிகவும் அசாதாரணம்.




ஆனால் விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் முன்னேறி, புயலையும் அதன் சீற்றத்தையும் முன்கூட்டியே அறிவித்து எச்சரிக்கும் வசதிகள் பெருகி விட்டபோதும், மக்களை எச்சரிக்கவும் பாதுகாப்பான இடங்களுக்குக் குடி பெயர்க்கவும் தவறியிருக்கிறது ஒரிசா அரசு.

முன்னெச்சரிக்கை நடவடிக்கையில் சொதப்பி விட்ட அரசாங்கம், நிவாரணப் பணிகளிலும் அதே மெத்தனத்தைக் காட்டி வருகிறது.

மின் இணைப்பைச் சீராக்குவதா? தொலைத் தொடர்பை சரி செய்வதா? நீர் சூழ்ந்து தவிக்கும் மக்களைக் காப்பாற்றிப் பாதுகாத்து, உணவளித்து, மருத்துவ உதவி தருவதா? இறந்து போனவர்களின் சடலங்களை மீட்டு இறுதிச் சடங்குகளை நிறைவேற்றுவதா? என்று வரிசைப்படுத்தி இயங்கத் தெரியாமல் மலைத்துப் போய் ஸ்தம்பித்திருக்கிறது மாநில அரசு நிர்வாகம்.

ஹெலிகாப்டர் மூலம் அளிக்கப்பட்ட உணவுப் பொட்டலங்கள் தவிர எந்தவிதமான உதவியுமின்றி ஆயிரக்கணக்கான ஏழை எளிய மக்கள் தவித்திருக்கிறார்கள். அவர்களுள் பலர், நான்கு நாட்கள் வரை உணவின்றிப் பட்டினி கிடந்திருக்கிறார்கள். பார்வையிட வந்த அமைச்சர் குழுவை கோபத்துடன் துரத்தியடித்திருக்கிறார்கள்; உணவை ஏற்றி வந்த வாகனங்களை முற்றுகையிட்டு வன்முறையில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இந்தக் கோபமும் ஆற்றாமையும் அந்த நேரத்துப் பசியாலும் வீடு - வாசல், உற்றம் - சுற்றம் இழந்த துன்பத்தாலும் எழுந்தவையாக இருக்கலாம். ஆனால் மத்திய, மாநில அரசுகள் இனியேனும் கவனமாகச் செயல்படாவிட்டால் இந்தியா முழுவதிலுமான மக்களின் தார்மிகக் கோபம் அவர்கள் பேரில் திரும்ப வாய்ப்பிருக்கிறது.

புயல் பாதித்த பகுதிகளைப் பார்வையிட பிரதமர் போகவிருக்கிறார். மத்திய அரசுக்




குழு நிலைமையை ஆராய்ந்து, நஷ்டத்தின் அளவை நிர்ணயித்து மத்திய நிதி உதவித் தொகையை நிர்ணயம் செய்ய இருக்கிறது. மாநில அரசுகள் தங்கள் பங்குக்கு உதவ ஆரம்பித்து விட்டன. உலகளாவிய பல்வேறு நாடுகளிலிருந்து உதவித் தொகையும் பொருள்களும் அனுப்பப்பட்டு வருகின்றன. தன்னார்வ அமைப்புகளும் ஐ.நா. சபை, செஞ்சிலுவைச் சங்கம் போன்ற சர்வதேச அமைப்புகளும் உதவக் காத்திருக்கின்றன.

இத்தனை உதவியும், பாழ்பட்டு நிற்கும் ஒரிசாவின் ஏழை - எளிய மக்களைச் சென்றடையும் என்ற உத்தரவாதம் இருக்கிறதா?

கணிசமான முன்னேற்றம் கண்டுள்ள தமிழகம் போன்ற மாநிலங்களில்கூட நிவாரணத் தொகைகளும் உதவித் தொகைகளும் இடைவழியில் கணிசமாகச் சுரண்டப்பட்டு விடுகின்றன. இவ்வாறிருக்க, ஒரிசா போன்ற பின் தங்கிய மாநிலங்களில் என்ன நடக்கும் என்பதை விளக்கவே வேண்டியதில்லை.

ஒரிசா புயலை தேசிய அளவிலான இயற்கை விபத்தாக அறிவித்துள்ளார் பிரதமர். இதையே சற்று விஸ்தரித்து, ஒரிசாவை 'சிறப்பு கவனம் தேவைப்படும் மாநிலம்' என்று உடனடியாக அறிவிக்க வேண்டும். நம்பகமான உயர் அதிகாரிகள், பொது வாழ்க்கைப் பிரமுகர்கள் கொண்ட ஒரு கட்டுக் கோப்பான குழுவை நிறுவ வேண்டும். ஒரிசாவில் உடனடி நிவாரணப் பணிகளும் மறுசீரமைப்புப் பணிகளும் விரைவாகவும் சிறப்பாகவும் நேர்மையாகவும் நடைபெறும்படி செய்ய, அந்தக் குழுவுக்குச் சிறப்பு அதிகாரங்கள் வழங்க வேண்டும்.

இதில் மட்டும் பிரதமர் தவறினால், உலக நாடுகள் அனுப்பும் உதவியெல்லாம் விரயமாகும். ஒரிசாவின் துயரம் மேலும் பன்மடங்காகும். சாயம் வெளுத்து நிற்கும் மாநில அரசை நம்பிப் பயனில்லை. பிரதமர் தைரியமாகவும் துரிதமாகவும் செயல் படட்டும்.



• இணைப்புப் பள்ளி




• தெருவோரச் சிறார் மையம்



• அலோசியஸ்

“எங்களுக்குத் தொழில் இன்னதுன்னு இல்ல சார். கிடைச்ச வேலைக்குப் போவோம். பெரும்பாலும் சமையல் வேலை தான். சம்பளத்தோடு சாப்பாடும் கிடைக்கறது அதுல தானே! கிடைச்ச காசை இஷ்டம் போல செலவு செய்வோம்!''

''ராத்திரி நேரத்துல கிடைச்ச இடத்துல. முக்கியமா பஸ் ஸ்டேண்ட்ல படுத்துக்கிடுவோம். 'தம்', அடிப்போம். ஒரு சில பேர் 'கஞ்சாவும்' பிடிப்பாங்க. திருட்டுப் பழக்கமெல்லாம் எங்ககிட்ட வந்ததே கிடையாது சார். ஆனாலும் போலீசைக் கண்டா பயம். என்ன செய்யறது? நினைச்ச நேரத்துல வந்து சந்தேகக் கேசுல அள்ளிட்டுப் போயிடுவாங்களே!''

''ஆனா தெய்வம் போல 'அலோசியஸ்' சார் வந்தாரு. ரொம்ப நல்லா பழகினாரு. இப்படி ஒரு தங்கும் விடுதிய ஏற்படுத்தித் தர்றதா சொன்னாரு. நாங்க ஆரம்பத்துல நம்பலை. இப்பப் பாருங்க. இங்கே வந்து அஞ்சாறு மாசம் ஆச்சு. சாப்பிட சோறும் போட்டு, தங்க இடமும், படுக்கப் பாயும் கொடுத்து... யார் சார் தருவாங்க இப்படி?''

– நாம் போனபோது அந்தத் தெருவோரச் சிறார் மையத்தில் பத்துப் பன்னிரண்டு சிறுவர்கள். வாலிபப் பருவத்தினர். எல்லோரும் நெல்லை, திண்டுக்கல், மதுரை, சென்னை என பலதரப்பட்ட பகுதிகளிலிருந்து அனாதரவாய் ஓடி வந்தவர்கள். மொத்தம் 29 பேராம். பாதிப் பேருக்கு மேல் திருப்பதி சென்று விட்டதாகத் தகவல். (திருப்பதியில் 'லட்டு' வாங்கி கூடுதல் விலைக்கு விற்பார்களாம்) இன்னும் சிலர் சமையல் வேலைக்குச் சென்று விட்டதாகப் பேச்சு. எல்லோரும் எங்கே, எப்போது, எதற்குப் போகிறார்கள்? எப்போது வருவார்கள் என்பது பற்றி அவர்களே குறித்து விட்டுச் செல்ல ஒரு மிக நீண்ட குறிப்பேடு. ஒவ்வொருவரின் பெயருக்கும் தனித் தனிப் பக்கங்கள். கையெழுத்து.

**சே**வ் (Save) என்ற இந்தத் தன்னார்வ அமைப்பு வீதியோர சிறார்களுக்குப் புகலிடம் தருவதிலும் குழந்தைத் தொழிலாளர்களை மீட்டு கல்வியும் விழிப்புணர்வும் தருவதிலும் அரிய சேவை ஆற்றி வருகிறது.

நாம் சென்றபோது மதியச் சாப்பாடு 'அண்டா' கட்டி, ஆகிக் கொண்டிருந்தது. அதற்கென தனியாக ஓர் ஆயா. துணி துவைக்க, குளிக்க குளியலறை. தண்ணீர்த் தொட்டிகள்.

"ஆரம்பத்துல சும்மாதான் சார் சாப்பிட்டு வந்தோம். கூட்டி வந்த அலோசியஸ் சாரும் ('சேவ்' டைரக்டர்) எதுவும் கண்டுக்கல. இஷ்டம் போல போறோம்; வர்றோம். சம்பாதிக்கிறோம். சாப்பிடறதுக்காவது காசு கொடுக்காம இருக்கறது அசிங்கமாத் தோணுச்சு. அப்புறம்தான் சாப்பிடறதுக்கு மட்டும் காசு கொடுத்திடறோம்!" என்றனர் சேவ் வாசிகள்!




• 'முண்டியங்கிணறு' பகுதியில் குழந்தைத் தொழிலாளர்களே இல்லை

வந்த புதிதில் இவர்கள் பெரும்பாலும் பெரும் 'மூர்க்கர்களாகவே' இருந்திருக்கின்றனர். ஒருமுறை விடுதிக் கண்காணிப்பாளரையே தாக்கி விட்டனராம். எனினும் 'மாலை நேர வகுப்புகளில் நல்லொழுக்கங்களை போதிப்பது, பல்வேறு சமூகப் பணி விழாக்களுக்குக் கூட்டிப் போவது என்று சிறுகச் சிறுக அன்பு வழி கொண்டு வந்து 'அவர்களின் மனோபாவத்தையே மாற்றியிருக்கின்றனர் அமைப்பினைச் சார்ந்தவர்கள்.

**இ**ம் மையம் இப்படியென்றால் இதனையொட்டியே அடுத்த பகுதியில் இருக்கும் படிப்பைப் பாதியில் விட்ட சிறார்களுக்கான 'இணைப்புப் பள்ளி' இன்னும் ஒரு படி மேல். எட்டாம் வகுப்பில் பதினெட்டுப் பேர். பத்தாம் வகுப்பில் ஏழு பேர். ஐந்தாம் வகுப்பில் பதினாறு பேர். அனைவருமே பனியன் கம்பெனி வேலைக்குப் போய் சம்பாதிக்கும் காலத்தில் கல்வி பற்றிய அக்கறை வந்து படிக்க வந்தவர்கள்.

"இவங்க அப்பா, அம்மா ஒரு காலத்துல படிக்க வைக்க முடியாம வேலைக்குச் சேர்த்திருக்காங்க. அவங்களை 'கன்வின்ஸ்' பண்ணவே எங்களுக்கு ரொம்பக் காலம் ஆச்சு. இதிலும் பல குழந்தைகள் நம் சராசரிப் பள்ளிகளில் சேர்க்கப்பட்டு, சக பிள்ளைகளால் கிண்டல் செய்யப்பட்டு ஓடி வந்து விட்டவர். சிலரை பள்ளியிலேயே எடுத்துக் கொள்ள மாட்டேன்னுட்டாங்க. அதனால் அப்படிப் பட்ட

# "ஜாங்க்ஜக்கு ஜிஞ்சிருக்கு!"

மாணவ - மாணவியரைத்தான் இங்கே சேர்த்துப் படிப்புச் சொல்லிக் கொடுத்து பிரைவேட்டாக பரீட்சை எழுதி பாஸ் செய்ய வைக்கிறோம். படிப்பவர்களுக்கு நோட்டு, புத்தகம் எல்லாம் இலவசம் தான்!"

"இப்படி வேலைக்குச் சென்றுவிட்டு பள்ளிக்குத் திருப்பப்படும் பிள்ளைகள் 'கெட்ட சகவாசம்' எல்லாம் பழகியிருக்குமே?" என்று கேட்டால் "உண்மைதான்"

## — ஒரு தன்னார்வ அமைப்பின் சேவை

"என்னங்க இது! அமைச்சர்களெல்லாம் நடு ராத்திரியில பதவிப் பிரமாணம் எடுத்துக்கிறாங்க...?"

"அதுவா! காலையிலயே பதவிப் பிரமாணம் எடுக்க ஆரம்பிச்சாங்க. இன்னும் முடியல... அதான்!" — ஜெ. கண்ணன்

என்று பதில் வருகிறது.

"பாருங்க. இவனுக்கு வயசு எட்டுதான். நல்லா பீடி பிடிக்கிறான். இவங்களெல்லாம் தோளுக்கு மேல வளர்ந்துட்டவங்க. 'பெரிய வார்த்தைக' கூடப் பேசறாங்க. இருந்தாலும் சகிச்சுக்கிட்டு ஒழுக்கத்தைப் போதிக்கறதுதான் எங்களுடைய முழு முக்கிய கடமையாயிருக்கு!" என்கின்றனர் இதன் சொற்ப ஆசிரியர்களும்.

இந்த அமைப்பு 15 கிராமங்களைத் தேர்வு செய்து அங்கு மாலை நேரப் பள்ளியை நடத்துகிறது. அதற்கு இங்கிருக்கும் ஆசிரியர்கள் மட்டுமல்லாது, தனியாக அந்தந்த ஊரிலும் தன்னார்வத் தொண்டில் நாட்டம் உள்ள படித்தவர்களை ஆசிரியர்களாக நியமித்துள்ளது அமைப்பு.

கிராமங்களில் தாறுமாறாய்த் திரியும் குழந்தைகளைப் பிடித்து, அதன் பெற்றோர்களுடன் பேசி, அருகில் உள்ள பள்ளியில் நாங்களே சேர்த்தும் விடுகிறோம். குழந்தைகளை ஒழுங்காகத் தொடர்ந்து பள்ளிக்கு அனுப்புகிறார்களா என ஒவ்வொரு நாளும் கண்காணிக்கவும் செய்கிறோம். குழந்தையை வேலைக்கு அனுப்பியே ஆக வேண்டும் என்கிற நிர்ப்பந்தத்தில் உள்ள குடும்பத்துக்கு அமைப்பு சார்பாக மாதாந்திர நிதியுதவி (400 ரூபாய்) அளித்து அக் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பும்படி செய்கிறோம். அப்படித்தான் 'குழந்தைத் தொழிலாளர்களால் நிறைந்து கிடந்த 'முட்டியங்கிணறு' எனும் கிராமத்தையே 'குழந்தைத் தொழிலாளர்கள் அற்ற மாதிரி' கிராமமாக உருவாக்கவும் செய்துள்ளோம்!" என்கின்றனர் 'சேவ்' அமைப்பினர்.

இவர்கள் குறிப்பிட்ட 'முட்டியங்கிணறு' பகுதியில் ஐம்பதுக்கும் மேற்பட்ட குடிசைப் பகுதிகள். எல்லாமே சேரி ஜனங்கள். "இவங்க வந்த பின்னாடிதான் சாமி எங்க வாழ்க்கையே விடிஞ்சிருக்கு" என்கின்றனர் ஒருமித்த குரலில். அதற்குக் காரணம் குழந்தைகளை பள்ளியில் சேர்த்தது மட்டுமல்ல. அவர்கள் குடிசை போடவும் 'லோன்' வாங்கித் தந்தனராம் 'சேவ்' அமைப்பினர். கூடவே வீட்டிலிருந்தபடியே தொழில் செய்ய 'பாய் முடையும் மிஷினு'க்கு ஏற்பாடும் செய்து வருகிறார்களாம்.

எல்லாம் சரி! இந்தக் கடுமையான உழைப்புக்குப் பின்னால் தேவைப்படும் 'நிதி ஆதாரம் எப்படி?' சேவ் அமைப்பின் இயக்குனர் அலோசியஸ்ஸிடமே கேட்டோம்.

"உள்நாட்டிலிருந்தும் அயல்நாட்டு மாணவர்கள் சிலரிடமிருந்தும் நிதி உதவி கிடைக்கிறது. ஆனால், நிதி பெறுவதை விடவும் இந்தச் சிறுவர்களின் மனத்தில் நம்பிக்கையை ஏற்படுத்தி, இவர்களை இங்கே கொண்டு வந்து சேர்ப்பதுதான் பெரிய சிரமம்!" என்றார்.

கட்டுரை, படங்கள்: **கேயெஸ்வி**

கருத்து: வெ. ராஜாராமன்





# தேசத்தின் துயரத்தில் பங்கு கொள்வோம் !

# ஒரிசா நிவாரண நிதி

## முதல்வர் கலைஞர் வேண்டுகோள்

ஒரிசாவிலே இந்த நூற்றாண்டு இதுவரை காணாத பெரும் புயல், பல்லாயிரக்கணக்கான மக்களை காவு கொண்டது. மக்கள் உணவு பெற வழிவகை எதுவுமின்றி குழந்தை குட்டிகளுடன் உதவியின்றித் தவிக்கின்றனர். இலட்சக்கணக்கானோர் தங்கள் வீடுகளையும் சொத்துக்களையும் இழந்துள்ளனர்.

தமிழக மக்களும் அவர்களால் உருவாக்கப்பட்ட தமிழக அரசும் தேசிய உணர்வு கொண்டது என்பதை மீண்டும் ஒருமுறை மெய்ப்பிக்கும் வண்ணம் பெருநிதியைத் திரட்டி பாதிக்கப்பட்ட ஒரிசா மாநில மக்களுக்கு நிவாரணம் அளித்திட, நம்மாலான உதவிகளை வழங்கி, மனிதாபிமானத்தையும் மனித நேயத்தையும் நிலைநாட்டவும் முன்வர வேண்டுமல்லவா ?



ஊழிக்காலம் ஒத்திகை பார்த்திட
ஒரிசா மேடையைத் தேர்ந்தெடுத்தது.
பசியைப் போக்கப் பல்லாயிரம் உயிர்களை
ருசியைப் பற்றிக் கவலையின்றி தின்று தீர்த்தது.
புண்ணிலே வேல்கள் பாய்வது போல
எண்ணிலா மக்களின் துயரக் கண்ணீர்
துடைத்திடும் கடமை நமக்கும் உண்டு.
துடித்தெழுவீர்! தேசத் துன்பத்தில் பங்கு கொள்வீர் !

நிதி அனுப்ப வேண்டிய முகவரி :
"ஒரிசா புயல் நிவாரண நிதி"
என்ற தலைப்பில் காசோலைகள்,
பொதுத்துறைச் செயலாளர்,
தலைமைச் செயலகம், சென்னை – 600 009
என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

அன்புள்ள

(மு. கருணாநிதி)
தமிழ்நாடு முதலமைச்சர்

**இந்த நிதிக்கு வழங்கப்படும் தொகைக்கு வரிவிலக்கு உண்டு.**





## புதுமொழி

**சா**லையைப் பார்த்தால் சமர்த்து!
சேலையைப் பார்த்தால் விபத்து!

**ஒ**ரு குழந்தைக்கும் இன்னொரு குழந்தைக்கும் இடைவெளி ஐந்து வருடம்!
உனக்கும் எனக்கும் இடைவெளி 10 மீட்டர்.

- என். தமிழ்ச் செல்வன்

## காதலிக்கு...



**எ**ன்னேரமும்
என்னைப்பற்றியே
சிந்தித்துக் கொண்டிருக்கும்
காதலியே!

என்னுருவில் இருக்கும்
உன்னை விசாரிப்பதிலேயே
அக்கறை கொண்டவளே

உன்னுருவிலிருக்கும்
என்னையும்
கொஞ்சம் கவனி!

- செ. கல்மான்

## எச்சரிக்கை

**வ**யிறு புடைக்க இரண்டு வேளை சாப்பிடுவதைவிட மூன்று அல்லது நான்கு வேளை அரை வயிற்றுக்குச் சாப்பிட்டால் உடல் இலேசாகவும் இயக்கத்துக்கு உகந்ததாகவும் ஆகும்.

- அரவிந்தர்

தகவல்: ஆர். பார்த்திபன்

## வியப்பு!

**கு**ற்றாலத்தில் குற்றால நாதருக்கும், அம்மனுக்கும் சுக்குக் காப்பியை நைவேத்தியம் செய்கிறார்கள். காரணம், குற்றாலச் சாரலில் இருவருக்கும் தலைவலி வராமல் இருக்கத்தான்!

- ஆர். பார்த்திபன்

## சிரிப்பு!

**ஒ**ரு வாலிபன் ஹோட்டலுக்குச் சென்றான். ஆர்டர் கேட்பதற்கு ஒரு பையன் வந்தான். "என்ன வேண்டும்?" என்று அலுப்பாகக் கேட்டான். வந்தவன் அவனைப் பார்த்து, "இரண்டு கட்லெட்டும், மூன்று இதமான வார்த்தைகளும் வேண்டும்" என்றான். சிறிது நேரம் கழித்து கட்லெட் வந்து சேர்ந்தது.



"கட்லெட் சரி, இதமான வார்த்தைகள் எங்கே?"

சர்வர் குனிந்து அவன் காதருகில் சொன்னான்: "தயவு செய்து கட்லெட்டுகளைச் சாப்பிடாதீர்கள்!"

– 'சிரியுங்கள்...' என்ற நூலிலிருந்து
மலர் சூர்யா

## விளக்கம்

"வேம்பு, புளி, வில்வம் போன்றது நாவல். விசாலமான கிளைகளையும் தழைகளையும் கொண்டது. பனை, தென்னை, வாழை போன்றது சிறுகதை. ஒரே திக்கை நோக்கிச் செல்வது. குறிப்பிட்ட ஒரு இலக்கையே அது சொல்ல வல்லது."

– 'ராஜாஜி கட்டுரையிலிருந்து எடுத்துச் சொன்னவர், பூவண்ணன்.
தகவல்: பாரதிதேவராஜன்

## வரலாறு!

திபெத் நாட்டை சீனா ஆக்கிரமித்துக் கொண்ட பிறகு, அங்கு திபெத்தியரும் திபெத்திய தேசிய உணர்வும் இல்லாமலே போக ஒரு வழி செய்தார்கள். திபெத்தியர், சீனர்களையே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று ஒரு சட்டம் இயற்றி விட்டார்கள்! சட்டத்தை மீறி யாராவது திபெத்திய இனத்துக்குள் திருமணம் செய்து கொண்டால், தம்பதியரைப் பிரித்து சீர்திருத்த முகாம்களுக்கு அனுப்பி விடுவார்கள்!

– புத்தனாம்பட்டி மணி

## வாழ்க்கை

ஒவ்வொரு பணியும் மூன்று நிலைகளைக் கடந்தாக வேண்டும்: ஏளனம், எதிர்ப்பு, பின்பு ஏற்றுக்கொள்ளப்படுதல்.

– சுவாமி விவேகானந்தர்
தகவல்: ஆவடி சு. கோபி

## தத்துவம்

சிரமம்தான் என்றாலும் முயற்சி செய்தால் ஆசையில்லாமல் செயல்பட்டு விடலாம்; பற்றுதல் இல்லாமலும் செயல்பட்டுவிடலாம். ஆனால் செருக்கு இல்லாமல் மாமனிதர்களான சான்றோர்களால்தான் செயல்பட முடியும்.

– அரவிந்தர்
தகவல்: ஆர்.பார்த்திபன்

## தகவல்

நம் நாட்டின் Seven sisters (ஏழு சகோதரிகள்) என்றழைக்கப்படும் மாநிலங்கள் எவை தெரியுமா? வடகிழக்கு மாநிலங்களான 1. அருணாச்சலப்பிரதேசம் 2. அஸ்ஸாம் 3. மணிப்பூர் 4. மேகாலயா 5. மிஸோரம் 6. திரிபுரா 7. நாகாலாந்து என்பவைதான்.

முதன் முதலில் ஒட்டும் தன்மையுள்ள ஸ்டாம்பைக் கண்டுபிடித்தவர் ஜேம்ஸ் தாமஸ்–இவர் ஸ்காட்லாண்டு நாட்டைச் சேர்ந்தவர். கண்டு பிடித்த ஆண்டு 1834.

(வானொலியில் கேட்டது)

– சி. க. அழகேசன்



# வரும் முன் காக்க வந்தபின் வாழ!

**நோ**ய் எதிர்ப்புச் சக்தி நம் உடம்பில் இருந்தால், டைஃபாய்டு என்ன, ஜாண்டிஸ் (மஞ்சள் காமாலை) என்ன – எதுவும் நம்மை அண்டாது.

இந்த நோய் எதிர்ப்புச் சக்தி, இளமையில் கூடுதலாக இருக்கும். வயதாக ஆக, குறைந்து விடும். ஆனால் இளமையாக இருக்கும்போதே, நோய் எதிர்ப்புச் சக்தி குறைவாக இருந்து, ஜலதோஷம் முதல் ஜாண்டிஸ் வரை வந்து அவஸ்தைப்படுபவர்களும் உண்டு.

தேவைக்கதிகமாக உண்ணாமல், சாப்பாட்டு வழக்கங்களில் கட்டுப்பாடு காத்தால் பொதுவாக நோய் எதிர்ப்புச் சக்தியும் நிலைத்திருக்கும்.

உடம்பைத் திடமாக வைத்துக் கொள்ள, சில நல்ல ஆயுர்வேத மருந்துகளும் உட்கொள்ளலாம். முக்கியமாக அசுவகந்த ரசாயனம், அசுவகந்த லேகியம் போன்றவை. (இதில் முக்கிய மூலப் பொருள் அசுவகந்தா – அதாவது அமுக்ரான் கிழங்குதான்.) ஜெனரல் டானிக் மாதிரி, திராட்சாரிஷ்டம் குடிக்கலாம். குழந்தைகள் இரண்டு வேளைக்கு, இரண்டு டீஸ்பூன் அளவும்; பெரியவர்கள் மூன்று வேளைக்கு நாலு டீஸ்பூன் அளவும் உட்கொள்ளலாம்.

கீழாநெல்லி மஞ்சள் காமாலை வராதிருக்கவும், வாழைத் தண்டை சிறுநீரகங்களில் கல் உருவாகாமல் இருக்கவும் சாப்பிடலாம். ஆனால் இதையே தினசரி சாப்பிட்டுக் கொண்டிருக்கக் கூடாது! எதிலும் ஓர் அளவு இருக்கிறதல்லவா? வாரம் ஒருநாள், அல்லது பத்து நாட்களுக்கு ஒரு நாள் போலச் சாப்பிட்டு வந்தால் போதும். சிலர் தினமும் சாப்பிடுவார்கள்; அது தேவையில்லை.

குடிக்கிற நீரும் சுத்தமானதாக இருக்க வேண்டும்.

விஷக் காய்ச்சலோ, டைஃபாய்டோ, மஞ்சள் காமாலையோ வந்து, குணமாகி, படுக்கையிலிருந்து எழுந்தவர்கள் சில கட்டுப்பாடுகளை அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. முக்கியமாக உணவு விஷயத்தில் கண்டிப்பும் கறாருமாக இருத்தல் அவசியம். மனைவி அந்தண்டை நகர்ந்தவுடன், சமையல் அறையில் நுழைந்து மசால் வடையை ஒரு கை பார்ப்பவர்கள் சபலத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். அதிலும் டைஃபாய்டு ஆகட்டும், ஜாண்டிஸ் ஆகட்டும், பாதிக்கப்படும் பகுதி லிவர்தான். அதனால்தான் எண்ணெய்ப் பலகாரங்கள், எக்கச்சக்க மசாலா ஐட்டங்கள் எல்லாவற்றுக்கும் தாற்காலிகமாக டாடா சொல்ல வேண்டும் என்கிறோம். குறைந்தபட்சம் ஆறு மாதங்களுக்காவது அசைவ உணவுகள் பக்கம் போகாமல் இருப்பதும் நல்லது.

கீழாநெல்லி, வில்வம், மரமஞ்சள், சீந்தில் கொடி, வேம்பு, பிப்பிலி, நெல்லிக்காய் என்று சுமார் முப்பது வகை மூலிகைகள், வேர்கள், பட்டைகள் கொண்டு தயாரிக்கப்பட்ட மருந்துகள் கிடைக்கும். அவற்றை ஒன்றிரண்டு மாதங்களுக்குச் சாப்பிட்டு வரலாம். நோய் குணமாகி வரும்போது பழைய தெம்புக்குத் திரும்ப உதவும். சதாவரி லேகியம், கோக்ஷுராதி சூர்ணம், மாதகி மண்டூரம், புனர்னவாசவம், பிருங்கராஜாசவம் இதெல்லாம் மூன்று முதல் ஆறு மாதங்களுக்குச் சாப்பிடலாம். நார்மலாகச் செய்கிற வேலைகளைச் செய்யலாம். ஒரு சின்ன வாக்கிங் போகலாம். உடலுறவு கூட ஓகே. ஆனால் அதிகம் கூடாது!

– வெங்கட்ரமணா மருத்துவமனை
நிர்வாக மருத்துவர் டாக்டர்
ராதாகிருஷ்ணா.

தொகுப்பு : சாருகேசி

## ஆஹா ஆயுர்வேதம்!

உ

ஸ்ரீ குருப்யோ நம :







# நுங்கம்பாக்கம் ஸேவா ஸமாஜம் டிரஸ்ட் (Regd.)

நம். 22, II கிராஸ் தெரு, லேக் ஏரியா, நுங்கம்பாக்கம், சென்னை 600 034.

# காஞ்சி ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் நினைவு மண்டப திருப்பணி

## ஓர் வேண்டுகோள்

நுங்கம்பாக்கம் கைங்கர்ய ஸபா, ஸேவா ஸமாஜம் டிரஸ்ட், வைதிக ஸமாஜம் மற்றும் ஸ்ரீ ராதா கல்யாண மஹோத்ஸவ இன்ஸ்டிடியூட் டிரஸ்ட் இணைந்து நுங்கம்பாக்கத்தில் காஞ்சி ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹாஸ்வாமிகள் நினைவாக மண்டபம் அமைத்து இதில் ஸ்ரீ ஆதி சங்கரர், ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ அம்பாள் ஸ்வாமிகளை பிரதிஷ்டை செய்து தினப்படி விசேஷ பூஜைகளுக்கு ஏற்பாடு செய்வதுடன் ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் உபதேசித்தருளியபடி சிவராத்ரி மஹாருத்ரம், ஸ்ரீ ஆச்சார்யாள் ஜயந்தி, திருப்பாவை, திருவெம்பாவை போட்டிகள், சதுர்வேத பாராயணம், ராதா கல்யாணம், சனிக்கிழமை பஜனை, ஏகாதசி பஜனை முதலியவைகளும் நடத்தவும் ஏற்பாடு செய்யப்படுவதுடன் பக்தர்களின் சுப பணிகளுக்கும் உதவும்படியும் அமைக்கப்படும்.

இத்திட்ட அமைப்பு காஞ்சி ஸ்ரீ ஆச்சார்ய ஸ்வாமிகளின் பாதகமலங்களில் சமர்பிக்கப்பட்டு அனுக்கிரஹத்துடன் நன்கொடையும் வழங்கி விரைவில் மண்டபம் அமைந்திட ஆசீர்வதித்துள்ளார்கள்.

நினைவு மண்டபம் சுமார் 15 லட்சம் ரூபாய் செலவில் அமைக்கப்படுகிறது.

தர்ம சிந்தனையாளர்கள், தர்ம ஸ்தாபனங்கள் இம்மண்டபம் விரைவில் அமைந்திட தங்களால் இயன்ற பொருளுதவி வழங்கிட பிரார்த்திக்கிறோம்.

**B. KALYANASUNDARAM**

*Managing Trustee:* Nungambakkam Seva Samajam Trust

All Donations are exempted under Section 80(G) of Income Tax Act till 31-3-2000 and may be sent to the above address either by Cash/Cheque/Demand Draft in favour of **Nungambakkam Seva Samajam Trust.**



• ரங்கராஜன் குமாரமங்கலம்



• இல. கணேசன்

## ராஜதர்பார் :

● தேநீர் விருந்தளித்து வாஜ்பாய் அரசைக் கவிழ்த்த அந்த ஆசாமி, "வரும் குளிர்காலக் கூட்டத் தொடரில் வாஜ்பாயின் உடல்நிலை பற்றிய விவாதம் வரப் போகிறது!" என்கிறார். "ஒரு நாளைக்கு ஒரு மணி நேரத்துக்கு மேல் யாரையும் சந்திக்கக் கூடாது. டெல்லியை விட்டு வெளியே செல்லக் கூடாது என்றெல்லாம் வாஜ்பாய்க்கு மருத்துவ ஆலோசனைகள் வழங்கப்பட்டுள்ளன. அவருக்கு ப்ராஸ்டேட் கேன்சர். என்னிடம் மருத்துவ ஆவணம் இருக்கிறது. இப்போது நான் லாலுவைச் சந்திக்கப் போகிறேன். அப்புறம் பாருங்கள் கதையை!" என்று 'சாமி' ஆட்டம் ஆடுகிறார் அந்த ஆசாமி.



• சோனியா

● போஃபோர்ஸ் மீதான விவாதத்துக்கு நோட்டீஸ் கொடுத்துவிட்டு, பிறகு அதை வாபஸ் பெற்றதன் மூலம் காங்கிரஸ் தமது கட்சித் தலைமையின் பலவீனத்தை பகிரங்கமாகவே ஒப்புக் கொண்டு விட்டதாகக் கட்சிக்குள்ளேயே பேச ஆரம்பித்து விட்டார்கள். "இப்படிப்பட்ட பலவீனமான தலைமையை வைத்துக் கொண்டு என்ன இழவு அரசியல் நடத்துவது!" என்று வெளிப்படையாகவே ஆதங்கப்பட்டார் கட்சி நிர்வாகிகளில் ஒருவர். "அத்வானியின் காலில் விழாத குறையாகத் தமது கணவரின் பெயரைக் குற்றப் பத்திரிகையிலிருந்து நீக்கி விடுங்கள் என்று சோனியா புலம்பியிருக்க வேண்டுமா?" என்று கட்சிக்குள்ளேயே முணுமுணுக்க ஆரம்பித்து விட்டார்கள். 'கட்சியைக் காப்பாற்றுவதற்காக சோனியா அரசியலுக்கு வந்தாரா அல்லது தமது குடும்பத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக வந்தாரா?' என்கிற விவாதமும் கட்சிக்குள் நடக்க ஆரம்பித்து விட்டது. இதையெல்லாம் பார்த்து குஷியாகியிருப்பவர் முன்னாள் தலைவர் சீதாராம் கேசரி. "தேக்கோ மேரே ஊப்பர் க்யா க்யா ஆரோப் லகாதேதே (பாரு! என் மீது எப்படியெல்லாம் குற்றம் சாட்டினார்கள்!)" என்று வருவோர் போவோரிடமெல்லாம் நக்கலாகச் சொல்லி சிரித்துக் கொண்டிருக்கிறார் கேசரி.



• சீதாராம் கேசரி

# குஷி மூடில் சீதாராம் கேசரி!

● அண்மையில் கூடிய பி.ஜே.பியின் செயற்குழு கூட்டத்தில் உள்கட்சி விவகாரங்கள் வெடித்தன. இப்போது பீஹாரில் நடந்த தேர்தலில், நான்கு இடங்களில் ஓர் இடத்தைக் கூடப் பெற முடியாமல் போனது குறித்தும், ஐக்கிய ஜனதாதளம் ஓரிடத்தில் வென்றது பற்றியும் பேசப் பட்டது. இந்த நிலையில் வரும் பீஹார் சட்டமன்றத் தேர்தலில் அங்கே மேஜர் பார்ட்னராக ஐக்கிய ஜனதா தளம்

இருப்பதா, பி.ஜே.பி. இருப்பதா என்பதில் கட்சிக்குள் ஏக வாக்குவாதம் நடந்தது! தமிழக பி.ஜே.பியில் ரங்கராஜன் குமார மங்கலத்துக்குக் கொடுக்கப்படும் முக்கியத் துவம் பற்றியும் அலசப்பட்டது. அவர் இன்னமும் சோஷலிஸ்ட் பின்னணியுள்ள காங்கிரஸ்காரராகத்தான் பார்க்கப்படு கிறார். இப்படிப்பட்ட அவருக்கெல்லாம் பதவி; ஆனால் 'ஜனசங்கத்தை விட மதுரை முனியாண்டி விலாசக்குக் கிளை கள் அதிகம்' என்று கேலி பேசிய காலத் திலிருந்து கட்சியில் இருந்து வருவோருக்கு என்ன மரியாதை? என்றெல்லாம் கேள்வி எழுப்பப்பட்டது. இல. கணேசன், "நாகர் கோயில் பொன். ராதாகிருஷ்ணனுக்கு அமைச்சர் பதவி தரச் சொல்லி சிபாரிசு செய்யுங்கள்!'' என்று ஆர்.எஸ்.எஸ். பிரமுகர் ஒருவரைக் கேட்டுக் கொண்டார். இதில் கோவை ராதாகிருஷ்ணனுக்கு வருத்தம்.

- விரைவில் செய்தித் தொழில்நுட்பத் திற்கென்று புதிய அமைச்சகம் ஒன்று அமைக்கப்பட இருக்கிறது. இது பிரதமர் வசமே இருக்குமென்றும் சொல்லப்படுகிறது. அது தொடர்பாகப் புதிய சில சட்டங்களும் வரலாம் என்கிறார்கள்.

- ஆனந்த நாராயணன் என்கிற இந்தியன் ரெவின்யூ சர்வீஸ் அதிகாரி, திடீரென்று பிரதமரின் சிறப்புச் செயலாள ராக நியமிக்கப்பட்டிருக்கிறார். வரி விதிப்பு அமைப்புகளில் புதிய சீர்திருத்தங்கள் தேவை. பொருளாதாரச் சீரமைப்பில் இது மிக மிக முக்கியமான விஷயம் என்று பிரதமர் உணர்ந்ததால்தான் இந்த நியமனம் என்று சொல்லப்படுகிறது.

- போஃபோர்ஸ் பற்றிய சோனியா காந்தியின் அடுத்த போராட்டம் எப்போது? குற்றப் பத்திரிகையிலிருந்து ராஜீவ் பெயரை நீக்குவதற்குத் தனிப்பட்ட முறையில் சோனியாவிடம் வாக்குறுதியளித்திருக் கிறாராம் அத்வானி. எனவே, பொறுத் திருந்து பார்த்த பிறகுதான் புதிய போராட் டத்துக்குத் தயாராகுமாம் கட்சி!

— இந்த்ரப்ரஸ்தன்



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

## *முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு **(80G, Income Tax Excemption)** உண்டு

**S.V. HOME FOR AGED**
#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; Pager : 9610 - 114668
Web Page : http/www.chennaibiz.com/svhome
Email: svhome@chennaibiz.com

## மலடு நீக்கும் மருந்து சாப்பிட்டு குழந்தைப் பெற்ற தம்பதிகள் உண்மை நிகழ்ச்சி!

கீழே கண்ட போட்டோவில் உள்ள தம்பதிகளாகிய நாங்கள் பல ஆண்டுகளாக குழந்தைகள் இல்லாமல் இருந்து பல டாக்டர்களை சந்தித்து தோல்வியாகி, பின் வந்தவாசி டாக்டர் A. அர்ஜீனா டாக்டர் V.A. ஆண்டாள் அவர்களை சந்தித்தோம். என்னுடைய விந்து பரிசோதனையில் உயிரணு இல்லை என்று கூறினார்கள். எனது மனைவியின் பரிசோதனையில் கருத்தரிக்க பல இடைஞ்சல்கள் இருப்பதாக கூறினார்கள். எனவே நாங்கள் இருவரும் மேற்படி டாக்டர்களிடம் மருத்துவ சிகிச்சை பெற்றதில் எனக்கு உயிரணுக்கள் உற்பத்தியாகியும், என்னுடைய மனைவிக்கு மலடு நீங்கியும் குழந்தை பெற்றோம். படத்தில் உள்ள பெண் முதலில் பிறந்தது. பிறகு இரண்டாவதாக ஒரே பிரசவத்தில் இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தது. அதன் பின் மூன்றாவது பிரசவத்தில் பெண் குழந்தை பிறந்துள்ளது.



• உலகப் புகழ் பெற்ற 'மருத்துவதிலகம்' டாக்டர் A. அர்ஜீனா வுடன் திருவண்ணாமலை மாவட்டத்தில் குழந்தை பெற்ற கிருஷ்ணன் ஜெகதாம்பாள் தம்பதிகள்

மேலும் இந்த டாக்டர்கள் ஆண்களில் உயிரணுக்கள் குறைவாக உள்ளவர்களுக்கு அணு உற்பத்தி செய்து, அபிவிருத்தி செய்தும், பெண்களுக்கு மாதவிடாய் பிரச்சனை ஒழுங்கு படுத்தியும், கருப்பை ஓவரிகளை சரி செய்தும் கருக்குழாய் அடைப்புகளை நீக்கியும், கருப்பையிலும் சினைப்பைகளில் உள்ள கட்டிகளை கரைத்தும் குழந்தை பிறக்கச் செய்கிறார்கள். குழந்தை இல்லாத தம்பதிகள் இந்த டாக்டர்களை சந்தித்தால் எங்களைப் போல புத்திரபாக்கியம் அடையலாம்.

நவீன வைத்தியமுறை ஹோமியோபதி - சித்தா - ஆயுர்வேத மலடு நீக்கும் ஆராய்ச்சி

| சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் | செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம். |
|---|---|
| நெ. 9, நெற்குன்றம் பாதை, (மாநில தலைமை தேர்தல் அலுவலகம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை – 600 026 போன் 4833464 STD. 044 | நெ. 7, இராமய்யர் தெரு வந்தவாசி. வீடு: நெ.29, பிராமணர் தெரு, வந்தவாசி, திருவண்ணாமலை மாவட்டம் – 604 408 போன். 25208 STD. 04183 |

# நேசத்தைத் தேடுகிறேன்!



நான்
பாவ நதியில் நீந்திய போது
என் பந்தங்களின்
சாயம் வெளுத்தது

நான் பாச நதியில் நீந்திய போது
என் சொந்தங்களின்
சாயம் வெளுத்தது

நான்
கரையைத் தொடுமுன்
கரைந்து விடுவேனென்று
கருத்துக் கணிப்புகள்!

என்
எல்லைக்கோட்டை
எட்டும் வரை
இளைப்பாறுதல்
எனக்கில்லை

இங்கே–
நிஜத்துக்கும்
நிழலுக்கும்
ஒரே நிறம்
அதனால்தான்
நெருப்புக் கண்ணாடியை
அணிந்து கொண்டு
நேசத்தைத் தேடுகிறேன்

இன்பத்தின்
சுவையறிய
எனக்கொன்றும்
அவசரமில்லை

மனிதர்களை
தோலுரித்துக்காட்டும்
துன்பத்தை
இன்னும் கொஞ்சம்
எனக்குக் கொடு
இறைவா.

— ஆரூர் சேகர்

**பொ**துவாக, மருத்துவமனைகள் பக்கம் சென்றாலே மருந்து வாசனை வயிற்றைக் கலக்கும். ஆனால் இருபத்தியொரு ஆண்டுகளுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட கோவை ஆர்.கே. மருத்துவமனையில் மருந்துக்குக் கூட மருந்து வாசமில்லை. மொத்தம் அறுபது படுக்கைகள். இயற்கை எழில்மிக்க சூழல், டென்னிஸ் கோர்ட், விளையாட்டு மைதானம், நீச்சல் குளம் என்று நவீன சங்கதிகள், அனைவரையும் வசீகரிக்கின்றன. குஷ்பு, வாணி கணபதி, மு. கண்ணப்பன் என்று சினிமா, அரசியல் உலகப் பிரமுகர்கள் அடிக்கடி வந்து செல்லும் இந்த மருத்துவமனையின் முக்கிய விசேஷமே இதன் இயற்கை வைத்திய முறைகள்தான்.

இதன் நிறுவனர் ஆர். கிருஷ்ணசாமி கவுண்டர் தம் இளம் வயதில் அஜீரணத் தொல்லையால் பாதிக்கப்பட்டு, அப்போது காந்தியடிகளின் இயற்கை மருத்துவக் கருத்துக்களில் ஊன்றி தமது வாழ்வில் உண்ணாநோன்பினையும், பத்திய முறைகளையும் அனுஷ்டித்து சுகம் கண்டாராம். அதிலிருந்து வாழ்க்கை முழுக்க இயற்கை உணவையே உட்கொண்டு, அதற்கேற்ப இந்த மருத்துவமனையை ஏற்படுத்தியிருக்கிறார். தொண்ணூற்று நான்கு வயதாகியும் இன்னும் தெளிவுடன் இருக்கிறார் என அறிந்து எடுத்த எடுப்பில் அவரையே சந்தித்து இம் மருத்துவமனை ஆரம்பித்த விதத்தை வினவினோம்.

"ராஜாஜி, காந்திஜி கூடவெல்லாம் நெருக்கமா இருந்தவன் இப்படி ஒரு ஆஸ்பத்திரி ஆரம்பிச்சதுல பெரிசா என்ன அதிசயம்? அப்பவே மதுரைத் தமிழ்ச் சங்கத்துல பண்டிட் பரீட்சை பாஸ் பண்ணினேன். எனக்கு 1330 குறளும் அத்துப்படி. அதுல ரொம்பப் பிடிச்சது மருந்து என்கிற அதிகாரம்தான். 'மருந்தெனவேண்டாவாம்...' 'நோய் நாடி; நோய்முதல் நாடி' என அந்தப் பத்துக் குறளும் படிச்சாலே யாரும் சித்தா, ஆயுர்வேதம், ஆங்கில மருத்துவம்னு போக மாட்டாங்க. அதைத்தான் வேதவாக்கா எடுத்து என் வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தினேன். இதுவரைக்கும் ஒரு 'பொட்டு' மருந்து என் வாயில போனதேயில்லை. வெறும் உணவுக் கட்டுப்பாடுதான். என் குடும்பத்துக்கும் அப்படியே

# மருந்தே இல்லாமல் ஓ

தான். நோய் நொடி எதுவும் கிட்ட தலைவச்சுப் படுத்ததில்லை. இப்படியே நூறு வயசுக்கு மேல வாழ்ந்துட மாட்டேனா? நீங்களே பார்த்துச் சொல்லுங்க!

"நான் பத்தியச் சாப்பாடு சாப்பிட்ட மாதிரி என்கிட்ட ஆலோசனை கேட்டு வர்றவங்களுக்கு உணவையே மருந்தாக்கச் சொன்னேன். அவங்களும் சந்தோஷப்பட்டு, பலன் கிடைச்சதா வந்து சொன்னாங்க. அதுல வளர்ந்த உற்சாகம் இப்படி ஒரு ஆஸ்பத்திரியக் கட்டிப் போட்டேன். இதற்கெல்லாம் காரணம் மகாத்மா காந்திதான். என்னைப் பொறுத்தவரை அவர்தான்



• மருத்துவமனை

முதல் இயற்கை மருத்துவர்."

கிருஷ்ணசாமிக் கவுண்டர் இதுவரை சோப்புப் போட்டுக் குளித்ததே கிடையாதாம். எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் போது மட்டும் சிகைக்காய், அரப்பு உபயோகப்படுத்துகிறாராம்.

**ம**ருத்துவமனையைப் பொறுத்தவரை அதிகாலை 5:30 மணிக்கே அக்னி ஹோத்ரம் ஆரம்பித்து விடுகிறது. அதற்கு முன்னரே நோயாளிகள் எழுந்து ஒரு தம்ளர் நீர் அருந்தி காலைக் கடன்களை முடித்து விடுகின்றனர். பிறகு பிரார்த்தனை, அருகம்புல்சாறு, யோகாசனப் பயிற்சி, ஆரோக்கிய பானம் என நீள்கிறது. இதற்கென மூன்று பேர் அடங்கிய மருத்துவக் குழு. அவர்கள் நம்மிடம் ஏராள விவரங்களைச் சொன்னார்கள்.

"சூர்யோதயம், அஸ்தமனம் இருவேளைகளிலும் அக்னி ஹோத்ரம் செய்கிறோம். சூழல் சுத்தமாக அது அவசியம். இதை ஆரம்பத்தில் நம்ப மறுத்தவர்கள் ஏராளம்.



• மருத்துவர்கள்





• சிறுவர்களுக்கும் உடற்பயிற்சி மருத்துவம்

# மருத்துவமனை!

போபால் விஷவாயுவில் தப்பித்தவர்கள் அக்னி ஹோத்ரம் வளர்த்தார்கள் என்கிற செய்தியறிந்தே நம்பத் துவங்கினர். இங்கே அதிகம் வருபவர்கள் சர்க்கரை வியாதிக்காரர்கள்தான். எமர்ஜென்ஸி கேஸ் எதையும் நாங்கள் எடுப்பதில்லை. எங்களின் நோக்கம் நோய் வராமல் தடுப்பது; வருவதைத் தடுப்பது. அதன்படி அலோபதி முறையில் சோதித்து, இயற்கை வைத்தியமே செய்கிறோம். மண்பட்டி வைத்தியம் இங்கே மிகச் சிறப்பு. கேரளாவில் உள்ளதிலிருந்து மாறுபட்டுச் செய்கிறோம். உடம்பிலேயே நோய் எதிர்ப்பு சக்தி இருக்கிறது. அதனை அதிகப்படுத்திக் 'க்யூர்' பண்ணுவதே இந்த வைத்திய முறை. போதை மருந்து, குடிப்பழக்கம் உள்ளவர்களையும் அட்மிட் செய்து நல்வழிப்படுத்துகிறோம். யோகாவும் இங்கே ஒரு மருத்துவ முறையாக உள்ளது.

"இந்த உணவுப் பழக்க வழக்க முறைகளை அனைவரும் வீட்டிலிருந்தபடியே செய்யலாம்தான். ஆனால் அவர்களின் அலட்சியப்போக்கால் அது நடவாது. அதனாலேயே ஏழு நாள் 14 – 21 நாள் என அவரவர் மனசுக்கு ஏற்ப இந்த வழி முறைகளை ஏற்றுக் கொள்கிற பக்குவம் வரும் வரை இங்கேயே சிகிச்சை தருகிறோம். நாங்கள் அறுவை சிகிச்சை செய்வதில்லை. எல்லாவற்றுக்கும் சர்ஜரி தேவையில்லை என்பது எங்கள் கருத்து. ஒரு பெண்மணிக்கு – மூட்டு மாற்று ஆபரேஷன் செய்தே ஆக வேண்டும் என பிரபல – சென்னை மருத்துவ நிபுணர் சொன்னதை நாங்கள் எங்கள் இயற்கை மருத்துவ முறைப்படி சரிசெய்திருக்கிறோம். அலோபதி உலக மருத்துவ ஆராய்ச்சிக் கழகம் 270 மருந்துகள் இருந்தாலே இந்தியருக்குப் போதும் என்கிறது. ஆனால் இங்கே ஒவ்வொரு நோய்க்கும் ஆயிரக்கணக்கில் மருந்துகள். மருந்துகளே வாழ்க்கையில் அவசியமில்லை என்பதையே நாங்கள் நோயாளிகளுக்கு வலியுறுத்தி வருகிறோம்!"

திரும்பின பக்கமெல்லாம் மருத்துவமனையில் ஆன்மீகம் மணக்கிறது. இந்த மருத்துவமனைக்கு கிருபானந்த வாரியார் வந்து சென்றிருக்கிறார். அவர் வந்து தங்கி ட்ரீட்மெண்ட் எடுத்த அறையையே 'வாரியார் இல்ல'மாக்கியிருக்கிறார்கள்.

மருத்துவமனையின் நிர்வாக அதிகாரி ஆர். மாதவன் நம்பியிடம் இதுகுறித்துப் பேசியபோது,

"நோயாளிகள் தினசரி நடக்க, இங்கே நீண்ட மண்பாதை உண்டு. மழைக் காலங்களில் சேறும் சகதியுமாக ஆகிவிடும். அதற்குத் தார் ரோடு போடுவதற்கே இதுவரை ஒப்புக் கொள்ள மறுத்து விட்டார், பெரியவர் கிருஷ்ணசாமிக் கவுண்டர் இப்போதுதான் கொஞ்சம் 'மெட்டல்' போட்டு வருகிறோம். இயற்கையின்பால் அவருக்கு அப்படி ஈர்ப்பு. இங்கே இலாப நோக்கு இல்லை. எனவே அடிப்படைச் செலவுகளுக்கான குறைந்தபட்சக் கட்டணத்தையே வசூலிக்கிறோம். இங்கே அட்மிஷன் கேட்டு நிறையப் பேர் வருகிறார்கள். என்றாலும் நாற்பது பேருக்கு மேல் நாங்கள் வைத்துக் கொள்வதில்லை. காரணம் அனைவருக்கும் சரியானபடி சிகிச்சையளிக்க வேண்டுமல்லவா!"

கட்டுரை, படங்கள் : **கா.சு. வேலாயுதன்**

கும்? ஜாக்கிரதையாய் இறங்கி தரையில் கால் பாவ, தடுமாறினார்கள். ஈர்ப்பு விசை குறைவு. பூமியுடையதில் இட்டத்தட்ட பாதி. அடியெடுத்தால் கால் இஷ்டத்திற்கு ஓடியது. எம்பினால் நாலு அடி உயரே போய் வந்தார்

**கோ**பக்ஸ் சொன்னதைக் கேட்டு சூர்யாவும் ரஷ்ஷுவும் அதிர்ச்சியுடன் பார்த்தார்கள். கோபக்ஸ் தவறு செய்யாது. கற்பனை பண்ணத் தெரியாது. லாஜிக்கை அடிப்படையாகக் கொண்டே தீர்மானிக்கும் இயந்திரம். புள்ளி விவரங்களின் அடிப்படையிலேயே தீர்மானிக்கும்.

"எப்படி கோபக்ஸ்?"

"டெலஸ்கோப்பை உடைத்த கல் கீழேயிருந்துதான் வந்திருக்கின்றது."

"நோ சான்ஸ்!"

"சொல்கிறேன். நமக்கு எதிர்த் திசையிலிருந்து வந்த கல்தான் டெலஸ்கோப்பை உடைத்தது. அது தரையிலிருந்துதான் வந்திருக்க முடியும். விண்கல் என்றால் அது நம்முடன் ஒத்த திசையில்தான் பயணம் செய்திருக்க முடியும்."

"இல்லை. கோபக்ஸ்!" – அவள் பலவீனமாய்ச் சொன்னாள்.

"இல்லை. நாம் நம்பும்படியெல்லாம் நிஜம் இருக்க வேண்டுமென்பது இல்லை." – சூர்யாவுக்கும் ரஷ்ஷுவுக்கும் இப்போது லேசாய் லப்டப். கோபக்ஸ் கதவைத் திறந்துவிட, கீழே இறங்க ஆரம்பித்தார்கள்.

"ஸ்... ஸ்... ஸ்... ஸ்... ஷ்... ஷ்... ஷ்... ஷ்யூ..." தலையைப் பிய்க்கும் காற்று. அப்பா! மணிக்கு அறுபது கிலோ மீட்டர் வேகமே தாங்க முடியவில்லையே! முந்நூற்று ஐம்பது கிலோ மீட்டர் வேகம் அடித்தால் என்னாகள். எம்பி எம்பி குதித்துப் பார்த்து அந்தச் சூழலுக்குத் தங்களைத் தயார் செய்து கொண்டார்கள். சூர்யா குழந்தையைப் போல வாய் விட்டுச் சிரித்தாள். காற்றின் வேகம் ஆளை இழுத்தது.

பாதத்தில் அழுத்தம் கொடுத்து நிற்க வேண்டியிருந்தது. நின்று கவனித்தார்கள். ஒலியில்லாத உலகம். காற்றின் ஸ்ஸ்ஸ் சப்தம் ஒன்று மட்டுமே எந் நேரமும். உயிரினங்கள் இருக்குமா? என்ன உருவத்திலிருக்கும்? ஏன் வரவில்லை? ஒருவேளை கதைகளில் படிப்பதைப் போல அசந்திருக்கும் ஒரு சந்தர்ப்பத்தில் திடீரென்று சூழ்ந்து கொள்ளுமா? தரை கண்ணுக்கெட்டிய தூரம் வரை உயிர் அசைவுகள் ஏதுமின்றி அமானுஷ்யமாய்த் தெரிந்தது.

கண்ணெதிரே விரியும் சமவெளி, திட்டுத் திட்டாய்ப் பசுமை, பார்க்குமிடமெல்லாம் செம்மண் தரை, செக்கச் செவேலென்று.

# 10 உயிர்களைத் தேடித் தேடி...

தூரத்தில் மலைகளும், குன்றுகளும் புகை படிந்து தெரிந்தன. சற்றுத் தள்ளி ஓடையில் மெல்லிய கீற்றாய் நீரோட்டம். தண்ணீர் மண்ணின் சாரத்தை வாங்கி ரத்த நிறத்தில் ஓடிக் கொண்டிருந்தது. சிலுசிலுவென்று குளிர்காற்று, வானத்தில் பஞ்சுப் பொதி களாய் ஸிரஸ் மேகங்கள். ஓவென்று கத்தி னார்கள். அது தடுப்பின்றி, திரும்பி வராமல் காற்றில் கரைந்து போனது. சூர்யா புது அனுபவமாய் எகிறி எகிறிக் குதித்துக் கொண்டேயிருந்தாள். ஸ்லோ மோஷனில் நாலு அடி மேலே போய் வந்த போது சிலிர்த்துப் போயிற்று.

"இங்கே யார்ரா? நாம்தானே?"

"அங்கே கவனி!" - அவன் சுட்டிக் காட்டிய திசையில் கோபக்ஸ் ராக் கெட்டிலிருந்தபடியே இவர்கள் இறங்கி நின்றதை, நடந்ததை, தொண்டை கிழிய கத்தியதை, சந் தோஷ மிகுதியில் கட்டிப் பிடித்து ஆடியதை, ஒன்று விடாமல் படம்பிடித்து அனுப்பிக் கொண்டிருந்தது.

"ரஷ்ஷு! என் அனு மானம் தவறில்லை. இங்கே ஜீவராசிகள் எதுவுமில்லை. உண்டு என்று நம்புவது மிகை. கடவுள் நம்பிக்கை போல. இங்கே இந்த கிரகம் முழுமைக்கும் நாம் இரண்டே பேர் கள்தான். நாம்தான் இப்போது இந்த கிரகத்தின் தேவதூதர்கள். ஹ... ஹ... ஹ..."

"ஓவென்று தன் பலம் கொண்ட மட்டிலும் எண்பத்தி ஐந்து டெஸிபலில் கத்தினாள். சப்தம் கொஞ்சம் பயணித்து, தடுப்பின்றிக் காணாமல் போனது.

"அக்கா! கத்தாதே...!"

■ செய்யாறு தி. தா. நாராயணன் ■

"பார்! நம்மை இந்நேரம் உலகம் முழுக்க பார்த்துக் கொண்டிருப்பார்கள். உன் அலங்கோலத்தையுந்தான்."

ஆம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்

# பாதை

உன்பாதை யாவுமே
ஒழுங்கான பாதையா?
ஒருபார்வை பாரடா தோழனே — உன்
உள்மாறக் கூறடா தோழனே!
நின்பாதை யாவுமே
நெறியான பாதையேல்
நெருப்பிலே நடந்தாலும் தோழனே — உன்
நிழலாகத் தொடருவேன் தோழனே!

முன்பாதை கூறுவோன்
முறைகேடன் ஆகினால்
முழுப்பாதை கெடநேரும் தோழனே — நம்
முன்னேற்றம் தடையாகும் தோழனே!
தன்பாதை சீரிலாத்
தலைவன்பின் போவதோ
தாய்நாடு மொழியோடு தோழனே—இனத்
தாழ்ச்சிக்கு வழிகோலும் தோழனே!

மண்பாதை யாயினும்
கண்பாதை யாகுமே
மதப்பாதை தெளிவாயின் தோழனே—சாதி
மதப்போதை வெளியேறின் தோழனே!
விண்பாதை யாயினும்
விரிப்பாகும் காலுக்கே
வெறிப்போதை விடநேரின் தோழனே — கை
விரல்கோத்து நடைபோடின் தோழனே!

பொய்ப்பாதை யோடுதான்
பெருட்பாதை ஏழைக்கே
பொருந்தாத பாதையாய்த் தோழனே — வெகு
புறம்பாகிப் போனதே தோழனே!
அன்பான பாதைதான்
அனைவர்க்கும் ஏற்றதாய்
அமைந்ததோர் பாதையாம் தோழனே — இனி
அதில்நாமும் போகலாம் தோழனே!

— தளவை இளங்குமரன்



உலகம் பூராவும். மக்கள் எங்கும் டி.வி.யின் முன்பு. ஆனந்தக் கூச்சல் சில இடங்களில். உணர்ச்சிப் பெருக்கில் சூர்யா. ரஷ்ஷுவை வாழ்த்தி கோஷம் போட்டுக் கொண்டிருந்தார்கள். எந்தக் காலத்திலும் அரசியல்வாதிகள் மக்களை இப்படியேதான் பழக்கி வைத்துக் கொண்டிருப்பார்கள் போலும். சிந்திக்க விட மாட்டார்கள். செவ்வாயில் இருவரையும் ஸ்பேஸ் ஸீட்டில் இல்லாமல் சாதாரண எளிய உடையில் பார்த்து நம்ப முடியாமல் தவித்தார்கள். இந்தியர்களின் சாதனை. மகத்தானவர்கள்!

சூர்யா சற்று தூரம் நடந்து சென்று அங்கே படர்ந்திருந்த தாவரங்கள் ஒன்றிரண்டைப் பிடுங்கி ஆராய்ந்தான். ஒரு வகை பாசியினம்தான். பிரான்ஸ் தூவிய ஸ்போர்களில் வந்திருக்க வேண்டும். சீனாவின் கைங்கர்யத்தால் தரையில் நைட்ரேட்டுகள் பெருமளவு உற்பத்தியாகியிருக்கிறது. பாசிகள் எவ்வளவு வளமாய்க் கிளைத்திருக்கின்றன!

இக் கிரகத்தின் இன்றையச் சூழலுக்கு ஒரு நூறு வருஷங்களுக்கு முன்பாகவே அடி போட்டாயிற்று. அடிபோட்டது இயற்கை மட்டுமல்ல மனிதனும்தான். த சுப்ரீம் பவர்! தற்செயலாகத்தான் கவனித்தான், ரஷ்ஷுவும், கோபக்ஸும் ஒட்டாமல் தூரமாய் நின்று ஏதோ ரகசியம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"ஹேய்! அப்படியென்ன ரகசியம்?"

"நத்திங்... நத்திங்!" - அவசர அவசரமாய் மறுத்தான். அப்புறம் கோபக்ஸிடம் என்னவோ சொல்லிவிட்டு ரஷ்ஷு ஓடிப் போய் ராக்கெட்டின் பக்கவாட்டில் இருந்த ஒரு கதவைத் திறந்து அதன் வயிற்றிலிருந்து சின்னதாய் ஒரு கிளைடர் விமானத்தை இறக்கினான். இந்த மாடல் அவனுக்குப் பரிச்சயமானதுதான். ஓட்டியிருக்கிறான். ஹெலிகாப்டர் போல மேலே கிளம்பலாம். சென்றபின் என்ஜின் இயக்கத்தை நிறுத்தி விட்டு கிளைடராக ஃப்யூயல் இன்றி இன்னைக்கெல்லாம் பறந்து கொண்டிருக்கலாம்.

"சீ... யூ! அக்கா!" - சொல்லிவிட்டு ரஷ்ஷு எகிறி அதன் இருக்கையில் தொற்றினான்.

"டேய்! என்ன இது? இரு நானும் வர்றேன்."

"நோ... சாரி அக்கா! கேரி ஆன் வித் யுவர் ஜாப்."

"வாட் நான்சென்ஸ்? என்னைத் தனி

யாய் விட்டுட்டா போறேன்றே?"

கோபக்ஸ் குறுக்கிட்டது : "சூர்யா! ரஷ்ஷுவைப் போக விடு. நிறைய வேலை இருக்கிறது. உனக்கு வேண்டுமென்றால் ஃபோர்வீலர் ஒன்று இருக்கிறது எடுத்துக் கொள்."

"இல்லை இருவரும் சேர்ந்தே சுற்று வோம்."

"அக்கா! முடியாது. உன் லட்சியம் தரையில் வெஜிடேஷன் பற்றி ஆராய்வது. எனக்கு ஆகாயம். வளிமண்டலத்தில் வேலை. ஓஸோன் அடுக்குகளைப் பற்றித் தெரியணும். புற ஊதாக் கதிர்கள் நுழைந் தால் உயிரினம் தங்குமா?"

"ஹௌ இடியாட்டிக்? தாவரங்கள் செழிப்பாய் வளர்கின்றனவே. ஓஸோன் அடுக்கு இருக்கிறது என்பதற்கு ஆதாரம் தானே இது?"

"விவாதமே வேண்டாம். கம்ப்யூட்டரில் மட்டுமே வெட்டரன் நீ. உனக்குத் தெரிந்த அரைகுறை கேள்வியறிவைக் கொண்டு உயிரியல் துறையில் கரை கண்டதாய்ப் பேசாதே. நம் உயிரியல் விஞ்ஞானிகள் இன்று உலகத்திற்கே சவால் விடக்கூடிய வர்கள்."

"அதுக்காக உங்கள் முட்டாள் ஏற்பாட் டைக் குறைசொல்லக் கூடாதா?" - உரக்க சப்தம் போட்டான்.

கோபக்ஸ் வேகமாய்க் கண்களை மூடித் திறந்தது.

"சூர்யா! நேரத்தை வீணாக்காதே! எங்களுக்கிடப்பட்டிருக்கும் பணி சரியோ தவறோ? உனக்கு வேண்டாம். உன் வேலை எதுவோ அதை மட்டும் பார்."

திகைத்து நின்றாள். ரஷ்ஷு சிரித்த படியே கையை அசைத்து விட்டு கிளை டரைக் கிளப்பி, உயர எழுந்து புள்ளியாகிப் போனான். கோபக்ஸ் போய் சின்னதாய் அந்த ஃபோர் வீலரை தள்ளிக் கொண்டு வந்து சேர்ப்பித்து விட்டு, அதுவும் சொல்லிக் கொள்ளாமல் எஸ்.எ.க்குள் புகுந்து கொண்டது.

நிராதரவாய் நின்றாள். அழுகை முட்டிக் கொண்டு வந்தது. தான் மட்டும் தனியாய் என்ன செய்யப் போகிறோம்? தம்பி, உடன் பிறந்தவன், இது புதிய உலகம், என்னென்ன ஆபத்துக்கள் காத்திருக்கின்றன என்பது தெரியாது. செவ்வாய் ஜீவராசிகளைப் பற்றி கோபக்ஸ் ஏற்கெனவே எச்சரிக்கை செய் திருக்கிறது. ஆனாலும் என்னைத் தனியாய் விட்டு விட்டுப் போய் விட்டானே. நிற்கத் தடுமாறினாள். காற்று சூறாவளியாய் வீசிய டித்தது. இப்போது சற்று வேகம் கூடி விட்டிருக்கிறது.

'ஹூம்!' நான் நினைத்திருக்கும் தம்பி இவனில்லை. வெகுளி, குழந்தை மனசு என்ப தெல்லாம் என் தவறான கணிப்புதான். எதையோ என்னிடம் மறைக்கிறார்கள். ஒரு நிமிடத்தில் தான் அன்னியமாகி விட்டதற் காக வருந்தினாள்.

'ஓ.கே! யாரை நம்பியும் நான் இங்கு வரவில்லை. என்னைத்தான் நம்புகின்றேன். மன உளைச்சல்களை ஓரமாய் ஒதுக்கி விட்டு மளமளவென்று ஆரம்பித்தாள். அங்கிருந்த நீரோடைகளின் பக்கங்களில் சின்னதாய்க் குழிகள் தோண்ட ஆரம்பித் தாள். இந்த வேலையில் மதியம் தாண்டி விட்டது. ஐம்பதுக்கு மேற்பட்ட குழிகள். ஒவ்வொன்றிலும் தான் கொண்டு வந்திருந்த மர வித்துக்களை, பழமர வித்துக்களை ஒவ்வொன்றாய்ப் போட்டு, மண் மூடி, நீர் விட்டு... ஆயிற்று அன்றைய பொழுது இப் படியே கழிந்தது.



"தீபாவளிக்கு எடுத்த புடைவை எனக்கு எப்படி இருக்கு?"
"கடைல இருக்கறப்ப அழகா தெரிஞ்சுது!"
– அம்பை தேவா

மாலை இருட்டுவதற்குள் ரஷ்ஷு இரும்பி வந்து விட்டான். இன்றைக்கு இவனை விடக் கூடாது. ஏன் என்னை தனிமைப்படுத்துகிறார்கள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

"அக்கா! உன் யூகம்தான் சரியாயிருக்கும் போலிருக்கிறது. இந்தக் கிரகத்தில் பாசியைத் தவிர வேறு எந்த ஜீவராசியும் இல்லை போலிருக்கிறது. வேறு செடி கொடிகள் கூட இதுவரை தென்படவில்லை."

"சரிடா! ஏன் என்னை கூட அழைத்துச் செல்ல மறுக்கின்றாய்? நாளை காலை நான் நிச்சயம் வருவேன்."

"சாரி அக்கா! டு மெனி குக்ஸ் ஸ்பாயில் த சூப். நாம் இருவரும் சேர்ந்தால் எதுவும் முடியாது. பேசித்தான் பொழுதை ஓட்டு வோம். வேண்டாம்."

''இல்லை இல்லை!'' – அதற்குள் கோபக்ஸ் குறுக்கிட்டது.

''சூர்யா! நீ ரஷ்ஷுவுடன் செல்ல கீழிருந்து அனுமதியில்லை.''

திடுதிப்பென்று ஒன்றும் சொல்லாமல் ரஷ்ஷு எழுந்து சென்று படுத்து விட்டான். 'சே! இவர்களை எப்படிப் புரிந்து கொள் வது!'



''மாப்பிள்ளை தீபாவளிக்கு எத்தனை நாள் இங்கே தங்கறதா உத்தேசம்?''

''வந்ததும் வராததுமா அதிர்ச்சியான எதையும் உங்ககிட்ட பேச வேணாம்னு பார்க்கிறேன் மாமா!''

– அம்பை தேவா

இன்று விடியற்காலையிலேயே போய் விட்டானாம். என்ன மனிதர்கள்? அந்த ஃபோர் வீலரில் ஏறி உட்கார்ந்தான். வண்டி இலகுவாக பிளாஸ்டிக் ஃபைபரால் செய்யப்பட்டிருந்தது. சோலார் எனர்ஜியி னாலும், பாட்டரிகளினாலும் இயங்கும்படி இரண்டு பேர் உட்கார டிசைன் செய்யப்பட் டிருந்தது. அடிக்கின்ற சூறைக்காற்றில் எடை குறைந்த இந்த வண்டி தாக்குப்பிடிக்குமா? எது வந்தாலும் சமாளித்துத்தான் ஆக வேண்டும். அது முதல் அவள் தொலை தூரங்களுக்குச் சென்று ஆராய்வதையும், பழமர வித்துக்களை நடும் வேலையையும் செய்ய ஆரம்பித்தாள். நிறைய இடங்களைச் சுற்ற வேண்டியிருந்தது.

வெறுமனே செவ்வாயில் உயிரினங்கள் வாழ முடியும் என்று சொன்னால் போதாது. தகவல்கள் நிறைய திரட்ட வேண்டியுள்ளது. இப்போதெல்லாம் ரஷ்ஷுவுடன் பேச அதிக சந்தர்ப்பங்கள் வாய்க்கவில்லை. அவனும் பேசுவதைத் தவிர்த்து வருகிறான். ஏன் கோபக்ஸ் கூடத் தான். நாட்கள் ஆக ஆக தனக்கும் அவர்களுக்குமிடையில் பெரும் திரை விழுந்து விட்டதாகத் தோன்றியது. தன்னை ஒரு சக பயணியாகவாவது கருதக் கூடாதா? 'என்ன அக்கா! சாப்பிட்டாயா? நன்றாகச் சுற்றி னாயா? ஒன்றும் விசேஷமில்லையே' இது போன்ற உப்புப் பெறாத விசாரணைகள் மட்டுமே தன்னிடம். ஆனால் அவர்களுக் குள் பேசிக் கொள்ள நிறைய விஷயங்கள் இருந்தன. அடிக்கடி தனிமையில் ஒதுங்கிப் போய் நிறைய பேசினார்கள். நான் கேட்கக் கூடாதாம்!

இவர்களை எது இப்படி மாற்றியது? அவ ளுக்கும் வைராக்கியம் வந்தது. அனாவசிய மாய் எதுவும் பேசுவதில்லை என்று வாயை இறுக்கிக் கொண்டாள். எப்போதாவது ஒன்றிரண்டு வார்த்தைகள். அதுவும் கோபக்ஸிடம். வர வர ரஷ்ஷுவைப் பார்ப் பதே அரிதாகி விட்டது. இருட்டிய பிறகு கோபக்ஸ் சிக்னல் காட்ட கிளைடரை தரை யிறக்குவான். அதற்குள் சூர்யா தூங்கிப் போயிருப்பாள். காலையில் விடி நேரமே கிளம்பிப் போயிருப்பான்.

இப்படி காலம் நகர ஒருநாள் தற்செய லாக இடையில் விழிப்பு வந்ததால் ரஷ்ஷுவைப் பார்த்து விட்டாள். பார்த் தவுடன் அழுகை வந்தது. ஓடிச் சென்று கட்டிக் கொண்டாள். முகம் கை கால் களெல்லாம் கறுத்துப் போய் இதழ் ஓரங்கள் வெடித்து புண்ணாகி, இளைத்துப் போயி ருந்தான். கண்கள் குழி விழுந்து, கண்ணைச் சுற்றி கருவளையம்.

''ஏண்டா இப்படி இருக்கே? என்ன பண்றேன்னு தெரியலையே.''

"ஒண்ணுமில்லை. வேலைதான் அக்கா!" – அத்துடன் பேச்சை வளர்த்தாமல் சோர் வாய்ச் சென்று படுக்கையில் விழுந்தான். இவள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கோபக்ஸ் அவனை எழுப்பி முதல் சேம் பருக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண் டது!

டாமிட்! அப்படி என்ன ரகசியம் இருவருக்குள்ளும்?

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

இரண்டாம் அத்தியாயம்

## பாட்டனும் பேரனும்

பின்னால் ரதத்தில் வந்த கிழவர் சமிக்ஞை செய்யவே, ஆதித்த கரிகாலன் குதிரையைத் திருப்பிக்கொண்டு அவர் வீற்றிருந்த ரதத்தின் அருகில் சென்றான்.

"குழந்தாய்! கரிகாலா! நான் இவ்விடத்தில் உங்களிடம் விடைபெற்றுக்கொண்டு திருக்கோவலூர் போக எண்ணுகிறேன். போவதற்கு முன்னால் உன்னிடம் சில முக்கிய விஷயங்கள் சொல்ல வேண்டும். சற்றுக் குதிரையிலிருந்து இறங்கி அந்த அரச மரத்தடியிலுள்ள மேடைக்கு வா!" என்றார்.

"அப்படியே ஆகட்டும், தாத்தா!" என்று ஆதித்த கரிகாலன் குதிரையிலிருந்து கீழே குதித்தான்.

கிழவரும் ரதத்திலிருந்து இறங்கினார்.

இருவரும் அரச மரத்தடி மேடைக்குச் சென்றார்கள்.

அப்போது பார்த்திபேந்திரன் கந்தமாறனைப் பார்த்து, "நல்லவேளையாகப் போயிற்று. இந்தக் கிழவர் விடேன் தொடேன்' என்று நம்முடன் நெடுகிலும் வந்து விடுவாரோ எனப் பயந்துகொண்டிருந்தேன்!" என்றான்.

"அப்படித் தொடர்ந்து வந்தால் இவரை வெள்ளாற்றின் பிரவாகத்தில் தள்ளி முழுக அடித்து விடுவது என்று நான் எண்ணியிருந்தேன்!" என்றான் கந்த



மாறன்.

இருவரும் தங்கள் பேச்சில் தாங்களே சிரித்து மகிழ்ந்தார்கள்.

ஆதித்த கரிகாலனைப் பார்த்து மலைநாடு உடையாராகிய திருக்கோவலூர் மலையமான் சொல்லலுற்றார்:-

''ஆதித்தா! இன்றைக்கு இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் நீ பிறந்தாய்! திருக்கோவலூரில் என்னுடைய அரண்மனையிலேதான் பிறந்தாய்! அச்சமயம் நடந்த கொண்டாட்டங்கள் நேற்று நடந்ததுபோல் எனக்கு ஞாபகமிருக்கின்றன. உன்னுடைய குலத்தைச் சேர்ந்தவர்களும் என்னுடைய குடியைச் சேர்ந்தவர்களும் சோழ நாட்டையும் தொண்டை நாட்டையும் சேர்ந்த சிற்றரசர்கள் பலரும் வந்திருந்தார்கள். இவர்கள் எல்லோரையும் சேர்ந்த வீரர்கள் முப்பதினாயிரம் பேர் வந்திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் நடந்த விருந்தின் விமரிசையைச் சொல்லி முடியாது. உன் தந்தையின் பட்டாபிஷேக வைபவத்தின்போது கூட அத்தகைய விருந்துகளும் கோலாகலங்களும் நடைபெறவில்லை. என் பொக்கிஷத்தில் என் முன்னோர்கள் காலத்திலிருந்து நூறு வருஷங்களாகச் சேர்த்து வைத்திருந்த பொருள் அவ்வளவும் அந்த மூன்று நாள் கொண்டாட்டத்தில் தீர்ந்து போய்விட்டது!

"அச்சமயம் உன்னுடைய கொள்ளுப் பாட்டனாராகிய பராந்தக சக்கரவர்த்தியே திருக்கோவலூருக்கு வந்திருந்தார். உன் பெரிய பாட்டனார் கண்டராதித்தரும் உன் தந்தை சுந்தர சோழரும் வந்திருந்தார்கள். ஆண் குழந்தை பிறந்த செய்தி அறிந்ததும் அவர்கள் அனைவரும் அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை. சோழர் குலத்தை விளங்க வைப்பதற்கு நீ பிறந்து விட்டாய் என்று குதூகலம் அடைந்தார்கள். உன் பாட்டனின் மூத்த தமையன்மார்களுக்கு அதுவரையில் சந்ததியில்லை. அரிஞ்சயனுக்கும் உன் தகப்பன் ஒரே மகனாக விளங்கினான். அவன் உன் பிராயத்தில் மன்மதனை யொத்த அழகுடன் விளங்கினான். சோழ குலத்திலோ அல்லது தமிழகத்துச் சிற்றரசர் வம்சத்திலோ அவ்வளவு அழகுடைய பிள்ளையை யாரும் அதற்கு முன் கண்டதில்லை. இதனால் உன் தந்தைக்குச் சில சங்கடங்களும் நேர்ந்தன. குடும்பத்தார் அனைவருக்கும், அவன் செல்லப் பிள்ளையாக இருந்தான். அரண்மனைப் பெண்டிர்கள் அவனுக்குப் பெண் வேடம் போட்டுப் பார்த்து மகிழ்ந்தார்கள். 'இவன் மட்டும் பெண்ணாய்ப் பிறந்திருந்தால்?' என்று பேசிப் பேசிப் பூரித்தார்கள். உன் தந்தைக்குத் தங்கள் பெண்ணைக் கொடுப்பதற்கு இலங்கை முதல் விந்திய பர்வதம் வரையில் உள்ள மன்னாதி மன்னர்களும் சிற்றரசர்களும் தவம் கிடந்தார்கள். அர்ச்சுனனையும் மன்மதனையும் நிகர்த்த அழகன் அவன் என்பதுடன் சோழ சிங்காதனத்துக்கு உரியவன் என்ற எண்ணத்தினாலும் அவ்வளவு ஆர்வத்துடன் இருந்தார்கள். உன் தந்தையை மருமகனாகப் பெறும் பேறு கடைசியில் எனக்குக் கிடைத்தது.

"எங்கள் வம்சத்தில் நாங்கள் ஆண் ஆகட்டும், பெண் ஆகட்டும் மேனி அழகுக்குப் பெயர் போனவர்கள் அல்ல. ஆண் பிள்ளைகள் உடம்பில் எத்தனைக்கெத்தனை போர்க் காயங்களைப் பெறுகிறோமோ, அவ்வளவுக்கு அழகுடையவர்களாக எண்ணிக் கொள்வோம். எங்கள் குலத்துப் பெண்களுக்குக் கற்பும் குணமும் தான் அழகும் ஆபரணமும். உன் தந்தைக்கு என் மகளைக் கல்யாணம் செய்வதென்று தீர்மானித்தபோது மலையமானாடு முழுதும் அல்லோலகல்லோலப் பட்டது. அவ்வளவுக்குத் தமிழகத்துச் சிற்றரசர்கள் எல்லாரும் அசூயை கொண்டார்கள். அதை நான் பொருட்படுத்தவில்லை. மூன்று உலகமும் பிரமிக்கும்படியாக உன் பெற்றோர்களின் திருமணம் தஞ்சையில் நடந்தது. என்றாலும், அப்போது நடந்த கொண்டாட்டத்தைக் காட்டிலும் நீ பிறந்தபோது திருக்கோவலூரில் நடந்த கொண்டாட்டந்தான் அதிக குதூகலமாயிருந்தது. உனக்கு என்ன பெயர் வைப்பது என்பது பற்றிக் குதூகலமான சர்ச்சை நடந்தது. சிலர், உன் குலத்து முன்னோரில் மிகப் புகழ் பெற்ற கரிகால் வளவன் பெயரை இட வேண்டும் என்றார்கள். நானும் இன்னும் சிலரும்

உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் பெயரைத்தான் வைக்க வேண்டும் என்று வற்புறுத்தினோம். கடைசியில் இரண்டை யும் சேர்த்து 'ஆதித்த கரிகாலன்' என்று உனக்கு நாமகரணம் செய்தார்கள்.

"இதோ பார்! ஆதித்தா! திருநாவலூரின் கோவில் சிகரம் தெரிகிறது. நம்பி ஆரூரர் சுந்தர மூர்த்தி அடிகள் பிறந்த ஸ்தலம் அது. அங்கே, இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உன் பெரிய பாட்டனார் இராஜாதித்ய சோழர் முகாம் செய்திருந்தார். கதைகளிலும் காவியங் களிலும் வரும் எத்தனையோ வீரர்களைப் பற்றி கேட்டறிந்திருக்கிறேன். இந்த வீரத் தமிழகத்தில் எவ்வளவோ வீரர்களைப் பார்த்துமிருக்கிறேன். ஆனால் இராஜா தித்யரைப் போன்ற இன்னொரு வீரரைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. போர்க்களத்தில் அவர் போர் செய்வதைப் பார்த்தவர்கள் யாராயிருந்தாலும், அப்படித்தான் சொல்லுவார்கள்.

"ஒரு மாபெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வட நாட்டின் மீது படை எடுத்துச் செல்ல அவர் இங்கே ஆயத்தம் செய்துகொண்டிருந்தார். இரட்டை மண்டலத்து அரசனாகிய கன்னரதேவனை முறியடித்து, மானிய கேடம் என்னும் அவனுடைய தலைநகரைத் தரைமட்ட மாக்க வேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந்தார். முன்னொரு காலத்தில் பல்லவ குலத்து மாமல்ல சக்கரவர்த்தி வாதாபி நகரை அழித்ததுபோல், மானிய கேட நகரை அடியோடு அழித்தால்தான் இரட்டை மண்டலத்தாரின் கொட்டம் அடங்கும் என்றும், தானும் மாமல்லரைப் போல் புகழ் பெறலாம் என்றும் இராஜா தித்யர் எண்ணினார். அதற்கு வேண்டிய மாபெரும் சைன்யத்தைத் திரட்டுவதென்றால் இலேசான காரியமா? மாமல்லர் ஏழு வருஷ காலம் படை திரட்டியதாகச் சொல்லுவார்கள். அவ்வளவு காலம் தனக்கு வேண்டியதில்லையென்றும் மூன்று அல்லது நாலு ஆண்டுகள் போதும் என்றும் இராஜாதித்யர் கூறினார். படை திரட்டிச் சேர்ப்பதற்கும், திரட்டிய படை களுக்குப் போர்ப் பயிற்சி தருவதற்கும் தகுந்த பிரதேசம் இந்தக் கெடிலம் ஆற்றுக்கும் தென் பெண்ணை நதிக்கும் இடைப்பட்ட நாடுதான் என்று தேர்ந்தெடுத்தார்.

"ஆதித்தா! அந்த நாளில் இந்த இரு நதிகளுக்கும் இடையிலுள்ள பிரதேசத்தை நீ பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. அந்தக் காட்சிகளைப் பார்த்தவர்களோ உயிர் உள்ள வரையில் அதை மறக்க மாட்டார்கள். திருநாவலூரில் இராஜாதித்யர் முப்பதினாயிரம் வீரர்களுடன் தங்கியிருந்தார். பெண்ணையாற்றங்கரையிலுள்ள முடியூரில் சேர நாட்டுச் சிற்றரசன் வெள்ளன் குமரன் இருபதினாயிரம் வீரர் களுடன் முகாம் செய்திருந்தான். உன் பாட்டன் அரிஞ்சயன் என்னுடன் திருக் கோவலூரில் இருந்தான். நானும் அரிஞ் சயனும் ஐம்பதினாயிரம் வீரர்களை ஆயத்தம் செய்தோம். இன்னும் கொடும் பாளூர்ப் பெரிய வேளான், இன்று சோழ நாட்டுக்குச் சனியனாக முளைத்திருக்கும் பழுவேட்டரையன், கடம்பூர் சம்புவரை யன், இந்தத் திருமுனைப்பாடி நாட்டின் சிற்றரசனான முனைய தரையன், மழ நாட்டு மழவரையன், குன்றத்தூர்க் கிழான், வைதும்பராயன் முதலியவர்கள் தத்தம் படைகளுடன் இந்த இரண்டு நதிகளுக்கும் இடையில் தங்கியிருந்தார்கள். யானைப் படைகளும், குதிரைப் படைகளும், தெரிந்த கைக்கோளரின் மூன்று கைப் படைகளும் இங்கே முகாம் போட்டிருந் தன. இப்படித் தங்கியிருந்த படைகளுக் குள்ளே அடிக்கடி பயிற்சிப் போர்கள் நடக்கும். யானைகளோடு யானைகள் மோதும்போது பூகம்பம் வந்து விட்ட தாகத் தோன்றும். குதிரைப் படைகளின் அணிவகுப்புகள் வேல் பிடித்த வீரர் களுடன் பாய்ந்து செல்லுங்கால் எழும் சப்தம், பிரளய கால சமுத்திரம் பொங்கி வருவது போலிருக்கும். வீரர்கள் வில்லு களிலிருந்து அம்புகள் விட்டுப் பழகிக் கொள்ளும்போது அந்தச் சரமாரியினால் வானமே மறைந்து விடும். எதிரிப் படை களைத் தாக்குவதற்காக ஆயிரமாயிரம் வீரர்கள் 'நாவலோ நாவல்' என்று ஏக காலத்தில் கர்ஜித்துக்கொண்டு கிளம்பிப் பாயும்போது உலகத்தின் முடிவு நெருங்கி விட்டதாகவே தோன்றும். இதையெல்லாம் வேடிக்கை பார்ப்பதற்குத் திரள் திரளாக ஜனங்கள் வருவார்கள்.

இந்தத் திருமுனைப்பாடி நாட்டிலும் நடுநாட்டிலும் உள்ள ஜனங்கள் மிக நல்லவர்கள். அதோடு வீரம் மிகுந்தவர்கள். இங்கே படை திரண்டிருந்தபோது அவர்களுடைய விவசாயத்துக்குப் பெரும் குந்தகங்கள் நேர்ந்தன. அதை எல்லாம் அவர்கள் பொருட்படுத்தவில்லை. இத் தகைய மக்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்வதற்காகவே இராஜாதித்யர் இந்த இரண்டு நாட்டிலும் பல ஏரிகளைத் தோண்டுவித்தார். கொள்ளிடத்திலிருந்து புதிய ஆறு வெட்டிக்கொண்டு வந்து வீர



நாராயணபுரத்து ஏரியில் தண்ணீர் நிரப்புவதற்கும் ஏற்பாடு செய்தார். ஆதித்தா! அந்த ஏரியின் வளத்தினால் பெருநன்மை அடைந்தவன் கடம்பூர் சம்புவரையன். அவன் அன்றைக்கு இராஜாதித்யரின் அடிபணிந்து நின்ற நிலையையும் இன்று அடைந்திருக்கும் செல்வச் செருக்கையும் ஒப்பிட்டுப் பார்த்தால் எனக்குப் பெரு வியப்பு உண்டாகிறது...!"

ஆதித்த கரிகாலன் குறுக்கிட்டு, "தாத்தா! சம்புவரையர் செருக்கைப் பற்றித் தங்களுக்கு என்ன கவலை? தக்கோலத்தில் நடந்த யுத்தத்தைப் பற்றிச் சொல்லுங்கள். இந்தக் கெடிலக் கரையில் திரட்டிய மாபெரும் சைனியம் எப்போது இங்கிருந்து புறப்பட்டது? அவ்வளவு முன்னேற்பாடுகள் செய்திருந்தும், என் பெரிய பாட்டனார் அவ்வளவு பெரிய மகா வீரராயிருந்தும், ஏன் நம் படைகள் தக்கோலத்தில் தோல்வியுற்றன? தாங்களும் அந்தப் போரில் கலந்து போரிட்டவர் அல்லவா? ஆகையால் நேரில் பார்த்துத் தெரிந்துகொண்டிருப்பீர்களே?" என்றான்.

"ஆம்; நானும் அந்தப் போர்க்களத்தில் இருந்தேன். அதைப் பற்றித்தான் உனக்குச் சொல்லப் போகிறேன்.

''இராஜாதித்யர் இங்கே பல வகைப் படைகள் திரட்டித் தூர தேசங்களுக்குச் சென்று போர் செய்வதற்குப் பயிற்சி அளித்துக்கொண்டிருந்தார் அல்லவா? சில காரணங்களினால் உத்தேசித்திருந்த காலத்துக்குள் அவர் புறப்பட முடியவில்லை. இலங்கையில் மறுபடியும் போர் மூண்டதாகச் செய்தி வந்தது. அதை வெற்றிகரமாக முடிப்பதற்கு மேலும் படைகளை அனுப்ப வேண்டியிருந்தது. தெற்கே ஒரு பகைவனை வைத்துக்கொண்டு வடக்கே நெடுந்தூரம் சோழ நாட்டின் முக்கிய



சேனா வீரர்களும் தளபதிகளும் போவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லை. இலங்கைப் போர் முடிந்ததாகச் செய்தி வந்த பிறகு புறப்படலாம் என்று கூறி வந்தார். இராஜாதித்யரும் தந்தையின் வார்த்தையைத் தட்ட முடியாமல் பொறுமையுடன் காத்திருந்தார். ஆனால் பகைவர்கள் அவ்விதம் காத்திருக்க இணங்கவில்லை.

இரட்டை மண்டலச் சக்கரவர்த்தி கன்னரதேவனும் அதே சமயத்தில் சோழ நாட்டின் மீது படை எடுப்பதற்காகப் பெரிய சைன்யம் சேர்த்துக்கொண்டு வந்தான். அந்த மாபெரும் சைன்யத்துடன் அவன் தெற்கு நோக்கிப் புறப்பட்டு விட்டான். கங்க நாட்டு மன்னன் பூதுகனும் தன் பெரும் படையுடன் கன்னர தேவனோடு சேர்ந்து கொண்டான். வட கடலும் தென் கடலும் ஒன்று சேர்ந்தாற்போல் இரட்டை மண்டல சைன்யமும் கங்க நாட்டுப் பூதுகன் சைன்யமும் சேர்ந்து ஒரு மகா சமுத்திரமாகி முன்னேறி வந்தது. அந்தச் சமுத்திரத்தில் யானைகளாகிற திமிங் கலங்கள் ஆயிரக்கணக்கிலும் குதிரைகளாகிய மகர





மீன்கள் பதினாயிரக் கணக்கிலும் இருந்தன. பிரளய காலத்தில் ஏழு கடலும் சேர்ந்து பொங்குவது போல் பொங்கி முன்னேறி வந்த அந்தச் சேனா சமுத்திரம் தென்னாட்டை அடியோடு மூழ்க அடித்து விடும் என்று தோன்றியது. அந்தச் சைன்யத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு முன்னால் வாயு வேக மனோ வேகமாக

ஓடி வந்து அறிவித்த நம் ஒற்றர்கள் அவ்வாறு சொன்னார்கள்.

"ஆனால் இதுவும் ஒரு விதத்தில் நல்லதோ என்று பராந்தக சக்கரவர்த்தி கூறினார். நம்முடைய சைன்யங்களைத் தொலை தூரம் பிரயாணம் செய்யப் பண்ணி, பிரயாணக் களைப்புடன் பகைவர்களின் நாட்டில் எதிரி சைன்யத்துடன் போர் புரியச் செய்வதைக் காட்டிலும், எதிரி சைன்யங்களை நமது நாட்டுக்குச் சமீபமாக இழுத்து, அவர்களை நாலாபுறமும் மடக்கி அதம் செய்வது தான் நல்ல போர்முறை என்று சக்கரவர்த்தி கூறினார். எதிரி சைன்யம் வடவேங்கடம் வரை நெருங்கி விட்டதென்று தெரிந்த பிறகுதான் பிரயாணப்படுவதற்கு அனுமதி கொடுத்தார்.

"அனுமதி கிடைத்ததோ, இல்லையோ, இராஜாதித்யர் புறப்பட்டு விட்டார். மூன்று லட்சம் காலாள் வீரர்களும், ஐம்பதினாயிரம் குதிரை வீரர்களும், பதினாயிரம் போர் யானைகளும், இரண்டாயிரம் ரதங்களும், முந்நூற்றிருபது தளபதிகளும், முப்பத்திரண்டு சிற்றரசர்களும் அப்பெரும் சைன்யத்தில் சேர்ந்து சென்றார்கள். அவர்களிலே ஒருவனாகச் செல்லும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது. ஆனால் உயிர் பிழைத்துத் திரும்பி வந்த துர்ப்பாக்கியசாலியும் ஆனேன்.

"மூன்று நாள் பிரயாணத்துக்குப் பிறகு காஞ்சிக்கு வடக்கே இரண்டு காத தூரத்தில் தக்கோலம் என்னும் இடத்தில் நம் படைகளும் எதிராளிகளின் படைகளும் போர்க்களத்தில் சந்தித்தன!

"ஆதித்தா! புராணங்களில் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தம் பற்றிக் கேட்டிருக்கிறோம். இராம ராவண யுத்தம் பற்றியும் பாண்டவர் கௌரவர் யுத்தம் பற்றியும் அறிந்திருக்கிறோம். தக்கோலத்தில் நடந்த கோர யுத்தத்தை நேரில் பார்த்தவர்கள் அந்த யுத்தங்கள் எல்லாம் அற்பமானவை என்றே சொல்லுவார்கள். நம்முடைய படைகளைக் காட்டிலும் எதிரிகளின் படைகள் சுமார் இரண்டு மடங்கு அதிகமாயிருந்தன. ஐந்து லட்சம் வீரர்களும் முப்பதினாயிரம் போர் யானைகளும் அச் சைன்யத்தில் இருந்ததாகத் தெரிந்தது. இருந்தால் என்ன? உன்னுடைய பெரிய பாட்டனார் இராஜாதித்யரைப் போன்ற சேநாதிபதி அந்தச் சைனியத்தில் இல்லை. ஆகையால் வீரலக்ஷ்மியும் ஜயலக்ஷ்மியும் நம்முடைய பக்கத்திலேயே இருந்து வருவதாகத் தோன்றியது.

"பத்து நாள் வரையில் யுத்தம் நடந்தது. இரு பக்கத்திலும் இறந்து போன வீரர்களைக் கணக்கு எடுப்பது அசாத்தியமாயிற்று. போர்க் களங்களில் கரிய குன்றுகளைப் போல் யானைகள் இறந்து விழுந்து கிடந்தன. இரு பக்கத்திலும் சேதம் அதிகமாயிருந்தாலும், எதிரிகளின் கட்சியே விரைவில் பலவீனமடைந்தது. இதற்குக் காரணம் என்னவென்பதை எதிரிகள் கண்டு கொண்டார்கள். புலிக்கொடியைக் கம்பீரமாகப் பறக்க விட்டுக்கொண்டு இராஜாதித்யரின் யானை போகுமிடமெல்லாம் ஜயலக்ஷ்மியும் தொடர்ந்து போகிறாள் என்பதை அறிந்துகொண்டார்கள். எங்கெங்கே நமது படையில் சோர்வு ஏற்படுகிறதாகத் தென்பட்டதோ அங்கே இராஜாதித்யரின் யானை போய்ச் சேர்ந்தது. அந்த யானையையும் அதன் மீது வீற்றிருந்த வீர புருஷரையும் பார்த்ததும் நம் வீரர்கள் சோர்வு நீங்கி மும்மடங்கு பலம் பெற்று எதிரிகளைத் தாக்கினார்கள். இதையெல்லாம் பத்து நாளும் கவனித்து வந்த பகைவர்கள் ஒரு படுபாதகமான சூழ்ச்சி செய்தார்கள். அது சூழ்ச்சி என்று பின்னால்தான் தெரிய வந்தது. சூழ்ச்சி செய்தவனும் அதை நிறைவேற்றி வைத்தவனும் கங்க மன்னன் பூதுகன்தான். திடீரென்று அந்தப் பாதகன் தன் யானையின் மீது சமாதானக் கொடியைப் பறக்க விட்டுக்கொண்டு இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக்கொண்டு 'சரணம்! சரணம்!' என்று கூவிக்கொண்டு வந்தான். அச்சமயம் இராஜாதித்யரே சமீபத்தில் இருந்தார். புலிக்கொடி பறந்த அவருடைய யானையின் அம்பாரியைப் பார்த்த பின்னரே பூதுகன் அவ்வாறு செய்திருக்க வேண்டும். மகா வீரராகிய இராஜாதித்யர் இவ்வாறு ஒரு பகை மன்னன் 'சரணாகதி'

என்று சொல்லிக்கொண்டு வருவதைப் பார்த்ததும் மனம் இளகி விட்டார். இரட்டை மண்டலச் சக்கரவர்த்தியே போரை நிறுத்தச் சமாதானம் கோரு கிறாரா அல்லது அவரைப் பிரிந்து இந்தப் பூதுகன் மட்டும் நம்முடன் சேர வரு கிறானா என்று தெரிந்து கொள்ள விரும் பினார். ஆகையால் சங்கநாதம் செய்து தன்னைச் சுற்றி நின்ற மெய்க்காப்பாளரை விலகச் செய்தார். பூதுகன் ஏறியிருந்த யானையைத் தாம் ஏறியிருந்த யானைக்கு அருகில் வரும்படி சமிக்ஞை செய்தார். பூதுகன் இராஜாதித்யரின் அருகில் வரும் வரையில் கை கூப்பிய வண்ணம் வந்தான். அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகியதையும் இராஜாதித்யர் பார்த்தார். இதனால் அவருடைய மனம் இன்னும் இளகி விட்டது.

*'தொழுத கையுள்ளும், படையொ டுங்கும், ஒன்னார்*
*அழுத கண்ணீரும் அனைத்து'*

என்னும் தமிழ்நாட்டுப் பெரும்புலவரின் வாக்கு அச்சமயம் இராஜாதித்யரின் ஞாபகத்தில் இருக்கவில்லை. கண்ணீரைக் கண்டு கரைந்துவிட்டார். இன்னும் சமீப மாகப் பூதுகனை வரவிட்டு, 'என்ன சேதி?' என்று கேட்டார். அதற்கு அவன் கூறிய மறுமொழி இராஜாதித்யரை அருவருப்புக் கொள்ளும்படி செய்தது. இரட்டை மண் டலப் படைகளுக்குத் தோல்வி நிச்சயம் என்று தெரிந்து விட்டதால் சரணாகதி அடைந்து விடும்படி கன்னர தேவனிடம் தான் கூறியதாயும், அவன் அதை மறுத்து விட்டபடியால் தான் மட்டும் தனியே பிரிந்து வந்து சரணாகதி அடையத் தீர்மானித்ததாகவும் பூதுகன் கூறினான். இதைக் கேட்டதும் இராஜாதித்யர் அவனைக் கடுமையாக நிந்தித்தார்.

"அத்தகைய நீசனைத் தாம் தம் கட்சி யில் சேர்த்துக் கொள்ள முடியாது என்றும், திரும்பிப் போகும்படியும் கூறிக் கொண்டிருக்கும்போதே, பூதுகன் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் அந்தப் பயங்கரமான வஞ்சகச் செயலைப் புரிந்து விட்டான். மறைவாக வைத்திருந்த வில் லையும் அம்பையும் எடுத்து, வில்லில் நாணேற்றி அம்பைப் பூட்டி எய்து விட் டான். அந்தக் கொடிய விஷம் தோய்ந்த அம்பு எதிர்பாராத சமயத்தில் இராஜாதித் யரின் மார்பில் பாய்ந்ததும் அவர் சாய்ந்தார். இப்படிப் பட்ட வஞ்சனையை யாரும் எதிர்பார்க்கவில்லையாதலால் சுற்றிலும் நின்ற வீரர்கள் என்ன நேர்ந்தது என்பதையே சிறிது நேரம் தெரிந்து கொள்ளவில்லை. இராஜாதித்யர் பூது கனைத் திரும்பிப் போகும்படி கட்டளை யிட்டது மட்டும் அவர்கள் காதில் விழுந் தது. உடனே பூதுகன் தன் யானையை விரட்டி அடித்துக்கொண்டு ஓடிப் போனான்!

"இராஜாதித்யர் யானை மேலிருந்த படியே மரணமடைந்தார் என்ற செய்தி பரவியதும் நமது படையைச் சேர்ந்தவர்கள் அனைவருக் கும் தனித் தனியே தலையில் இடி விழுந் தது போல் ஆகிவிட்டது. அந்த மாபெரும் துயரத்தினால் யுத்தத்தையே மறந்து விட் டார்கள். சிற்றரசர்கள், தளபதிகள், படை வீரர்கள் எல்லாருமே செயல் இழந்து புலம்பத் தொடங்கி விட்டார்கள். அந்த நிலைமையில் பகைவர்களின் கை ஓங்கி விட்டதில் ஆச்சரியம் இல்லையல்லவா? சிறிது நேரத்துக்கெல்லாம் நமது சைனியம் பின் வாங்க வேண்டிய அவசியம் ஏற் பட்டு விட்டது. ஓடுகிறவர்களைத் துரத்து வது எல்லாருக்குமே எளிதுதானே? அப்படி ஓடி வந்தவர்களில் நானும் ஒரு வன்தான்! இந்தக் கெடில நதிக்கரை வரை யிலே கூடப் பகைவர்களின் சைனியம் வந்துவிட்டது. இங்கே வந்த பிறகுதான் நாங்கள் சுய உணர்வு பெற்றுத் திரும்பி நின்றோம். பகைவர்களைத் தடுத்து நிறுத்தி னோம். நான் திருக்கோவலூரிலிருந்து என் குடும்பத்தாரை அழைத்துக்கொண்டு போய் மேற்கே மலை நாட்டில் இருக்கும் என்னுடைய கோட்டையிலே விட்டேன். அந்த மலைச்சாரலிலேயே படைகளைத் திரட்டினேன். இந்தக் கெடில நதி வரை யில் வந்துவிட்ட பகைவர்களை அவ்வப்போது தாக்கிக்கொண்டு வந்தேன். ஆயினும் அப்போது வந்த பகைவர்கள் பல வருஷ காலம் இந்தப் பகுதியை விட் டுப் போகவில்லை. அங்குமிங்கும் தங்கித் தொல்லை கொடுத்துக் கொண்டுதானிருந் தார்கள். காஞ்சி நகர் அவர்கள் வசத்

திலேதான் இருந்தது. மூன்று ஆண்டு களுக்கு முன்னால் நீ வீரபாண்டியனை முறியடித்த பிறகு இந்தப் பக்கம் வந்துதான் காஞ்சி நகரை மீட்டாய்..."

ஆதித்த கரிகாலன் மீண்டும் குறுக் கிட்டு, "தாத்தா! இதெல்லாம் எனக்கு முன் னமே தெரிந்ததுதான்! ஆனால் தக்கோலப் போரைப் பற்றியும் இராஜாதித்யர் வர லாற்றையும் எத்தனை தடவை கேட் டாலும் எனக்கு அலுப்பதில்லை. இப்போது இராஜாதித்யரைப் பற்றி எனக்கு எதற்காக நினைப்பூட்டினீர்கள்? அதைச் சொல்லுங்கள்!" என்றான்.

"குழந்தாய்! உன் பெரிய பாட்டனார் இராஜாதித்யர் சோழ சாம்ராஜ்யத்தை இலங்கை முதல் கங்கை நதி வரையில் விஸ்தரிக்க ஆசை கொண்டிருந்தார். அந்த ஆசை நிறைவேறாமலே உயிர் நீத்தார். அவரைப் போன்ற மகா வீரன் என் பேரன் ஆதித்த கரிகாலன் என்று நாடு நகரமெல்லாம் பேச்சாயிருக்கிறது. அவர் சாதிக்க நினைத்த காரியத்தை நீ சாதிக்கப் போகிறாய் என்று இத் தமிழகமெங்கும் ஜனங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இராஜாதித்யரைப் போல் நீயும் வஞ்சகத்திற்கு ஏமாந்து போகக் கூடாது என்பதற்காகவே அவருடைய வரலாற்றை உனக்கு நினைவூட்டினேன்..."

"தாத்தா! என் பெரிய பாட்டனார் போர்க்களத்தில் பகைவர்களின் வஞ் சனையினால் உயிரை இழந்தார். அதை இப்போது எனக்கு எதற்காக நினை வூட்டுகிறீர்கள்? நான் போர்க்களத்துக்குப் போகவில்லையே? என்னை வஞ்சிக்கக் கூடிய பகைவர்களின் மத்தியிலும் போக வில்லையே? என் தந்தையின் அத்யந்த நண்பர்களையல்லவா பார்க்கப் போகி றேன்? அவர்கள் என்னை எந்த விதத்தில் எதற்காக வஞ்சிக்கப் போகிறார்கள்?" என்றான் ஆதித்த கரிகாலன்.

"கேள், கரிகாலா! எதிரிகள் தொழுத கையிலும் அழுத கண்ணீரிலும் கொடிய ஆயுதம் இருக்கக் கூடும் என்று கூறிய திரு வள்ளுவர் பெருமான், வெளிப்பகையைக் காட்டிலும் உட் பகை கொடியது என்றும் கூறியிருக்கிறார்:

**'வாள்போல் பகைவரை அஞ்சற்க**
**அஞ்சுக**
**கேள்போல் பகைவர் தொடர்பு**

வாளைப் போல் வெளிப்படையாக எதிர்த்து நிற்கும் பகைவர்களிடம் பயம் வேண்டியதில்லை; சிநேகிதர்களைப் போல் நடிக்கும் பகைவர்களிடமே பயப்பட வேண்டும் என்று சொல்லி யிருக்கிறார். குழந்தாய்! கேளிரைப் போல் நடிக்கும் பகைவர்களின் மத்தியில் இப்போது போகிறாய். நான் வேண்டாம் என்று தடுத்தும் கேளாமல் நீ போகிறாய். ஏதோ ராஜ்யம் சம்பந்தமாகத் தகராறு நேர்ந்து விட்டதாகவும் அதைத் தீர்த்து வைக்கப் போவதாகவும் உன்னை அழைத் திருக்கிறார்கள். சம்புவரையன் மகள் ஒருத்தியை உன் கழுத்தில் கட்டிவிட உத்தேசித்து உன்னை அழைத்திருப்ப தாகவும் அறிகிறேன். ஆனால் அவர் களுடைய உண்மையான நோக்கம் இன்னதென்பது எனக்கும் தெரியாது; நீயும் அறிந்திருக்க முடியாது. உனக்குப் பெண் கொடுப்பதற்கு இந்தப் பாரத தேசத் தில் மன்னாதி மன்னர்கள் பலர் காத்திருக் கிறார்கள். இந்தச் சம்புவரையன் மகள் தான் வேண்டுமென்பதில்லை. இராஜ் யத்தை உனக்குப் பாதி என்றும் மதுராந் தகனுக்குப் பாதி என்றும் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்விக்கப் போகிறார்கள் என்றும் கேள்விப்படு கிறேன். அதில் என்ன சூது இருக்குமோ, சூழ்ச்சி இருக்குமோ, எனக்குத் தெரியாது. எது எப்படியானாலும், நான் உடனே திருக்கோவலூருக்குச் சென்று என்னு டைய பாதுகாப்புப் படைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு வந்து வெள்ளாற்றங் கரையில் தங்கியிருப்பேன். சம்புவரையர் அரண்மனையில் இருக்கும்போது உனக்கு ஏதேனும் சந்தேகம் தோன்றினால் எனக்கு உடனே சொல்லி அனுப்பு...!"

இச் சமயம் ஆதித்த கரிகாலனுடைய கவனம் தன் பக்கம் இல்லை என் பதையும் வேறு பக்கம் திரும்பியிருக்கிற தென்பதையும் மலையமான் கண் டார்.

"தாத்தா! அதோ பாருங்கள்!" என்று ஆதித்த கரிகாலன் கலக்கத்துடன் கூறிய வார்த்தைகளை அந்த வீரக் கிழவர் கேட்டு, அந்தத் திசையை உற்று நோக் கினார்.

(தொடரும்)



• சான்றோர் சூழல்...



• விசுவநாதன்

# வாழிய வாழிய!

**கே.**கே. நகர் (மதுரை)பகுதியிலுள்ள தபால்காரர் கூட 'ங க உ - ம் எண் வீட்டுக்காரா?' என்று கேட்கிறார்! 312 என்ற வீட்டு நம்பரைக் கூட தமிழில் எழுதி வைத்திருக்கிறார் விசுவநாதன். இவர் வீட்டு பேரக் குழந்தைகள் எல்லாம் 'டாட்டா' என்று சொல்வதற்குப் பதிலாக 'வாழிய வாழிய' என்றுதான் சொல்கிறார்கள்.

வங்கிப் பணியாக இருந்தாலும் சரி, செய்யும் வியாபாரத்திலும் சரி எல்லாவற்றையுமே தமிழில்தான் எழுதுகிறார். தம்முடைய வியாபார நிறுவனத்துக்குக் கூட 'கங்கை காவேரி வணிகத் தொடர்பு' என்றுதான் பெயர் வைத்திருக்கிறார். 68 அகவை ஆகிறது இவருக்கு. (வயது என்றால் கோபித்துக் கொண்டாலும் கோபிப்பார்.)

ஒருமுறை இவர் கிரிக்கெட் பார்த்துக் கொண்டிருந்த போது, இந்திய அணியினர் பீல்டிங்கில் கோட்டை விட, விசுவநாதன் தம்மை மறந்து, 'பீல்டிங் சரியில்லை' என்று சொல்ல, நான்காவது படிக்கும் பேரன், 'தளம் என்று சொல்லுங்கள் தாத்தா' என்றானாம்.

வ.சுப. மாணிக்கத்தின் மாணவரான இவர், "இன்றைய பிள்ளைகள் எல்லாவற்றிலும் சிறந்துதான் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு உதாரணம் காட்டத்தான் நல்ல தலைவர்கள் இல்லை!" என்று வருத்தப்படுகிறார்.

'ஜப்பான், கொரியா, அமெரிக்கா என்று பிற நாடுகளில் தமிழ் புகழ் பெற்று வளர்ந்த பின்னால் தான் அதாவது உலகமொழியாக உயர்ந்தப் பின்னால் தான் தமிழன் தமிழ் படிப்பான்' என்ற கோபம் விசுவநாதனுக்கு இருந்தாலும் தம்மால் முடிந்த அளவுக்கு தமிழுக்குச் சில தொண்டுகள் செய்து வருகிறார். 'சான்றோர் சூழல்' என்ற அமைப்பை ஏற்படுத்தி ஒழுக்கம், நேர்மை, அறிவு உடைய உறுப்பினர்களைச் சேர்த்து கூட்டம் நடத்துகிறார்.

சிறுவர்கள் தூய அறிவு பெற்று, வாய்மை காத்து, மண்ணில் நல்ல வண்ணம் வாழ ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, நன்னெறி, உலகநீதி ஆகிய நீதிநூல்களை அழகாக அச்சிட்டு இலவசமாக வழங்கி வருகிறார். அவர்கள் அந்த நூல்களை வாங்கி 'சிவனே'யென்று வைத்துவிடாமல் படிக்கிறார்களா என்பதை அறிய, முதல் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை உள்ள மாணவ-மாணவிகளுக்கு 'எழிலந்தமிழ் எழுதும் போட்டி'யை நடத்திப் பரிசுகளும் கொடுத்து வருகிறார். இதில் கலந்து கொள்ள இளம் மாணவ-மாணவிகள் ஆர்வத்தோடு வருவதைப் பார்க்கும் போது 'மெல்ல தமிழ் இனி வாழும்' என்று வாய்விட்டுச் சொல்லத் தோன்றுகிறது. "வாழிய வாழிய!"

— பழ. சேதுராமன்

படங்கள்: நவநீதன்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் உங்க காரியங்கள் வெற்றியடையறது, நீங்க மத்தவங்க கிட்ட எப்படி நடந்துக்கறீங்கன்றதைப் பொறுத்த விஷயம். சிரிச்ச முகம், சிறு உதவிகள் – பிறருக்குச் செய்யறது இதெல்லாம் அவசிய மானவை. ஜாலி டூர் ஒண்ணு எதிர்பார்த்து, அது தள்ளிப் போறதுல கொஞ்சம் வருத்தம் இருக்கும். சூழ்நிலை அவ்வளவா சாதகமா இல்லை. செலவுகள் குறைய வேண்டியது அவசியம். கணவன் மனைவி உறவுல சிறு சலசலப்புகள் வந்து நீங்கும்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எத்தனை எத்தனை திட்டம் போடறீங்க! அடேயப்பா, உங்க தன்னம்பிக்கை அபாரமானதுங்க. எப்படியும் ஜெயிப்போம்ங்கற உங்க தன்னம்பிக்கைதாங்க உங்களோட மூல தனமே. இந்த வாரம் ஆபீஸ்ல கடுமையான போராட்டங்களைச் சந்திக்க வேண்டி வரும். வீட்டுல சம்சாரம்/வீட்டுக்காரரால சில்லறை நச்சரிப்புகள் இருக்கும். மத்தளம்தான். ஆனாலும் உங்க சாமர்த்தியம் காப்பாத்திடும். இத்தனைக்கும் நடுவுல, நல்ல உடல்நலம், உல்லாச அனுபவங்கள், படையப்பாவுக்கு பாக்ஸ் டிக்கெட்னு கலக்குவீங்க. ஷேர் மாதிரி விஷயங்கள் மட்டும் இப்ப வேணாம். சிலருக்கு மட்டும் வீடு, மனை வாங்கற யோகம் இருக்கு.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

சாப்பாட்டுல கட்டுப்பாடு அவசியங்க. ஹோட்டல் கண்ட இடத்துலயெல்லாம் சடன் பிரேக் போட்டு நின்னுடாதீங்க. இந்த வாரம் உங்க ஸ்டொமக் உங்களுக்கு வில்லனாகற சான்ஸ் இருக்கு. மத்தபடி உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு இப்ப நிறைவேறும். அரசாங்கத்தால ஏதாவது அனுகூலம் நடக்கும். விருந்தாளிகள் பலர் உங்களைத் தேடி வருவாங்க. வாரக் கடைசில ஒரு லெட்டரோ, போன் காலோ நீங்க எதிர்பாராத சமயத்துல வந்து குஷிப்படுத்தும். பெண்டாட்டி பிள்ளைங்களோட எங்கியாவது வெளியூர் போயிட்டு வரவேண்டியதுதானே? அதான் எதிர்பாராத பண வரவு வேற இருக்குதே?



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

ரொம்ப அலைவீங்க. உடம்பைப் பார்த்துக்கங்க. ஏன்னா, மருத்துவச் செலவைத் தாங்கக்கூடிய அளவுக்கு இந்த வாரம் பொருளாதார நிலைமை அவ்வளோ திருப்தியா இல்லை. ரொம்ப வேண்டப்பட்டவங்க யாராவது வேற கடன் கேட்கலாம். உதட்டைப் பிதுக்கிட்டு, முழிக்காதீங்க. உங்க நிலைமையை விளக்கிச் சொல்றது மூலமா நல்லுறவைக் கெடுத்துக்காம இருக்கலாம். பணம்தான் சிக்கலே தவிர, வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. சிலருக்குப் புதிய வேலை வாய்ப்பு வரும். புரமோஷன் கூட நடக்கலாம். பெண்களுக்கு தாய் வழியில ஏதாவது உதவி கிடைக்கும்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கிரகங்கள் சாதகமா இல்லை. நீங்க எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம். வீண் செலவுகள், வாக்கு வாதங்கள் வேண்டாம். பயணத்துல எச்சரிக்கை அவசியம். டூ வீலர் பயணம் இந்த வாரம் வேணாம். சிறு விபத்துகள் – அட்லீஸ்ட், நடுரோடுல டயர் பஞ்சர் ஆகறதுக்காவது சான்ஸ் இருக்கு. தெரு நாய்கள் கிட்ட உஷாரா இருங்க. மேலதிகாரிகள்கிட்ட (வீட்டுலேயும்!) மரியாதையா நடந்துக்கங்க. கடன் அன்பையும் எலும்பையும் முறிக்கும். ஸோ, அதுவும் வேணாம். இந்த வாரம் மௌனமா இருக்கறது மூலம்

# நடக்குமென்பார்

பல பிரச்னைகள்லேருந்து நீங்க தப்பு முடியும்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பலருக்குக் கல்யாண யோகம் வந்திருக்கு. வீட்டுல மகிழ்ச்சிக்குக் கேக்கணுமா? டௌரி கேட்டு பெண் வீட்டார் மகிழ்ச்சியைக் கெடுக்காம இருங்க. புது வீடு, மனை வாங்கறதுக்கு சரியான டைம். சிலருக்கு அரசாங்க அனுகூலம் இருக்கு. பெண்களுக்குப் புதுப் புடைவைகள் நிறைய சேரும் வாய்ப்பு இருக்கு. வெளியூர் பயணங்களால நல்ல ஆதாயம் உண்டு. பெரியவங்ககிட்ட கருத்துக் கேட்டுத் தொடங்கற புது முயற்சிகள் கட்டாயம் வெற்றி பெறும். வயசானவங்களுக்கு மட்டும் கால் சம்பந்தமான சிறு உபாதைகள் இருக்கும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

ரொம்ப குழம்பறீங்க. சின்ன

விஷயங்களுக்கு ஏன் நிறைய அலட்டிக்கறீங்க? இந்த வாரம் நீங்க ஆபீஸ்ல நிறைய டோஸ் வாங்க வேண்டி வரும். சக ஊழியர்கள்கிட்ட கசப்புணர்வு உண்டாகும். காரணம்? உங்க மூடு சரியா இல்லாததுதான். புது ப்ராஜக்ட் எதுவும் இப்ப தொடங்காதீங்க. அலையறதைக் குறைச்சிக்கங்க. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராகும். அப்ப மனதுக்கு இதமான சில அனுபவங்கள் நிகழும். அதுவரைக்கும் சைலன்டா இருக்க முயற்சி பண்ணுங்க.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். மனசுல புதுப்புது திட்டங்கள் உருவாகும். வீடு, மனை வாங்கற யோகம் சிலருக்கு இருக்கு. ஆனா, கடன் மட்டும் வாங்கிடாதீங்க. வேலையில்லாம சிரிச்சிட்டிருக்கறவங்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். சிலருக்கு வெளிநாடு சான்ஸ் கூட வரலாம். ஆனா, வீட்டுல கொஞ்சம் பிரச்னைகள் வரும். கணவன் – மனைவி உறவுல லேசான ஊடல்கள் வரலாம். எதிலும் நீங்க விட்டுக் கொடுத்துடறது ரொம்ப நல்லது.

# நடக்கும்!

மூத்த பையன்/பெண் மூலமா ஒரு நல்ல செய்தி வந்து சேரும். எழுத்தாளர்கள், கணிதத் துறைக்காரங்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

நிறைய ட்ராவல் பண்ணுவீங்க. வெளி இடங்கள்ல சாப்பிட வேண்டி வரும். எச்சரிக்கையா இருங்க. சட்டுனு ஏதாவது உடம்புக்கு வந்து அவஸ்தைப்படப் போறீங்க! இந்த வாரம் உங்க பிளான் எல்லாம் சரிவர நடக்கும். எதிர்பார்த்த உதவிகள் கிடைக்கும். பணப் பிரச்னை இருக்காது. ஆனா, சிலருக்குப் பொருள் நஷ்டம் ஏற்படலாம். பிக்பாக்கெட் காரங்கிட்ட உஷாரா இருங்க. ரெண்டுல கேது, எட்டுல ராகு உலவறதால, வீட்டுல ஏதாவது பிரச்னை வரலாம். எதையும் புத்திக்கூர்மையோடு அணுக வேணும். உங்களுக்குத் தெரியாதா என்ன?



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

சும்மா ப்ரிட்ஜுல வெச்ச தக்காளிப் பழம் மாதிரி குளுகுளுன்னு இருக்குமே மனசு? கல்யாணம், புரமோஷன், அதிகப் பண நடமாட்டம்னு ஒண்ணு மேல ஒண்ணா பல ஜாலி சமாசாரங்கள் நடந்தா இருக்காதா பின்னே? இந்த வாரம் உங்களுக்கு உல்லாச அனுபவங்கள் பல கிடைக்கும். புதிய பாய் / கேர்ல் ஃப்ரெண்ட் கிடைப்பாங்க. புதுப் பொருள் சேர்க்கையும் பிறக்கும். வீட்டுல இருந்து வந்த பிரச்னைகள் வரிசையா தீரும். இனி கொஞ்ச நாளைக்கு உங்க காட்டுல கன மழைதான்!



விருச்சிக ராசிக்காரரான அர்ச்சனாவின் மனத்தில் புதுப்புது திட்டங்கள் உருவாகுமாம்!



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சீரான வாழ்க்கைன்னா அது உங்களுக்குத்தாங்க. இந்த வாரம் ஃப்ளாட், மனை ஏதாவது வாங்குவீங்க. வீட்டுல மகிழ்ச்சிகரமான காரியங்கள் ஏதாவது நடக்கும். உங்க மகள் அல்லது மகன் மூலம் புகழ் வந்து சேரும். சிலருக்கு திடீர் பொருள் சேர்க்கை, வெளிநாடு சான்ஸ் கூட வரலாம். ஆனா அந்த அலைச்சல் மூலம் உடம்பைக் கெடுத்துப்பீங்க. கால் சம்பந்தமான பிரச்னை ஏதும் வரலாம். உஷாரா இருங்க. வயசானவங்களுக்கு எதிர்பாராதவிதமான புதுப் புடவை வேஷ்டி யோகம் இருக்கும்!



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கிரகங்கள் சாதகமா இல்லை. உங்க ஒவ்வொரு நடவடிக்கையையும் யோசிச்சி செய்யுங்க. ஆபீஸ்ல உங்களை மட்டம் தட்ட ஒரு கும்பல் காத்துட்டிருக்கு. கவனமா நடந்துக்கங்க. வீண் விவாதங்கள்ல கலந்துக்க வேணாம். கடன் வாங்காதீங்க. அதிக செலவு செய்யாதீங்க. வீட்டுல ஏதாவது பிரச்னையும் தொடர்ச்சியா சிறு கசமுசாவும் வரும். எல்லாரையும் அனுசரிச்சி நடந்துக்கங்க. உங்க பலவீனத்தைப் பயன்படுத்தி நண்பர்கள் கூட உங்களை ஏமாற்றப் பார்க்கலாம். எச்சரிக்கை! எச்சரிக்கை! ரொம்ப எச்சரிக்கை!

**வா**த்தியார் மகனாகப் பிறந்து விட்டதில் மணிக்கு ஏகப்பட்ட குறை.

அவன் அப்பா ஆசையாய் வைத்த பெயர் சுப்பிரமணியன். ஒரு பக்கம் முருகன் மேல் கொண்ட திவிர பக்தி, இன்னொரு பக்கம் மகாகவியின் மேல் கொண்ட பற்று. ஆனால் யார் அவனை முழுப் பெயர் வைத்துக் கூப்பிட்டார்கள்? சுப்புணி

## சுகன்யா

என்றால்தான் எல்லோருக்கும் தெரியும். இப்போது மரியாதையான வங்கி வேலைக்கு வந்த பிறகு மணி என்று கூப்பிடுகிறார்கள். நாமும் அப்படியே கூப்பிடுவோம்.

மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற நான்குமே அவனுக்கு அப்பாதான். அவன் அப்பாவுக்குப் பொருட்செல்வம் இல்லையே ஒழிய மக்கட் செல்வத்தை இறைவன் தாராளமாக அளித்திருந்தான். மூன்று அக்கா, மூன்று அண்ணன்களுக்குப் பிறகு ஏழாவதாக அவன் பிறந்தான். அதற்கு மேல் வறுமையையும், உடல் உபாதையையும் தாங்க முடியாத அவன் தாயார், அவனுடைய ஓராண்டு நிறைவடைவதற்குள் உலகத்தை விட்டுச் சென்றார்.

அக்காமார்கள் உதவியுடன் அப்பா எப்படியோ வளர்த்தார். அவனை வீட்டில் எங்கே பார்க்க முடிந்தது? அவனைப் பார்க்க முடிந்த இடங்கள் மூன்றுதான். ஊரில் உள்ள குட்டிச்சுவர்களின் மேல், மரங்களின் மேல் அல்லது ஊர்க்கோடியில் ஓடிக் கொண்டிருக்கும் கண்மாயில் நீச்சலடித்துக் கொண்டு.

பாலிஷாக சொல்ல வேண்டுமென்றால், 'அப்பா இல்லாமல் அம்மா வளர்த்த பிள்ளை கழிசடையாகத்தான் இருக்கும்' என்பார்கள். இவன் விஷயத்தில் அது பொய்யாகி விட்டது. அம்மா மகராசி போய் விட்டாள். அப்பா வளர்த்தும் உருப்படாத பிள்ளையாக அவன் இருந்தான்.

'வாத்தியார் பிள்ளை மக்கு...' என்பார்கள். அவன் விஷயத்தில் அதுவும் பொய்யாகி விட்டது. கணக்கு, தமிழ், ஆங்கிலம் அனைத்திலும் புலி. ஒருமுறை படித்தால் போதும். "ஏக சந்தக் கிரஹி. டேய் நல்லா படிடா. ஸ்டேட் ரேங்க் வாங்குவ..." அவன் வாத்தியார் புலம்புவார். ஊஹூம். என்ன பிரயோஜனம்?

ஊர்ப் பிள்ளைகளை அடிப்பதும், உதைப்பதும் திரும்ப உதை வாங்குவதும் தான் அவன் தொழில்.

'இந்திய கிரிக்கெட்' ஆகிய கிட்டிப்புள் சண்டையில் தெருப் பையனைப் புரட்டி எடுத்ததில் அவனிடம் உதை வாங்கியவன் மூக்குச் சில் உடைந்து ரத்தம் கொட்ட, மணி மாயமாகி விட்டான். காயமடைந்த பையனை தெருப் பையன்கள் அப்படியே கொட்டும் ரத்தத்துடன் அவன் அப்பாவிடம் கொண்டு போய் நீதி கேட்டார்கள்.



"அவனைப் பிடிச்சு இழுத்து வாங்கடா, கொன்னு போட்டுடறேன்" என்று முழங்கினார் அந்த மனுநீதிச் சோழன்.

"டேய், ராமு வாத்தியார் அவர் பையனைக் கொன்னுடப் போறாராம்...!"

பள்ளி முழுக்க சேதி பரவியது.

அந்தக் காலத்தில் ஊர்ப் பையன்களுடன் சேர்ந்து மணியைத் தேடியவர்களில் நானும் ஒருவன்.

''டேய்! கிடைச்சாலும் மணியைக் காட்டிக் கொடுக்காதீங்கடா. அவன் அப்பா அவனைக் கொன்னு போட்டுடுவார்டா...'' என்னுடைய புலம்பல்.

கட்டபொம்மன் பிறந்த பூமியில் எட்டப்பன் இருக்கத்தானே வேண்டும்! எவனோ ஒருவன் மணியைக் காட்டிக் கொடுத்தான். இரண்டு நாள் உண்ண உணவின்றி, ஊருக்கு வெளியே இருந்த பிள்ளையார் கோவிலில் படுத்துக் கிடந்த மணியை, கட்டபொம்மனை இழுத்துச் செல்வது போல இழுத்துச் சென்றார்கள்.

பையன் ஆயிற்றே! அம்மா இல்லாத பையன் வேறு. 'அந்திம சனி' என்று கரித்துக் கொட்டிக் கொண்டே அவனைத் தலையில் தூக்கி வைத்துக் கொள்வார்.

பகல் நேரங்களில் எந்த மரத்தின் மேல் இருந்தாலும் சரி, இரவு நேரத்தில் அப்பாவிடம் படுத்து விடுவான். அப்பா சொல்லும் கதைகளைக் கேட்டுக் கொண்டே தூங்கி விடுவான். ''தூங்கறப்போ என் பையன் மாதிரி சாதுவே இல்

போட்டிக் கதை - 12

# அப்பாவுக்கு அஞ்சலி

அவன் அப்பா கத்தியை எடுப்பார், மகனைக் கொல்லப் போகிறார் என்று அச்சத்துடனும் அவாவுடனும் எதிர்பார்த்து நின்றிருந்தனர்.

அவனைப் பார்த்ததும்...

''டேய் சுப்புணி...'' ஓடி வந்தார் அப்பா.

பையன்கள் அடி தங்கள் மேல் விழாமல் ஒதுங்கினர்.

''எங்கடா போயிட்ட ரெண்டு நாளைக்கு. உங்கம்மா தான் என்ன விட்டுப் போயிட்டா. நீயும் போயிடாதடா. ரெண்டு நாளா என்னடா சாப்பிட்ட, எங்கடா தூங்கினே?''



ஓவென்று அலறினார். மனுநீதிச் சோழனின் இந்தப் புதிய தீர்ப்பைப் பார்த்து மாணவர்களுக்குச் சப்பென்றாகி விட்டது.

என்னதான் அறுந்த வாலாக இருந்தாலும் என்ன செய்வது? கடைக்குட்டிப்

லடா...'' என்று பெருமையாக எல்லோரிடமும் சொல்லிக் கொள்வார்.

அது வாத்தியார்கள் வசதியைப் பார்க்காத காலம். நூறு ரூபாய் சம்பளம், எட்டு வாய்கள். அப்பப்பா, கொடுமை! சரஸ்வதி இருக்கும் இடத்தில் லக்ஷ்மி இருக்க மாட்டாள் என்ற பழமொழிக்கு அந்தக் கால வாத்தியார்கள் சரியான உதாரணம். வீட்டில் இருக்கும் சரஸ்வதி போதாதென்று ஊர் மத்தியில் இருக்கும் இலவச வாசக சாலைக்குத் தவறாமல் போய் விடுவார். மணி செய்த உருப்படியான வேலை அது ஒன்றுதான். அவ்வப்போது அப்பாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு வாசகசாலை சென்று கல்கியின் பொன்னியின் செல்வனை வாரா வாரம் படித்தது நினைவில் இன்னும் இருக்கிறது.

அந்த நேரங்களில்தான் அவன் அப்பாவின் வாயிலிருந்து தத்துவ முத்துக்கள் உதிரும். அவர் பார்வையில் எல்லோரும் திருடர்கள், அனைவரும் அயோக்கியர்கள். தேசத் தலைவர்களில் ஆரம்பித்து, அந்த

ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவர் வரை அத்தனை பேரையும் திட்டித் தீர்த்து விடுவார்.

அது மணிக்குப் பெரிய அதிர்ச்சியாக இருக்கும். பொதுக் கூட்டங்களில் மாலையும், மரியாதையும் பெறும் தலைவர்களை இப்படியெல்லாம் திட்டுகிறார்களே!

அன்று நடந்த நிகழ்ச்சி இன்னும் அவன் நினைவில் பசுமையாக இருக்கிறது. அப்பாவிடம், திருடன், அயோக்கியன் என்றெல்லாம் வசவு வாங்கிய பஞ்சாயத்துத் தலைவர் இறந்து விட்டார். ஊரே கூடி விட்டது.

மைதானத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடிய கூட்டம் நடந்தது. அவருக்கு நினைவஞ்சலியாம். அவரை, 'இந்திரன், சந்திரன்' என்று புகழ்ந்தார்கள். அப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டு திரும்பி வந்த மணி கேட்டான்.

"என்ன அப்பா! அவரை அவ்வளவு கெட்டவர்னு சொன்னீங்க. அவரை இப்படிப் புகழறாங்களே!"

"ஆமாண்டா, செத்துட்டார்ல அதான்."

"ஓஹோ... செத்தால் எல்லோரும் நல்லவராக மாறி நினைவுக் கூட்டம் நடத்துவார்களா?"

அடுத்த சந்தேகத்தையும் கேட்டான்.

"அப்ப, நல்லவங்க செத்தா நினைவுக் கூட்டம் இல்லையா...?"

"அவங்களுக்கும் உண்டுடா. நேரு, காந்தி, அண்ணாதுரைக்கெல்லாம் இல்லாமயா?" அப்பா கூறினார்.

அடுத்த கேள்வியைக் கேட்டிருக்கக் கூடாது. கேட்டு விட்டான்.

"அப்பா, நீ செத்தா இந்த மாதிரி நினைவுக் கூட்டம் நடத்துவாங்களா...?"

பதில் கிடைக்கவில்லை.

'படார்' என்று பிடரியில் ஒரு அடி கிடைத்தது.

அதன் பிறகு ஒருநாள்...

கையில் மலர்ச்செண்டு, தோளில் போர்த்திய துண்டுடன் அப்பா வந்தார். ரிடையர் ஆகி விட்டாராம்.

அதன் பிறகு அப்பா, மற்றவர்களுடன் அதிகம் பேசினதே இல்லை.

தனக்குத்தானே அதிகம் பேசிக் கொண்டார்.

பிறகு சுவரைப் பார்த்துப் பேச ஆரம்பித்தார்.

கையில் பிரம்பை எடுத்துக் கொண்டு, "டேய் சொன்ன பேச்சைக் கேட்க மாட்டே?" என்று சுவரை அடிக்க ஆரம்பித்தார். "டேய் பசங்களா..." என்று தரையைப் பார்த்துப் பேசினார்.

அவர் இறந்தபோது மணிக்கு வயது பதினைந்து. வீட்டில் ஒருவருக்கும் கல்யாணம் ஆகவில்லை. வீட்டு வேலை, சமையல், சர்வர் உத்தியோகம் என்று பிழைப்பு நடந்தது. அவன் படிப்பு பத்தாவதோடு நின்றது.

யாரோ ஒரு பெரிய மனிதர் மணியைக் கூட்டிக் கொண்டு, தான் வேலை செய்யும் வங்கிக்குக் கூட்டிப் போனார். எடுபிடி வேலைகளைத் தந்தார்கள். வாட்டர் பாய் வேலை கிடைத்தது. பிறகு ரெகுலர் ஆபிஸ் ப்யூன் வேலையும் கிடைத்தது. எஸ்.எஸ்.எல்.சி. பிரைவேட்டாக எழுதி முடித்தான். கிளார்க்காக பதவி உயர்வும் உடனே கிடைத்தது.

அப்பா போய் பதினைந்து வருடங்கள் ஓடி விட்டன. அப்பாவின் நினைவு அவ்வப்போது வரும்.

அவனுடைய குறை அதுதான். "அயோக்கியன், திருடன், மொள்ளமாறி" என்று அப்பாவிடம் வசவு வாங்கின, பல பேர் இறந்து போன போது நினைவுக்கூட்டம் நடத்தி அஞ்சலி செய்தார்களே. நாற்பது வருடம் வாத்தியாராக இருந்த அப்பாவுக்கு யாரும் அப்படி அஞ்சலி செலுத்தவில்லையே?

இப்போது டீவி. யுகம் வேறு. ஒவ்வொரு தலைவர் நினைவு தினத்தன்றும் ஊர் ஜனங்கள் சமாதிக்குச் சென்று கூட்டம் போடுகிறார்கள். அவன் அப்பாவுக்கு யாரும் எதுவும் செய்யவில்லை, உண்மையில் சொல்லப் போனால், அவன் அப்பா இறந்த போது ஊர் முழுக்க, தான் படித்த பள்ளி உட்பட, எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்தான். ஊஹூம்! மருந்துக்குக் கூட ஒரு கூட்டம் இல்லை.

அவன் அப்பாவின் ஆத்மா சாந்தி அடையவில்லையோ என்ற சந்தேகம் அவனுக்கு. அவன் அண்ணாமார்கள் திவசம் செய்கிறார்கள். ஆனால் பொது மக்கள் நடத்தும் நினைவுக் கூட்டம் இல்லையே!

அவன் அண்ணன்களுக்குத் திருமணமாகி விட்டது. அவன் அக்காமார்கள் ஒருவர் பின் ஒருவராக முதல் தாரம், இரண்டாம் தாரம் என வயசுக்கேற்றபடி திருமணம் செய்து கொண்டு போய் விட்டார்கள். முப்பது வயதாகி விட்டது. மணி இனிமேல்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டும்.

"ஆபீசர் ஆகப் போறே. சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கோடா..." வெற்றிலையைக் குதப்பியவாறே சீதாராமன் கூறினார்.

ஆமாம்!

அதற்கு அடுத்த வாரம் ஆபீசர் வேலைக்கு இன்டர்வியூ. சென்னைக்குப் புறப்பட்டு வந்தான். நங்கநல்லூர் அக்கா வீட்டில் தங்கினான். பீச் ஸ்டேஷன் அருகே ஒரு கட்டடத்தின் பத்தாவது மாடியில் இண்டர்வியூ. அந்த ஏ.சி. குளிரில் அவன் உடம்பு வெடவெடத்தது. ஆனால் கையில் மட்டும் வியர்வை.

ஒருவழியாக சாயங்காலம் நாலரை மணிக்கு உள்ளே கூப்பிட்டார்கள். ஜெனரல் மானேஜர் நடுநாயகமாக அமர்ந்திருந்தார். கம்பீரமான தோற்றம். அவரைப் பார்த்ததுமே இவன் உடம்பு இன்னும் ஆட ஆரம்பித்தது.

அவன் பயோ-டேட்டாவைப் படித்தார்.

"மிஸ்டர் சுப்ரமணியன். உன் சொந்த ஊர் திருவண்ணாமலைப் பக்கமா...?" ஜி.எம். கம்பீரமாகக் கேட்டார்.

"ஆ....ஆ...மா...ம் சார்...?" மணி ஒருவழியாகக் கூறினான்.

"டூ யு நோ, ஐ பிலாங் டு த சேம் பிளேஸ்..?" கூட இருந்தவர்களிடம் கேட்க, அவர்கள் தலையாட்டினர்.

"வாட் இஸ் யுவர் பாதர்ஸ் நேம்...?"

"ராமநாதன்..."

"எந்த ராமநாதன்...?"

"சார், வாத்தியார்...."

"யாரு இங்கிலீஷ் வாத்தியார் ராமனாதனா...?"

"ஆமாம் சார்..."

ஜெனரல் மானேஜர் எழுந்து நின்று விட்டார்.

"அவர் பையனா நீ! அப்பா எப்படி இருக்கார்...?"

"சார் அப்பா செத்துப் போய் பதினைஞ்சு வருஷமாச்சு சார்..."

"அப்பா செத்துப் போயிட்டாரா? இங்கிலீஷ் வாத்தியார் ராமநாதன் செத்துப் போயிட்டாரா... இருபது வருஷமாச்சா...?"

தொப்பென்று உட்கார்ந்தார் ஜி.எம். மற்றவர்கள் செய்வதறியாமல் நின்றிருந்தார்கள்.

"ஜென்டில்மேன். என் இங்கிலீஷ் வாத்தியார் ராமநாதனைப் பத்தி உங்களுக்கெல்லாம் தெரியாது. அவர் ஒரு ஜீனியஸ். எம்பாடிமென்ட் ஆப் இன்டலிஜென்ஸ். இன்னிக்கு உங்க ஜி.எம். இவ்வளவு உயர்ந்த நிலையில் இருக்கிறதுக்கு அவர் சொல்லிக் கொடுத்த இங்கிலீஷ்தான் காரணம். நான் படிக்கறப்போ இந்தப் பையன் பிறக்கல போல இருக்கு. இன்னைக்கு ஒவ்வொரு வார்த்தை இங்கிலீஷ் பேசறப்பவும் அவரை நினைக்காத நாளே கிடையாது. அப்படிப்பட்ட ஜீனியஸ் இன்னைக்கு இல்லையே..."

அமைதி.

கர்சிப்பை எடுத்து கண்களைத் துடைத்துக் கொண்டார். அழுகிறாரா...!

"சாரி, ஜென்டில்மேன். இனிமேல் இன்றைக்கு என்னால் உட்கார முடியாது. மீதி இருப்பவர்களை நாளைக்கு வரச் சொல்லுங்கள். டி.ஏ. எல்லாம் தந்து விடுங்கள்...."

எல்லோரும் திகைப்புடன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவன் அருகில் வந்தார். தோளைத் தட்டி,

"வர்றேன் தம்பி. உங்கப்பாவை நீங்க எல்லாரும் மறந்தாலும் நான் மறக்க மாட்டேன். நான் அவரோட பெட் ஸ்டூடண்ட்..."

எல்லோரும் திகைப்புடன் நின்றிருக்க, இண்டர்வியூவுக்கு வந்தவர்கள் ஒவ்வொருவராக எழுந்து நிற்க ஜி.எம். வெளியேறினார். அவருடைய ரத கஜ துரக பதாதிகள் பின்னால் ஓடினர்.

"என்ன ஆச்சு...?"

"அவரோட பிரியமான வாத்தியார் செத்துப் போன சேதி தெரிஞ்சதாம். இன்னைக்கு வேலை இவ்வளவுதான்னு சொல்லிட்டுப் போயிட்டாரு. நீங்கள்லாம் நாளைக்கு வரலாம்..."

மற்றவர்கள் எல்லாம் ஏமாற்றத்துடன் அகன்றனர்.

அப்பாவின் ஆத்மா சாந்தி அடைந்ததாக மணிக்குத் தோன்றியது. ●

**"என்னோட காதலியை 'தாஜ்மஹால்' படத்துக்கு கூட்டிட்டுப் போனது தப்பா போச்சு!"**

**"ஏன்... என்னாச்சி?"**

**"படம் முடிஞ்சி வெளியே வந்ததும் அடுத்த ஷோ 'குதுப்மினார்' பார்க்கணும்னு அடம் பிடிக்கிறா!"**

**— நெல்லையப்பபுரம் டி. செல்வன்**





**நா**ன் பிறந்த பூமியை இறுதியாக மிதிக்கிறேன்; 'எனது தாயகத்தை விட்டு அடியோடு வெளியேறுகிறேன்' என்ற மனப்பாரத்தோடு விமானப் படிகளில் காலடிகளை வைக்கின்றேன். என் விழிகளில் இலேசாக நீர் கோக்கின்றது.

விமானப் பணிப்பெண், 'ஆயுபோவன்' என வணக்கம் சொல்லிப் பயணிகளை வரவேற்றாள்.

விமானம் பறப்பதற்கு முன்னர், என் மனம் செட்டையை அகலவிரித்து உயர, உயர, அதிஉயர இராட்சத விசையுடன் பறக்கத் தொடங்கி விட்டது. அதன் பறப்பு இடத்தின் பரப்பை மட்டுமல்ல, காலத்தின் பரப்பையும் நீளத் தொட்டு நின்றது.

வடமராட்சியில் உள்ள அந்தப் பெரிய பெண்கள் கல்லூரியில் இசை ஆசிரியைப் பணியில் எத்தனை அமைதியாகக் காலம் ஓடிக் கொண்டிருந்தது.

அன்றும் வழக்கம் போல்தான் விடிந்தது.

கணவனுடைய கடமைகள் மற்றும் வீட்டு வேலைகளை முடித்துவிட்டு, ஏழு மணிக்கே 'ஹேண்ட் பாக்'கைத் தோளில் மாட்டியபடி பாதணிகளுள் கால்களை நுழைத்தேன்.

'கிடுகிடு, கிடுகிடு' எனப் பதற்றமான ஒலியுடன் வானம் படபடத்தது.

வீட்டுக்கு வெளியே ஓடிவந்து அண்ணாந்து வானத்தைப் பார்த்தபோது, பிரும்மாண்டமான நட்டுவாக்காலிகள் இரைந்தபடி ஒன்றன் பின் ஒன்றாக வட்டமிட்டு வானில் பறந்து அச்சமூட்டின.

வானத்தில் இரைச்சல்; கிராமத்து நாய்களின் 'லொள் லொள்' என்ற இரைச்சல்.

"ம்... ம்... அங்கே... அதோ... அந்தா..ந ஒண்டு... இன்னொண்டு... ஐயோ!.. கனக்க... கனக்க... கிட்ட வருகுது..."

குழந்தை குட்டி, குமர் கிழடு என்ற பேதமின்றி எல்லோரும் வானத்தைப்

# காற்றில் கலந்த சோகம்

பத்மா சோமகாந்தன்

பார்த்துப் பிரமித்துத் திகைத்து....

'என்ன நடக்குமோ?... எது வெடிக்குமோ...?' ஏங்கித் தவித்தனர் அந்த ஊர் மக்கள்.

அச்சத்தால் நரம்புகள் குளிரோடிவிறைத் தன; மயிர்க்கால்கள் குத்திட்டுச் சிலிர்த்தன.

சூரியனின் கதிர்வீச்சு இறுகி, உறைந்து, சூடாக எழுந்தது.

வானத்தில் கோலமிட்ட புள்ளிகள் மினுங்கி மறைந்தன. பல ஆயிரம் அடி களுக்கு அப்பால் அவை வளைந்து நெளிந்து பளிச்சிட்டுப் பரவின.

வட்டமிட்ட ஹெலிகளிலிருந்து கொட் டப்பட்டவை, மெல்லிய காற்றின் அசைவில் மாம்பூக்கள் உதிர்வது போல உதிர்ந்து பறந்தன.

சில மாணவர்கள் தேடி ஓடிப் போய் அவற்றைப் பொறுக்கிக் கொண்டு ஓடோடி வந்தனர்.

"ரீச்சர், (டீச்சர்) ரீச்சர், வானிலிருந்து ராணுவம் துண்டு போட்டிருக்கு, 'பயங்கர வாதிகளைக் குண்டு போட்டு அழிக்கப் போறான்களாம். பொது சனங்களைக் கோயில்களிலும், 'சேர்ச்சுகளி'லும் போய் ஒதுங்கட்டுமாம்."

"அப்ப, இண்டைக்குப் பள்ளி இல் லையோ? எங்கே ஓடுவம் ரீச்சர்? என்ன செய்ய...?" கேள்வி களால் என்னைத் துளைத்தெடுத்தனர்.

"நமக்கு மட்டுமா? ஊரோடொத் ததுதானே!" எனப் பதற்றத்தைச் சமாளிக்கச் சமாதானம் கொண்டாலும் பாரிசவாதத் தால் படுக்கையிலிருக்கும் கணவரை என்ன செய்வது? எப்படி அழைத்துக் கொண்டு ஓடுவது?

'என்ன நடந்தால் நடக்கட்டும். அவருக்கு வருவது எனக்குமாகட்டும்!' இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு விருந்தையில் உட் கார்ந்து விட்டேன்.

எனது பிள்ளைகளிருவரும் விழிகள் பிதுங்க பிரமித்துப் போய் நின்றனர்.

எங்கும் ஒரே அமளி துமளி. சாரி சாரி யாக மூட்டை முடிச்சுகளுடன் ஊரில் ஆண் கள், பெண்கள், நோயாளிகள், குழந்தைகள், கர்ப்பிணிகள் முதியோர் என நெருக்கியடித் துக் கொண்டு கோவில்களை நோக்கி ஓடினர். கத்துவதும் பரபரப்பாகக் கதைப் பதும் ஓலமிடுவதுமாக ஊர் அல்லோல கல்லோலப்பட்டது.

பக்கத்து வீட்டு பத்மா வேர்த்து விறு விறுக்க ஓடிவந்து சொன்னாள். "ராணி ரீச்சர் ராணி ரீச்சர்! வல்லைவெளிக்குள் ஆமி இறங்கிவிட்டுதாம். இன்னும் சில நேரத்தில் ஊருக்குள் நுழைந்து விடுவான்களாம். விஷயம் கட்டுமீறி விட்டுதாம். வீட்டை விட்டு எங்காவது தப்பி ஓடுவதுதான் நல்லது. ஆமியை எதிர்த்துத் தாக்குப்பிடிக்க எங்கடை ஆட்களால் முடியவில்லையாம். ஆமி புறாப் பொறுக்கி - மதவடியால் கட் டுக் கொண்டு வாறாங்களாம். அவங்கடை சூடுபட்டுச் செத்தால் பரவாயில்லை...! ஆனால் வீட்டுக்கை நுழைஞ்சால் எங்கடை மானத்தைக் கெடுத்துப் போடுவாங்கள் எல்லோ?"

"வா, வா ஓடுவம்! உனக்கும் ரெண்டு பெட்டைகளல்லோ. அவங்கள் கையிலகப் பட்டால்... பிறகெப்படி உயிரோடு இருக் கிறது...!???"

ஹெலியின் ஒலியை மீறிக் கொண்டு எனது கணவரின் இருமல் ஒலி என்னைப் பயமுறுத்தி யது.

அவரது மார்பைத் தடவி ஆசுவாசப் படுத்தினேன். அவரும் விக்கித்தக்கி இருமலுக்கூடே திக்கித் திணறிச் சொன் னார்.

"நான் எப்படியும் சமாளிப்பேன். எமது இரு குமர்ப்பிள்ளைகளையும் கூட்டிக் கொண்டு நீ கோவிலுக்குப் போ."

அவரின் கோரிக்கைக்கு என் மனம் இடம் கொடுக்கவேயில்லை.

எனது கணவர் ஆற்றாமையோடு, தன் கைகளை எடுத்து என்னைக் கும்பிட்டுப் பிள்ளைகளோடு கோவிலுக்கு ஓடிப் போய்

விடுமாறு கெஞ்சினார்.

என் பிள்ளைகளிருவர் மீதும் இயற்கை தன் அழகு முழுவதையும் ஏன் இப்படி அள்ளிச் சொரிந்ததோ? குத்துவிளக்கு போல நிறமும் எழிலும். அதற்கேற்ற இனிய குரலும் இசைத் திறமையும் அவர்களிடம் மண்டிக் கிடந்தன. இவர்களுக்கு ஏதாவது வன்செயல்கள்... நேர்ந்தால்...!

என்னால் கற்பனை செய்யவே முடியவில்லை.

கும்பிட்ட கோலத்தில் கணவர் கெஞ்சிக் கொண்டேயிருந்தார்.

செம்பு நிறையத் தண்ணீர், பிளாஸ்க்கில் காப்பி, பிஸ்கெட் பெட்டி இவற்றைக் கணவர் எடுப்பதற்கு வசதியாக அருகில் வைத்துவிட்டு, இரு மாற்று உடைகளை ஒரு பாலிதீன் பையில் அடைத்தெடுத்துக் கொண்டு, அடுத்த நாள் திரும்பி விடலாம் என்ற நம்பிக்கையோடு கோவிலை நோக்கிச் செல்லும் சனக் கூட்டத்துடன், நானும் எனது பிள்ளைகளும் கரைந்து கொண்டோம். ஆனாலும் மனம் வீட்டையே சுற்றிக் கொண்டிருந்தது.

வக்கிரம் பிடித்த சனியனுக்கு இந்த மக்கள் மீது இத்தனை கோபமா?

பீதியும் பதற்றமுமாகச் சிந்திக்கும் திறனே உறைந்து போய்...

பிள்ளைகளைத் தவற விட்டதாய், கணவனைக் காணாத மனைவி தந்தையைத் தொலைத்த மகன் என்று... குலையின் காய்கள் பிடுங்கி எறியப்பட்டுக் கட்டுக்கள் உடைந்து சிதறி...

துன்பமும் துயரமும் எங்கும் அப்பிக் கிடந்தன.

**கோ**வில் மண்டபங்களெல்லாம் சனவெள்ளத்தால் நிறைந்திருந்தது. 'குபுகுபு' வென்று மேன்மேலும் சன வெள்ளம் ஓடி வந்து மூச்சு விட முடியாமல் முட்டி மோதியது.

"திட்டுத் திட்டாகச் சனங்கள் இருந்தால் அவர்களை ஒரேயடியாக அழித்துத் துடைத்து விட முடியாது. எல்லோரையும் ஒன்றாகக் குவித்து விட்டு ஒரு குண்டைப் போட்டால் ஊரே அழிந்து விடலாம்" வதந்திகளுக்கு சிறகு முளைத்து அந்தக் கோவிலில் குடிகொண்டிருந்த வெளவால்களிலும் பார்க்க வேகமாகப் பறந்தன.

வயிற்றுப் பசி தணிக்க எல்லோரும் அள்ளியதால் அந்தக் கோவில் கிணறும் வற்றி விட்டது.

'கோவில்' மனிதனின் அன்றாட வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்ற வெனக் கட்டப்பட்ட விடுதியல்லவே.

வீட்டில் அவர் என்ன பாடோ? என அடிக்கடி என் மனம் அடித்துக் கொண்டது.

பால் மாட்டிற்கு வைக்கோல் போட மறந்திட்டேன். கன்றும் கட்டி விட்டபடி, கன்றுக் குட்டி பால் குடிக்க என்ன பாடு படும்?

சில வேளை தாய்ப்பசுவே கட்டை அறுத்துப் போட்டுப் பாலூட்டி விடுமோ?

"அம்மா! நாம் எப்போ வீட்டுக்குப் போவது? அப்பாவைப் பார்ப்பது. பாவம்! அவர் தனிய!" மூத்தவள் கேள்வி எழுப்பி அடிக்கடி என் மனத்தைக் குடைந்தாள்.

சன வெக்கை; உடம்பு எரிவாக இருந்தது. நள்ளிரவாகியும் கண்கள் மூட மறுத்தன.

கிழக்கு வெளிக்கு முன்பே வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தேன். பக்கத்தில் படுத்திருந்த பத்மாவிடம் பிள்ளைகளைப் பார்க்கச் சொல்லிவிட்டு, கணவனைப் பார்த்துவரப் புறப்பட்டேன். என்னைப் போல ஏங்கும் உள்ளங்கள் ஒன்றிரண்டும் என்னைத் தொடர்ந்தன.

வெளியே ஊர் செத்துக் கிடந்தது.

எங்கும் மயான அமைதி.

நாய்கள் கூட மூச்சுக் காட்டப் பயந்து எங்கோ பதுங்கி ஒழிந்து விட்டன.

இரவோடிரவாக ஊருக்குள் நுழைந்து வீதியெங்கும் நிலைகொண்டு விட்டது

---



"கூட்டணிக் கட்சியோட பேச்சு வார்த்தை நடத்த தலைவர் மனைவியோட போறாரே... ஏன்?"

"காய்கறிக்கடை, பாத்திரக் கடைன்னு பேரம் பேசி அவங்களுக்கு நல்ல அனுபவமாம்!"

— தஞ்சை தாமு

ராணுவம்.

"ஐயோ! இது என்ன சோதனை?"

ஊரடங்கு பிறப்பிக்கப்பட்டதால் எவரும் வெளியே செல்ல அனுமதிக்கப்படவில்லை.

பசியால் குழந்தைகள் வீறிட்டழுதன. இராணுவம் சுற்றி வளைத்துக் கொண்டதால் அத்தனை பேர் முகத்திலும் பீதி.

கடவுளே முருகா! எம்மை ஏன் இப்படி அலைக்கிறாய்? அழிக்கிறாய்.

குளித்து முழுகி ஆசாரமாக விரதமிருந்து வழிபடும் போது கூட இத்தனை உருக்கமாகப் பிரார்த்தனை அமைந்து விடாது!

கூத்தலும் கதறலும் தொடர்ந்தபடி இருந்தன.

"உங்களுக்கு நான் ஏதாவது உதவ வேண்டுமா?" பண்போடு கனிவான வார்த்தைகளால் அந்த விமானப் பணிப்பெண் என்னிடம் வந்து கேட்டாள்.

தலைச்சுற்றி, வாந்திக்கான மாத்திரைகளை அவள் ஓர் தட்டில் ஏந்தியபடி என்னிடம் நீட்டினாள்.

முகமனுக்காக அதில் சிலவற்றைப் பொறுக்கிக் கொண்டு வலிந்து புன்னகைத்தேன். சின்னமகள் மூன்று நான்கு இனிப்புகளைத் தட்டிலிருந்து எடுத்து விட்டாள் என்பதற்காக மூத்தவள் அவளைக் கடிந்தாள். இருவரும் என்னோடு ஒட்டிக் கொண்டு நித்திரைக்காகக் கொட்டாவி விட்டனர்.

சிந்தனைப் பறவை மீண்டும் செட்டை விரித்தது.

கோவிலில் தஞ்சமடைந்திருந்த எமக்கு மூன்றாவது நாள் காலை இரு மணித்தியாலம் வீடுகளுக்குச் சென்று வர அனுமதித்தனர்.

பத்மாவிடம் பிள்ளைகளை விட்டு விட்டு ஓடோடி வீட்டிற்குப் போனேன்.

குப்பையும் உதிர்ந்த குழையுமாக வீடு காடாகிக் கிடந்தது; கதவுகள் திறந்தே கிடந்தன.

கணவரின் அறையுள் ஆவலோடு நுழைந்தேன்.

அங்கே! அவர் விறைத்துப் போய்... அது வாகி... ஐயோ!... வானம் என் மேலே இடிந்து விழுவது போல....

"எல்லாம் எப்போதோ முடிந்த காரியம்."

யாழ்ப்பாணத்துச் சித்தர் யோகசுவாமிகள் கூறிய இக் கூற்று... என் வாழ்க்கையிலும் நிஜமாகி விட்டது.

இது எனக்காகத்தான் சொல்லப் பெற்ற



''உனக்குத்தான் தீபாவளி புடைவை எடுத்துக் கொடுத்துட்டேனே. அப்புறம் ஏன் இன்னும் புடைவை எடுக்கலேனு உன் தோழிகிட்ட போய் சொல்ற?''

''எடுத்தாச்சுனு காட்டினா இதைவிட அதிக விலைக்கு தனக்கு எடுத்துட்டு வந்துடுவா!''

– அம்பைதேவா

மகா வாக்கியமோ?

என்ன செய்கிறேன் என்பது எனக்குத் தெரியவில்லை. இயல்பிலேயே கோழையான எனக்கு, எங்கிருந்துதான் அந்தத் துணிச்சல் வந்தது? உயிரும் உணர்வுமாக என்னுடன் வாழ்ந்த எனது கணவரின் சடலத்தை நாய்க்கும் காகத்துக்கும் இரையாகும் படி விட்டு விட்டு ஓடி விட முடியாது.

சாஸ்திரங்கள், சம்பிரதாயங்களில் ஊறிப் போன குடும்பம் என்றபோதிலும் எனக்கு ஒரு வழியும் தெரியவில்லை. தனது வீடு பார்க்கவென அவசரமாகப் போய்க் கொண்டிருந்த அடுத்த தெரு ஆச்சி என் அழுகையைக் கேட்டுப் பரிதாபத்துக்கு உதவ வந்தார்.

பாய்ந்து வந்த ஷெல்கள் விமானக் குண்டு வீச்சுகளிலிருந்து உயிரைப் பாதுகாப்பதற்கென ஒவ்வொரு வீட்டிலும் இருந்தது போன்ற பதுங்கு குழி எமது வீட்டு முற்றத்திலும் வெட்டப்பட்டிருந்தது. அதற்கருகில் அவசர அவசரமாக, ஓலைகளையும் மட்டைகளையும் குவித்து... பன்னீரால் குளிப்பாட்டிப் பயணமனுப்ப வேண்டிய அவரை என் கண்ணீரால் குளிப்பாட்டி, அச் சிதை மீது வைத்துத் தீ மூட்டி... ஐயோ! எப்படி அந்த நேரத்தில் அது என்னால் முடிந்தது?

பெண் ஒருத்தி கொள்ளி வைத்ததைச் சம்பிரதாயம் ஏற்குமா? குருக்கள் வந்து மந்திரம் சொல்லி கிரியை செய்யாவிட்டால் ஆத்மா சாந்தியடையுமா? – நெருப்பு மூண்டது ஜுவாலையாக....

குண்டுமாரி எமது ஊரில் அட்டகாசம்

புரிய, இரு பிள்ளைகளையும் கையில் பிடித்தபடி சனத்தோடு சனமாக எடுத்தேன் ஓட்டம் தென்மராட்சிக்கு.

அங்கும் இராணுவம் முன்னேறி விட சனவெள்ளத்தோடு வெள்ளமாகக் கிளிநொச்சிக்கு நகர்வு... இப்படியே நிலையற்று ஊரூராக ஓடி, இராணுவம் நம்மூரை விட்டு வெளியேறி விட்ட செய்தி வர, நம் ஊரவர்கள் தத்தமது வீடுகளுக்குப் புறப்பட்ட போது அவர்களுடன் நாங்களும் சேர்ந்து கொண்டோம்.

எம்மூரை நாம் சென்றடைந்த போது அங்கு என்ன அக்கிரமம்...!

கோவிலின் பஞ்சதளக்கோபுரம் குப்புற விழுந்து கிடந்தது!

பல நாட்களாகப் பூசையும் இல்லையாம். அதனைத் தாண்டிச் சென்றபோது,



**"தீபாவளிக்கு எட்டுப் புடைவை எடுத்துத் தந்திருக்கேன். உன் முகத்துல சந்தோசத்தையே காணோமே?"**
**"ஒன்பதுதான் என் ராசியான நம்பர்!"**
**– அம்பை தேவா**

இராணுவ டாங்கி, தன் கொடிய பற்களால் எமது வீதியைச் சப்பித் துப்பியிருந்தது.

ராணுவ அட்டகாசம் எல்லா இடங்களிலும் தன் முத்திரையைப் பதித்திருந்தது.

எங்கள் வீடும் அங்கில்லை.

கற்குவியல்தான் முற்றத்தை நிறைத்திருந்தது.

நிழல் பரப்பி நின்ற வேப்பமரத்தின் சுவடேயில்லை.

அக்காணியை புல்டோசர் அரைத்து உழுது விளையாடியிருந்தது.

எனது பெற்றோர் எனக்கு சீதனத்துக்கு என ஆசையோடு கட்டித் தந்த வீடு. இப்பிள்ளைகள் பிறந்த வீடு; எனது கணவரோடு சுகித்து வாழ்ந்த வீடு. ஐயோ! அவரைப் புதைத்த வீடும் இதேதான்!

"ராணி! உன் சொந்தமென்று சொல்லிக் கொள்ள உனக்கு அங்கே எவருமேயில்லை. இரு குமர்ப் பிள்ளைகளோடு அகதி முகாம்களில் நீ கையேந்தி நிற்பதை நினைத்துப் பார்க்கவே, இங்கு என்னால் அமைதியாக இருக்க முடியவில்லை.

"அட்டூழியங்களை எதிர்த்துப் போராடும் வகையில் சக்தியும் துணிவுமுள்ளவர்களாக நீயோ பிள்ளைகளோ வளர்க்கப்படவுமில்லை. நீ இங்கே வந்து விடு. சுதந்திரம் இங்கு உண்டு. பல்லின மக்கள் என்ற போதிலும் மனிதநேயத்துடன் பழகுகிறார்கள். இசை நாட்டியமாகியவற்றில் நாட்டமுள்ள உன் பிள்ளைகளுக்கு இங்கு நல்ல எதிர்காலமுண்டு. நீ கூட இங்கு ஒரு இசைப் பள்ளியை நடத்திச் சொந்தக் காலில் நிற்க வாய்ப்புண்டு."

திக்குத் திசை தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்த எனக்கு என் ஒரே அண்ணன் மனமுருகி எழுதியிருந்த கடிதம் கலங்கரை விளக்கமாக மார்க்கத்தைக் காட்டியது. சிங்கப்பூரில் தரித்து நின்ற விமானம் புறப்பட்டு உயரே உயரே எழுந்து சிட்னியை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது.

நான் பிறந்த மண்ணில் எனது கணவரின் இறுதிச் சடங்கைக் கூட நிறைவேற்ற முடியாத கொடுமையான அவலம், பரம்பரையாகத் தினமும் கும்பிட்ட கோயிலே இடித்துச் சரிக்கப்பட்ட அக்கிரமம்! என் பிள்ளைகளைக் கொத்திக் குதறத் துடிக்கும் வல்லூறுகளை நினைக்க நினைக்க நெஞ்சு தகித்தது. நான் மட்டுமல்ல, என்னைப் போல எத்தனை ஆயிரம் பேர் விடுகின்ற பெருமூச்சும், பெருக்குகின்ற கண்ணீரும் தானோ புயலும் மழையுமாக உலகை உருட்டுகிறது?

பிள்ளைகள் தட்டி எழுப்பிய போதுதான் விமானத்தில் களைப்புற்றுச் சில மணி நேரம் உறங்கி விட்டேன் என்பதை உணர்ந்து கொண்டேன்.

சிட்னியில் விமானம் தரிக்கிறது.

பயணிகள் இறங்குவதற்கான அறிவுறுத்தல்கள், ஆயத்தங்கள் முடிந்து, பிள்ளைகள் இருவரையும் கையில் பிடித்தபடி விமானப் படிக்கட்டுகளில் நிதானமாகக் கால் பதித்து இறங்கினேன்.

பிறந்த மண்ணில் பெற்ற அனுபவங்களை விட மேலாக இந்த மண் பெரிதாக எதனைத் தரப் போகிறது?

## மணமக்கள் தேவை
## கம்ப்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

**கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்**

| | | |
|---|---|---|
| ஆங்கிலம், தமிழ் | ரூ. | 60/- |
| எதிர்கால கணிப்புடன் | ரூ. | 150/- |
| கல்யாண பொருத்தம் | ரூ. | 60/- |

**TO SOLVE ALL YOUR PROBLEMS CONSULT DIVINE ASTROLOGER OCCULTIST THETIYUR V. MAHADEVAN WITH PRIOR APPOINTMENT.**

## ஸ்வயம்வராலயா

**(GOVT. REGD.) (ESTD. 1980)**

37, லேக்வியூ ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. ☎ : 4746427/4742756. (Res) 4897241.

7A, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ் லஸ், சென்னை - 4. ☎ : 4984278.

88/1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 55. ☎ : 3340146.

**All Pooja Enthra/Raksha Available Rates On Request**

பத்திரிகையாளர், எழுத்தாளர்

**எஸ். விஜயன்**

எழுதிய 5-வது

அபூர்வ வெளியீடு



## சிகரங்களைக் கடந்த சிவாஜி

**சிவாஜியின் சினிமா வரலாறைக் கொண்ட முதல் பாகம், சினிமா எக்ஸ்பிரஸ் இதழில் 80 அத்தியாயங்கள் தொடராக இடம் பெற்றது. நூற்றுக் கணக்கான அபூர்வ புகைப்படங்களைக் கொண்டது. டிசம்பர் '99ல் வெளி வருகிறது.**

*எங்களது பிற வெளியீடுகள்:*

எம்.ஜி.ஆர். கதை – பாகம் I – விலை ரூ. 25.00

எம்.ஜி.ஆர். கதை – பாகம் II – விலை ரூ. 25.00

எம்.ஜி.ஆர். நினைவுகள் – ஆல்பம் – I விலை ரூ. 40.00

சாதனை நாயகன் எம்.ஜி.ஆர். – ஆல்பம் – II விலை ரூ. 35.00

தபால் செலவு தனி. *விவரங்களுக்கு :*

**அருள்மொழி பதிப்பகம்,**

32, வீரபாண்டிய நகர் 2-வது குறுக்கு சந்து, குளமேடு, சென்னை - 600 094.

## கருமாரி அன்னைக்கு ஆலயம் கட்டிடுவோம்
## மஹாசக்தி கருமாரியம்மன் மிஷன் ட்ரஸ்ட் – சக்திபுரம்.
## பதிவு எண் – 67/99



சர்வலோக நாயகி கலியுக தெய்வம், நவக்கிரக **அன்னை கருமாரி தேவிக்கு** மதுரை மாவட்டம், **அழகர் கோவில் - மேலூர் சாலையில்** உள்ள **சக்திபுரத்தில்** மிகப் பிரம்மாண்டமான அளவில் **மஹாசக்தி கருமாரி அம்மன் ஆலயம்** பல லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட உள்ளது. அழகர் கோவிலில் வீற்றிருக்கும் **அண்ணன் மஹா விஷ்ணுவின்** நேர் பார்வையில் அன்னை கருமாரி அமைவது மிகச் சிறப்பாகும். அழகர் மலையின் அடிவாரத்தில் பஞ்சபாண்டர் படுக்கையின் எதிரில் அன்னை அமைவது மேலும் சிறப்பாகும். சித்தர்கள் அடக்கமான ஸ்தலமாக போற்றப்படுவதும் நவக்கிரகங்கள் தனது தேவிகளோடு கருமாரி தேவியைப் பார்த்தவண்ணம் அமைந்து உலகப் புகழ்பெற்ற ஆலயமாக விளங்க உள்ளது. அன்னை கருமாரியின் பார்வையில் நவக்கிரக தோஷங்கள் விலகும் என்ற ஐதீகத்துடன் இத் திருக்கோவில் பல சிறப்பு அம்சங்களுடன் கட்டப்பட உள்ளது. இந்த ஆலய திருப்பணிக்கு தங்களால் முடிந்த நன்கொடை, பொருளுதவி அளிக்க வேண்டுமாய் அன்னை கருமாரியின் சார்பில் அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

1. ரூ. 1000/- நன்கொடை வழங்குபவர்களுக்கு வெள்ளியில் மஹாசக்தி கருமாரியம்மன் திருவுருவம் பொறித்த டாலர் ஒன்று பவுர்ணமி அன்று பூஜை செய்து பிரசாதத்துடன் அனுப்பப்படும்.
2. ரூ. 5,000/- நன்கொடை வழங்குபவர்களுக்கு குடும்பத்தினர் பெயருக்கு ஒவ்வொரு பவுர்ணமி அன்றும் அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். (படம், வெள்ளி டாலர் ஒன்று அனுப்பப்படும்.)
3. ரூ. 10,000/-க்கு நன்கொடை வழங்குபவர்களுக்கு பெயர் கல்வெட்டில் பொறிக்கப்படும். ஒவ்வொரு பவுர்ணமி அன்றும் அவர்களது குடும்பப் பெயரில் அம்மனுக்கு பாலாபிஷேகம் பஞ்சதீர்த்தம் அபிஷேகம் செய்து பிரசாதம் அனுப்பப்படும். (படம் வெள்ளி டாலர் ஒன்று அனுப்பப்படும்.)
4. ரூ. 1 லட்சம் நன்கொடை அளிப்பவர்களுக்கு கல்வெட்டில் பெயர் பொறிக்கப்பட்டு வருடத்தில் அவர்கள் விரும்பும் ஒருநாளில் நேரில் அழைத்து அபிஷேகம் ஆராதனை செய்து சிறப்புப் பூஜை செய்யப்படும். ஒவ்வொரு பவுர்ணமி அன்றும் பூஜை செய்து பிரசாதம் அனுப்பப்படும். செக்/டி.டி. மஹாசக்தி கருமாரியம்மன் மிஷன் டிரஸ்ட் என்ற முகவரிக்கு எடுக்கவும்.



நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி :

**மஹா சக்தி கருமாரி அம்மன் மிஷன் டிரஸ்ட்,**

''ஜீனியஸ் பில்டிங்ஸ்'' 5/1, விநாயகர் நகர், மதுரை – 20. போன் : 650 806.

● கோல்டன் அ. ஷாகுல், வந்தவாசி.

? த.மா.கா. தலைவரை அ.தி.மு.க. தலைவி சந்தித்துள்ளாரே இதன் பின்னணி என்னவாக இருக்கும்?

! பின்னணி என்ன! ஒரு புதிய முன்னணிக்கு ஆசைப்படுகிறார் ஜெயலலிதா. இச் சம்பவத்தில் அரசியல் முக்கியத்துவம் 'ஜெ'வுக்கு; அபாய அறிவிப்பு மூப்பனாருக்கு. 'ஜெ'யின் பேச்சைக் கேட்டு பாண்டிச்சேரியில் ஆட்சி கவிழ மூப்பனார் ஒத்துழைத்தால் மத்தியில் ஆட்சியைக் கவிழ்த்த 'ஜெ'வுக்கும் இவருக்கும் வித்தியாசமில்லாது போகும். ஜெ. புதிய அமைச்சரவையில் இடம்பெறாவிட்டாலும் மத்தியில் முன்பு அவர் நடத்திய பிளாக்மெயில் அரசியலே பாண்டியிலும் தொடரும்.

● கே. ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

? கான்பூர் கிரிக்கெட் டெஸ்டில் இந்தியா வெற்றி பெற்றது குறித்து...?

! இருநூறு ரன்களுக்கு மேல் எடுத்துச் சாதனை புரிந்த டெண்டுல்கர், அடுத்த அகமதாபாத் டெஸ்டில் ஃபாலோ ஆன் கூறாமல் விட்டு, மேட்சை டிரா பண்ண வாய்ப்பளித்து சொதப்பி விட்டாரே! காப்டன்ஸி திறமை போதாது என்று மீண்டும் நிரூபித்து விட்டாரே!



● ஆர். பி. ப்ரியன், வேலூர் – 1.

? நந்தினி (பொன்னியின் செல்வன்) கதாபாத்திரம் தான் படையப்பா நீலாம்பரி கேரக்டருக்கு இன்ஸ்பிரேஷன் என்று சொல்லியிருக்கிறாரே ரஜினி?

! பல கேரக்டர்களை தர்ஜுமா பண்ணிவிட்டுத் தங்கள் சொந்தக் கற்பனை என்று புகழ் தேடுகிறவர்களே நிறைந்திருக்கும் போது, விதிவிலக்காக உண்மை பேசிய ரஜினி பாராட்டுக்குரியவர்.



● ஆர். லட்சுமி, மதுரை – 16.

? 2001-ல் ராமர் கோயில் கட்டப்படும் என விச்வ ஹிந்து பரிஷத் அறிவித்துள்ளதே?

! காமராஜர் ஆட்சியும் ராமர் கோயிலும் நமது தேசிய முழக்கம் இப்போது. மாட்டிக் கொண்டு தவிக்கும் 2001-க்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

● ஆர். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? விஷக் குப்பியைக் கழுத்தில் மாட்டிக் கொண்டிருக்கும் சாவுக்கஞ்சாத விடுதலைப் புலிகள், மரண தண்டனைக்குப் பயந்து கருணை மனுகொடுப்பது முரண்பாடாக இருக்கிறதே?

! ஏற்கெனவே விடுதலை பெற்றவர்கள் வெற்றி விழா கொண்டாடியதை மறந்து விட்டுப் பேசுகிறீர்கள். அதை நினைவில் இருத்தி, கருணை மனு ஏற்கப்படுமெனில், அதன் எதிர்கால விளைவையும் யோசித்தால், முரண்பாடு இல்லை என்பது புரியும்.

● சூர்யநிலா, சேலம் – 9.

? ஆயுள் தண்டனை மட்டுமே ஒரு குற்றவாளியை மனம் வருந்தி திருந்தச் செய்யும் என்கிறாரே முதல்வர்?



## நீலாம்பரிக்கு இன்ஸ்பிரேஷன் நந்தினியாமே?

! சந்தர்ப்பவசத்தில் குற்றம் செய்தவருக்கு வேண்டுமானால் அது பொருந்தும். திட்டமிட்டு, 'நெட் பிராக்டிஸ்' எல்லாம் செய்து பார்த்து, அரசியல்ரீதியாக ஒரு பெருந்தலைவரின் படுகொலையை மிகக் குரூரமாக நிகழ்த்தியவர்களுக்குத் தூக்குத் தண்டனை என்பது சரியானதுதான்.

● மல்லிகை மன்னன், மதுரை – 17.

? எஸ்.ஸி., எஸ்.டி. பிரிவினருக்கு இட ஒதுக்கீட்டை மேலும் பத்து ஆண்டுகளுக்கு நீட்டித்திருப்பது நியாயமாகத் தெரிகிறதா தலைவா?

! இன்னும் பத்து ஆண்டுகள் கழித்து இதே கேள்வியை நீங்கள் கேட்பீர்கள். இதே பதிலை நானும் சொல்வேன். அரசு கொடுத்த

* நீலாம்பரி நேர்மை!

சலுகையை மக்களிடமிருந்து திரும்பப் பெறுவது அவ்வளவு கடினமானது.

● **எஸ். திருமலை, கோவை - 43.**

? ***மான்யம் என்றும் சம்பளம் போன்ற நிர்வாகச் செலவு என்றும் பெரும்பகுதி போனால், எந்த அரசாங்கம்தான் மக்கள் வளர்ச்சித் திட்டங்களுக்கு நிதி ஒதுக்கி நன்மை பண்ண முடியும்?***

! இதைத்தான் நிதி கமிஷனும் தமிழக அரசிடம் கேட்டிருக்கிறது. செலவுகளைக் குறைக்கவும் முதலீடுகளை அதிகரிக்கவும் அறிவுறுத்தியுள்ளது. மற்ற மாநிலங்களின் நிதி நிலைமை இதைவிட மோசம் என்பதில் நாம் திருப்தி அடைய முடியாது, கூடாது.

● **ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் - 2.**

? ***மறைந்த தொண்டமான் பற்றி...?***

! இலங்கைத் தோட்டத் தொழிலாளர்களின் தம்நிகரில்லாத, கண்ணான தலைவராக, நலன் விரும்பியாக, இலங்கை அரசியலில் பொறுப்பான நியாயஸ்தராகச் செயல்பட்டவர். அரசும் மக்களும் ஒருங்கே அவரது இழப்பில் துடிக்கின்றனர்.

● **அ. ராஜா ரஹ்மான், கம்பம்.**

? ***அடிக்கடி ஏற்படும் நீண்ட மின்தடைகளால் நீதிமன்றப் பணிகள் பாதிக்கப்பட்டு வருவதாகவும் இதுபற்றி நுகர்வோர் பாதுகாப்பு நீதிமன்றத்தில் வழக்குத் தொடருவேன் என்றும் சென்னை எழும்பூர் ஆறாவது குற்றவியல் மாஜிஸ்திரேட், மின்வாரிய அதிகாரிகளை எச்சரித்திருப்பது பற்றி...?***

! இதென்ன சுயநலம்; பாதிக்கப்படுவது நீதிமன்றப் பணிகள் மட்டும்தானா!

● **ஞா. இராசமாணிக்கம், கோவில்பட்டி.**

? ***அரசியல்வாதிகளுக்கு மனச்சாட்சி என்பதே கிடையாதா? 'ஊழல் வழக்கில் ஜெயலலிதா விடுதலை அடைந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?' என்று நிருபர்களைப் பார்த்து மார்க்சிஸ்ட் தலைவர் சங்கரய்யா எதிர்க்கேள்வி கேட்டுள்ளாரே?***

! மனச்சாட்சி இருந்தால் ஜெயலலிதாவுடன் கூட்டணி ஏற்படுத்தியே இருக்க மாட்டாரே! அப்படி கூட்டணி உருவாக்கிய பிறகு அதை நியாயப்படுத்த எதையாவது சொல்லித்தானே ஆக வேண்டும்! வேதாளத்துக்கு வாழ்க்கைப் பட்டால் முருங்கை மரத்தில் ஏறித்தானே ஆக வேண்டும்!

● **எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.**

? ***நான் முட்டாளாக 35 ஆண்டுகள் இருந்தேன். புத்தி வந்த பின்னர் அ.தி.மு.கவில் சேர்ந்தேன் என்று எஸ்.எஸ். சந்திரன் கூறியுள்ளாரே?***

! இப்படியொரு புத்திசாலித்தனத்தை விட அவர் முட்டாளாகவே இருந்திருந்தால் கௌரவமாயிருந்திருக்கும்.

● **எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

? ***பொன் முட்டையிடும் வாத்தை அறுப்பதைப் போல இன்ஷ்யூரன்ஸ் துறையைத் தனியாரிடம் ஒப்படைக்க பா.ஜ.க. அரசு முயற்சி செய்கிறது என்று ஜெயலலிதா எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறாரே?***

! பொன் முட்டையிடும் வாத்துதான்; அந்த பொன் முட்டைகள் இப்போது எல்.ஐ.சிக்கு மட்டுமே அதிகம் கிடைக்கிறது. தனியாரிடம் ஒப்படைத்தால் போட்டா போட்டி காரணமாக பாலிசிதாரர்களுக்கும் தாராளமாகக் கிடைக்கும் என்பதே நோக்கம்.

● **கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர் - 6.**

? ***வாரி ஸ்டிரைக்கில் புதிய பி.ஜே.பி. அரசின் அணுகுமுறை பற்றி...?***

! எடுத்த முடிவில் உறுதியாக இருந்து ஜெயித்திருக்கும் பிரதமரைப் பாராட்டலாம்.



• சிந்தை மயக்கம்!

● **ந. நந்தியக்குமாரன், சென்னை - 41.**

? ***சித்திரம் பேசி உங்கள் சிந்தை மயங்கியிருக்கிறதா...?***

! இந்த ஆண்டு கல்கி தீபாவளி மலர் அட்டையில் ம.செ. வரைந்துள்ள படத்தைப் பாருங்கள். நான் அனுபவித்ததை நீங்களும் அனுபவிப்பீர்கள்.



• சாதனை + சோதப்பல்!

● **வி. எஸ். கோவிந்தன், மதுரை - 1.**

? ***தேவர் குரு பூஜையில் அரசியல் கட்சிகள் போட்டி போட்டுக் கொண்டு கலந்து கொண்டது குறித்து...?***

! தேவர்களுக்கு குரு பூஜை அரசியல் கட்சிகளுக்குக் குறி பூஜை! ஒரு குறிப்பிட்ட இன வாக்காளர்களைக் குறிவைக்கும் பூஜை!



• இரட்டை இழப்பு!

> ❑ **ரூ. 50 பரிசு பெறுபவர் :**
> **என். பாலகிருஷ்ணன்,**
> **இந்தியன் வங்கி,**
> **டவுன்ஹால் ரோட் கிளை,**
> **மேற்கு மாசி வீதி, மதுரை - 625 001.**

# என் மகன் போட்ட

**■ மேஜிக் நிபுணர் கே. லால் ■**

மும்பை நகரில் என் மேஜிக் ஷோ அபாரமான வரவேற்புடன் நடந்து கொண்டிருந்தது. ஒருநாள் வழக்கம் போலவே ஹவுஸ்ஃபுல். நேரப்படி நிகழ்ச்சி ஆரம்பித்து, இறுதிப் பகுதிக்கு வந்து விட்டேன். ஒரு பெண்ணை இரு துண்டுகளாக வெட்டும் மேஜிக். இந்த மேஜிக் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்துகிற, ஓர் ஐட்டம் என்பது என் நிகழ்ச்சியைப் பார்க்கிற அனைவருமே சொல்வார்கள்.

உண்மையில், மேடையில் ஒரு பெண்ணைப் படுக்க வைத்து, வயிற்றில், பெரிய ரம்பம் கொண்டு வெட்டி விட்டு, இரு துண்டான உடலை மறுபடி ஒட்டி, உயிரூட்டுவது என்பது சாத்தியமே இல்லாத விஷயம் என்பது நிகழ்ச்சியைப் பார்க்கிற அனைவருக்குமே தெரியும். ஆனாலும், நிகழ்ச்சியைச் செய்து காட்டுகிறபோது, பெரிய வட்ட வடிவ ரம்பம் அந்தப் பெண்ணை வெட்டி விட்டது போலவும், சிறிது நேரத்தில், வெட்டப்பட்ட பெண் உயிர் பெற்று எழுந்து விட்டது போலவும், பார்க்கிறவர்களுக்கு ஒரு பிரமை ஏற்படுவது நிஜம். நடக்காத ஒன்றை நடப்பது போல நம்ப வைப்பதுதானே மேஜிக்?

இந்த ஐட்டம் செய்கிறபோது, பெண்ணின் உடலில் சிறு கீறல் கூட விழாது என்றாலும் கூட, செய்முறையிலோ, உபகரணங்களிலோ சிறு பிசகு நேர்ந்து விட்டாலும் கூட பெண்ணின் உடலில் நிஜமாகவே வெட்டுக் காயம் ஆழமாய்ப் பட்டு, சமயத்தில் உயிர் போய் விடும் அபாயம் உள்ளது என்பதை மறுப்பதற்கு இல்லை. இந்த ஐட்டம் என்று இல்லை, பொதுவாகவே நான் எச்சரிக்கையுடன் இருப்பேன். என்னையும் மீறிய ஒரு சக்திதான், எல்லாவற்றையும் என் கூடவே இருந்து நடத்திக் கொடுக்கிறது என்பதில் எனக்கு அசையாத நம்பிக்கை.

அந்த சக்தியை தியானித்து, தினமும் நான் பூஜை செய்து விட்டுத்தான் சாப்பிடுவேன். ரயில் பயணம் போன்ற சமயங்களில், குளித்து, பூஜை செய்ய முடியாமல் போய் விடுவது உண்டு. அது மாதிரி சந்தர்ப்பங்களில் மறுநாள், என் உணவைத் தியாகம் செய்து விடுவேன்.

சரி! மும்பை கதைக்கு வருகிறேன். பெண்ணை வெட்டுகிற காட்சிக்குத் தயாரானேன். அதுபற்றிய அறிமுகத்தை மைக்கில் பேசி முடித்து விட்டு, மேடையில் நிறுத்தப்பட்டிருந்த பெரிய, வட்ட வடிவ ரம்பத்தின் அருகே வந்து மானசீகமாக ஆண்டவனை ஒருகணம் பிரார்த்தித்துக் கொண்டு, ரம்பம் சுழலும் அச்சின் இரண்டு பக்கப் பிடிகளையும் இரு கைகளாலும் பிடித்துக் கொண்டேன்.

ரம்பம் சுழலத் தொடங்கியது. அப்போது, "நிறுத்து; ரம்பத்தைச் சுழல விடாதே!" என்று அசரீரி போல ஒரு குரல் எனக்குக் கேட்டது. மேற்கொண்டு ரம்பத்தை நகர விடாமல், அப்படியே பிடித்துவிட்டு, குரல் எங்கிருந்து வந்தது என்று சுற்றிலும் பார்த்தேன். மேடையின் பக்கவாட்டில் நின்று கொண்டிருந்த என் மேஜிக் குழுவின் மானேஜர் முகம் பேயறைந்தது போல இருந்தது. அவர் மீது என் பார்வை பதிந்தது. அவர் என்னையும், சக்கர வடிவ ரம்பத்தையும் மாறி மாறிப் பார்த்ததைக் கவனித்தேன். உடனே ரம்பத்தை நான் கூர்ந்து கவனித்தேன். ஒரு சட்டத்தில் தொங்குவது போல, ரம்பத்தின் அச்சு பொருத்தப்பட்டிருக்கும். அப்படிப் பொருத்தும் நட்டுகள், கழற்றப்பட்டிருந்தன. அதைக் கவனித்த கணத்தில் என் முதுகுத் தண்டு ஜில்லிட்டது. காரணம், நான் நட்டுகள் கழன்றிருப்பதைக் கவனிக்காமல், ரம்பத்தைச் சுழல விட்டு, மேஜிக்கைத் தொடர்ந்திருந்தால், நிஜத்தில் பெண்ணின் உடல் வெட்டப்பட்டிருக்கும்.

விபரீதம் ஏதும் நிகழாமல், என்னை எச்சரிக்கை செய்த ஆண்டவனுக்கு நன்றி செலுத்தினேன். ஆனால், மேஜிக்கை நிறுத்தாமல் தொடர முடிவு செய்தேன். நட்டு கழற்றப்படாமல் இருந்திருந்தால், ரம்பம் எந்த பொசிஷனில் இருக்குமோ அதே பொசிஷனில், ரம்பத்தின் அச்சை இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, எதுவுமே நடக்காதது போல, மேஜிக்கைத் தொடர்ந்தேன்.



• குடும்ப நண்பர் ஒருவருடன் லால் தம்பதியினர்...

ரம்பத்தின் சுழற்சியால் ஏற்பட்ட அதிர்வும், என் அதித எச்சரிக்கை உணர்வும் சேர்ந்து என் கைகளில் ஆழமான காயங்களை ஏற்படுத்தி, ரத்தம் கசிந்தது. ஆனால் நான் நிகழ்ச்சியைத் தொடர்ந்தேன். வெற்றிகரமாக நிகழ்ச்சியைச் செய்து காட்டி

# மேஜிக் குண்டு!

முடித்தபோது கைகள் முழுக்க ரத்தம்.

மேஜிக் ஷோ முடிந்தது. அந்த மானேஜர், என் கால்களில் வந்து விழுந்தார். "நான் ஒரு படுபாவி! என்னை மன்னித்து விடுங்கள்!" என்றார். நான் அவர் தோளைத் தட்டி எழுப்பினேன். அவர் அளித்த வாக்கு மூலத்தின் சாரம் : ஒரு (போட்டி) மேஜிக் கலைஞர், என்னை ஒழித்துக் கட்டும் நோக்கத்துடன், சதித்திட்டம் தீட்டியிருக்கிறார். அந்த சதி வலையில் என் மானேஜர் பத்தாயிரம் ரூபாய் என்ற மாயாஜாலத்துக்குக் கட்டுப்பட்டு, ரம்பத்தின் அச்சுடன் பொருத்தப்பட்ட நட்டுகளை நீக்கி விட்டது தெரிந்தது. இதைக் கேட்டபோது, என் மனம் மிகவும் வேதனைப்பட்டது. "சே! என் உப்பையே தின்று விட்டு, எனக்கு இப்படி ஒரு துரோகம் செய்து விட்டாயே! இனி என் கண்களில் விழிக்காதே!" என்று சொல்லி அந்த விநாடியே அந்த துரோகியை விரட்டினேன்.

இன்றைக்கு அந்தச் சம்பவத்தை நினைக்கிறபோது கூட எனக்கு பகீரென்று இருக்கும். அன்று அந்தச் சதியை முறியடித்து, எந்தவித அபாயமும் இல்லாமல், நிகழ்ச்சியை நடத்திக் கொடுத்தது ஆண்டவனைத் தவிர வேறு யாருமில்லை என்று அழுத்தமாக நான் நம்புகிறேன்.

ஒரு தடவை ஜப்பான் போயிருந்த சமயம், அங்கே ஒரு பதின்மூன்று வயதுப் பையன் ஒருவனைச் சந்தித்தேன். அவன் ஒரு கார் மெக்கானிக். ஆம்! கார் பற்றி அக்குவேறு ஆணி வேறாக அவன் தெரிந்து வைத்திருந்தான். உனக்கெப்படி 'இந்த வயதில் கார் மெக்கானிசம் பற்றி இவ்வளவு தெரிகிறது?' என்று ஆச்சரியப்பட்டு அவனைக் கேட்டபோது, அவன் அப்பா ஒரு கார் மெக்கானிக் என்றும், ஏழெட்டு வருடமாக அவர் கூடவே இருந்து கற்றுக் கொண்டதாகவும் அவன் சொன்னான். அதைக் கேட்டபோது, நானும், என் மகனுக்குப் பயிற்சி கொடுத்து, அவனையும் ஒரு மேஜிக் கலைஞன் ஆக்கினால் எப்படியிருக்கும் என்று கற்பனை செய்து பார்த்தேன். இந்த எண்ணத்தை ஒரு தடவை என் மனைவி புஷ்பாவிடம் சொன்ன போது, அவளுக்குச் சட்டென்று கோபம் வந்துவிட்டது. அவன் மேஜிக் கலைஞனாக வருவதில் எனக்கு இஷ்டமில்லை. குழந்தைகளை மற்றவர்கள் பொறுப்பில் விட்டு விட்டு, ஊர் ஊராய் நீங்கள் போய்க்

கொண்டிருப்பதே எனக்கு உடன்பாடில்லை. உங்களை அனுப்பி வைத்து விட்டு, நான் குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு கல்கத்தாவில் இருந்தாலும் எனக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. சரி என்று உங்களுடன் புறப்பட்டு வந்து விட்டால், அங்கே குழந்தைகள் என்ன பண்ணுகிறார்களோ, அம்மா, அப்பா இரண்டு பேரும் எங்கோ இருக்க, உறவினர்கள் பராமரிப்பில் விட்டு விட்டு வந்து விட்டோமே! என்று மனசு கிடந்து அல்லாடுகிறது. அவர்கள் நினைவு அடிக்கடி வந்து மனதை வேதனைப்படுத்துகிறது" என்று அடிக்கடி என்னிடம் சொல்லிக் கொண்டேயிருப்பாள்.

ஆகவேதான், என்னைப் போலவே என் மகனும் மேஜிக் கலைஞனாக வேண்டும் என்ற என் ஆசையை வெளிப்படுத்திய போது, என் மனைவிக்குக் கோபம் வந்தது. "வேண்டாம். அவன் நன்றாகப் படித்து, நல்ல வேலைக்குப் போகட்டும்; மேஜிக் கலைஞனாக வந்து குடும்பத்தை குழந்தைகளைப் பிரிந்து தவிக்க வேண்டாம்'' என்றாள்.

என்னுடைய இந்த எண்ணத்தை வெளிப்படுத்தியதையடுத்து, அவள் அடிக்கடி, பையனை, என் தொழிலுக்குக் கொண்டு வருவதில் தனக்கு இஷ்டமில்லை என்பதை நினைவூட்டிக் கொண்டேயிருந்தாள். நானும் என் மனைவியும், வருடத்தில் சில மாதங்கள் மட்டுமே கல்கத்தாவில் எங்கள் (கூட்டுக்) குடும்பத்துடன் இருக்க முடிந்தது. எங்கள் குழந்தைகளை மற்ற குடும்ப உறுப்பினர்கள் நன்றாகவே கவனித்துக் கொண்டார்கள்.

என் மனைவியின் எதிர்ப்பை மீறி, என் மகனை மேஜிக் கலைஞனாக்க எனக்கு விருப்பம் இல்லை. அவன் விருப்பப்படியே அவனை நன்றாகப் படிக்க வைக்க விரும்பினேன். எப்படியும் அவன் நம்மோடு இருக்கப் போவதில்லை என்பதால், அவனை மிகச் சிறந்த போர்டிங் ஸ்கூலில் சேர்த்துப் படிக்க வைக்கலாமே என்று தோன்றியது.

குஜராத் மாநிலத்தில் 'சாரதா கிராம்' என்ற இடத்தில் உள்ள பள்ளிக்கூடத்தில் சேர்க்க முடிவு செய்தேன். பெரிய வளாகம். சிறப்பான கல்வியளிக்கும் பள்ளிக்கூடம். அதனுடன் இணைந்த சௌகரியமான ஹாஸ்டல். வெறும் ஏட்டுக் கல்வி மட்டுமின்றி மிகச் சிறந்த குடிமகன்களை உருவாக்குவதையும் லட்சியமாகக் கொண்ட பள்ளி அது. இப்படிப்பட்ட பள்ளியில்தான் என் மகனை ஏழாம் வகுப்பில் சேர்த்தோம்.

என் மகனுக்கு, அந்தப் பள்ளிக்கூட சூழ்நிலை மிகவும் பிடித்துப் போனது. படிப்பில் மட்டுமின்றி, நடிப்பு போன்ற மற்ற விஷயங்களிலும் ஆர்வம் காட்டினான். பள்ளிக்கூடப் படிப்பு முடிந்தது.

கல்கத்தாவிலேயே காலேஜ் சேர்த்து விடலாம் என்று நான் நினைத்தேன். ஆனால், அவன் சாரதா கிராமில் படித்த பள்ளியில் குஜராத்தி மற்றும் இந்தி மொழிகளுக்குத்தான் முக்கியத்துவம் தரப்பட்டது. ஆங்கிலம் அடுத்தபட்சம்தான். ஆனால், கல்கத்தாவில் அப்படியில்லை. வங்காள மொழிக்கும் ஆங்கிலத்துக்கும் முக்கியத்துவம் தரப்பட்டது. எனவே, என் மகன், கல்கத்தாவை விட, குஜராத்திலேயே தன்னுடைய கல்லூரிப் படிப்பைத் தொடர விரும்பினான். நாங்களும் ஓ.கே. சொன்னோம்.

கல்லூரிப் படிப்பை முடித்தபின், அடுத்து என்ன என்கிற கேள்வி எழுந்தது. என் மனைவி, "நம் குடும்ப பிசினஸான துணி வியாபாரத்தில் இனி நீ ஈடுபடலாம். இரண்டு மூன்று வருடங்கள் கடையில் இருந்து, வியாபார நுணுக்கங்களை நீ கற்றுக் கொள். அதன்பின் சொந்த வியாபாரம் செய்ய ஆரம்பிக்கலாம்'' என்றாள். நான், என் மகனும் என்னைப் போல மேஜிக் கலைஞன் ஆக வேண்டும் என்று ஆசைப்பட்டாலும், அதை வெளிப்படுத்தி, குடும்பத்தில் குழப்பத்தை ஏற்படுத்த விரும்பவில்லை. என் மகன் துணி வியாபாரத்தில் ஈடுபடுவதை ஆட்சேபிக்கவில்லை.

ஆனால், என் மகன் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான். அது குடும்பத்தில் பெரும் பூகம்பத்தை ஏற்படுத்திய மேஜிக் குண்டு!

(தொடரும்)




ஒரு பிரபல கம்பெனியின் மானேஜிங் டைரக்டரின் அறையின் முன்னால் எழுதப்பட்டிருந்த வாசகம்:

''இந்த அறைக்கு வரும் ஒவ்வொருவரும் மகிழ்ச்சியைத் தருகிறார்கள் – சிலர் உள்ளே வரும்போது; சிலர் வெளியே போகும்போது.''

ஆதாரம்: 'துணுக் துணுக்குகள்'

— நாகூர் ஆர். லோகநாதன்

✉ பாரதிராஜாவின் பேட்டி படு அசத்தல்! புகழின் உச்சியில் உள்ளவரின் எளிமையான பதில்கள் அருமை. இந்த மண் வாசனை நாயகரின் வாரிசும் தந்தையைப் போல் திரையுலகில் வெற்றிக் கொடி பறக்க விடுவார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.
கடலூர், எம். ஜனித் அஷ்ரப்.

✉ தொகுதி மக்கள் என்றால் என்னவென்று கேட்கும் எம்.எல்.ஏக்களுக்கு மத்தியில் டி. ராஜேந்தர் வித்தியாசமாகத் தெரிகிறார் எனில் அதற்குக் காரணம் அவரிடம் உள்ள 'மக்கள் குறை தீர்க்கும் ஆர்வமும் – எதிலும் சாதித்தே தீர வேண்டும்' என்ற லட்சிய வெறியும்தான். அரசியலிலும் சாதிப்பார், நிச்சயம்.
கோவை, அ. இராஜப்பன்.

✉ தீபாவளி சிறப்பிதழ் முதல் இதழிலேயே அட்டையை விட்டு கண்களை எடுக்க விடாமல் பண்ணி விட்டீர்களே!
மதுரை – 10, நெல்லை வி. சிவா.

✉ 'வாழ்க்கையில் எவ்வளவோ பிரச்னைகள் இருக்கும்போது இந்த மாதிரி கேள்விக்கு எல்லாம் நான் பதில் சொல்ல மாட்டேன் என்று ரேவதி கூறியது "பிரச்னைகள்" காரணமாகத்தான் இருக்குமோ? அல்லது 'ஈகோ'தான் பிரச்னையா?
சென்னை – 28, அஸ்வதி.

✉ இரா. இளங்குமரனார் நிறுவியுள்ள திருவள்ளுவர் தவச்சாலையைப் பற்றியும் அவரின் தமிழ்த் தொண்டினைப் பற்றியும் வந்துள்ள மிகவும் அழகான கட்டுரையைப் படித்து மகிழ்வு எய்தினேன். "இவர்க்கு எல்லாமே திருக்குறள்தான்" என்று தாங்கள் கூறுவது உண்மையே. இதற்கு ஒரே ஒரு சான்று கூறுவேன். இனிய, தெளிவான, புதிய கருத்துக்களோடு 1330 குறட்களுக்கும் அவர் கண்ட உரை "திருக்குறள்: ஒரு வாழ்வியல் உரை" என்னும் மகுடமிட்டு வந்துள்ளது. அதன் உரிமையை ஆசிரியராகிய தாம் வைத்துக் கொள்ளாது எவரும் அதனை ஆசிரியரின் அனுமதி இன்றி அச்சிடலாம் எனக் கூறியுள்ளார்! ஓர் உன்னத மனிதரை 'கல்கி' இதழ் தமிழகத்துக்கு அடையாளம் காட்டியுள்ளது, சிறப்புடையது.
சென்னை – 24, எஸ்.டி. காசிராஜன்.

✉ 24.10.99 இதழ் தராசு பதில்கள் பகுதியில் எனது கருத்து ஒன்றைக் கேள்வியாக்கியுள்ள ஒரு வாசகருக்குப் பதில் அளித்துள்ளீர்கள். எனது சரியான கருத்தை உணர்த்த 'நந்தன்' இதழில் வெளியான எனது முழுமையான பதிலைத் தந்துள்ளேன். அது :

'நமது நாட்டைப் பொறுத்தவரை அதுவும் தமிழில், எழுத்தை மட்டும் ஒருவர் பிழைப்பாக வைத்துக் கொள்வது சிரமம். படைப்புக்கான சன்மானம் குறைவு. ராயல்டி குறைவு. வெளியிடும் எண்ணிக்கையும் குறைவு. பத்திரிகைக்கு எழுதுதல், பொறுப்பாசிரியர் பணி செய்தல், சினிமா, தொலைக்காட்சி படைப்புகளுக்கு வசனம் எழுதுதல் என்று பலவிதமாகவும் உழைத்தால், அந்த உழைப்பு சிலருக்கு நலன்களையும், வளங்களையும் தரும்.

'சிரமம்' என்பதற்கு 'சாத்தியமில்லை' என்று அர்த்தமாகாது என்பதை எல்லோரும் அறிவர்.
சென்னை – 20, பட்டுக்கோட்டை பிரபாகர்.

✉ கல்கி 10.10.99 இதழ் "குறையொன்றுமில்லை" தொடரில் சைவ சமய ஆசார்யர்களுள் ஒருவரான ஸ்ரீ நீலகண்ட சிவசாரியாரைப் பற்றி எழுதப்பட்டுள்ள விதம் (பக்கம். 83) என் போன்ற சைவ சமய ஆர்வலர்களுக்கு வருத்தமளிப்பதாக உள்ளது. ஒருவரை உயர்த்திச் சொல்வதற்காக மற்றொரு மகானைக் குறைத்து மதிப்பிடத் தேவையில்லை.
மதுரை, நி.க. கோவிந்தசாமி,
செயலர், சைவசித்தாந்த சபை.

# அட்டையை விட்டு அகலவில்லை கண்கள்!

✉ சிமெண்ட் விலை உயர்வு பற்றிய தங்களது தலையங்கத்தையொட்டி, முதல்வர் கருணாநிதியின் விவரமான அறிக்கை, புள்ளி விவரங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது. ஏற்கும்படியாகவே அந்த விளக்கம் உள்ளது. மேலும், தமிழகத்தில், பிற மாநிலங்களை விட சிமெண்ட் விலை எப்பொழுதும் கூடுதலாகவே உள்ளது என்னும் விவரம் வியப்பாகவே உள்ளது. கருணாநிதி, தமது ஆட்சியில் ஊழலற்ற நல்ல நிர்வாகம் நடத்தவே முயற்சி செய்து வருகிறார்; நம்பிக்கைக்குரிய வகையில் செயல்படுகிறார் என்பதை, கல்கியும் அறியும். வாசகர்களும் அறிவோம். எனினும் ஸீஸரின் மனைவி சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவராக இருக்க வேண்டும் என்பதே நம் எதிர்பார்ப்பு. பஸ் கட்டண உயர்வும் நியாயமானதாக இருக்கலாம். அதே சமயம் மக்களை மிகவும் பாதிக்கும்படியும் அமையக் கூடாது.
கோவை, டி. பத்மா.

✉ வழிபாடு, பிரார்த்தனை போன்றவற்றில்தான் பரஸ்பரம் வித்தியாசப்படுகிறோமே தவிர, 'நாங்கள் சகோதரர்கள்' என்ற எண்ணத்தில் அல்ல. மத வெறியைத் தூண்டி, இருதரப்பிலுமுள்ள முன் கோபிகளால், எங்கள் சகோதரத்துவத்தை அழிக்காதீர்கள் என்று மனத்திற்குள் அழுதோம். அதை நாலு வாரத் தொடராக எழுதி, இந்து – முஸ்லீம் சகோதரர்களின் மனநிலையை வெளிப்படுத்திய நாராயணி கண்ணகிக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.
நல்லத்துக்குடி, கே. வி. சூர்யா, கே. எஸ். மனோஜ்.

# 'கே. ஜி. கல்வி'

## நையாண்டி தர்பார்



• கூட்டமின்றித் தவித்த சினிமாக்காரர்கள்

அமைச்சர் பதவிகள் சுண்டல் விநியோகம் போல் ஆகிவிட்டபட்சத்தில், கிண்டலுக்கு குறைவிருக்குமா? அதுவும் எதிர்க் கட்சிக்காரர்களின் நாக்குகள் துள்ளுவதற்குக் கேட்கவா வேண்டும்? "61 என்பது ரொம்பக் குறைவு; இன்னும் கூட பலருக்கு அமைச்சர் பதவிகளை வாரி வழங்கலாம்; இலாக்காக்கள் குறைவதாகக் கவலையேபட வேண்டாம்; 'கல்வி' என்று எடுத்துக் கொண்டால், அதை கே.ஜி., பிரைமரி, செகண்டரி என மூன்று இலாகாக்களாகப் பிரிக்கலாமே? ஹோம் டிபார்ட்மெண்ட்டை நகர்ப்புற குற்றங்கள், கிராமியக் குற்றங்கள், பிக்பாக்கெட், ராகிங் - இப்படி நாலு இலாகாக்களாக்கலாமே? இந்த வகையில் ஒரு 75 அமைச்சர்களையாவது உருவாக்கலாமே' என முண்டே நக்கலாகப் பேசியுள்ளார். முன்னாள் பொதுத்துறை அமைச்சர் நிதின் கட்காரி இன்னும் ஒரு படி மேலே சென்று, "எல்லோருக்கும் போதுமான அளவு சிவப்பு விளக்குகள் (அரசு வாகனங்களின் மீது பொருத்தப்படுவது) இல்லாதிருக்கலாம்; அவரவர் கடியாரத்தில் (தேசியவாத காங்கிரஸ் தேர்தல் சின்னம்) சிவப்பு லைட்டை பொருத்திக் கொள்ளலாம்' என யோசனை தெரிவித்துள்ளார்.

ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி, "இத்தனை அமைச்சர்களுக்கும் இடம் ஒதுக்க, எங்கள் ஆபீசில்தான் கை வைப்பார்கள். இனி எங்களுக்கெல்லாம் புல் வெளியில் கூடாரமடித்துக் கொடுப்பார்களோ என்னவோ'' என விசனப்பட்டுக் கொண்டார். அமைச்சர்களோ பாராட்டுகளை ஏற்கத் தயங்குகிறார்கள். ஒரு அமைச்சர், "கார் கொடுத்திருக்கிறார்கள்; பெட்ரோல் கொடுப்பார்களோ என்னவோ" எனக் கவலைப்படுகிறார். ஆக, 'ஜம்போ மினிஸ்ட்ரி' அமைத்த முதல்வரின் நிலை 'அம்போ' என்றாகி விட்டதே!

## (சு)தந்தரக் காற்று!

பதினாறு வருடங்களுக்கு மேலான டாக்ஸிகளெல்லாம் 'ஃபிட்னெஸ் டெஸ்ட்' எடுக்க வேண்டும் எனப் போக்குவரத்து கமிஷனர் ஆணை பிறப்பித்ததை எதிர்த்து, 55,000 டாக்ஸிக்காரர்களும், "ஸ்ட்ரைக்'' என்றதும் மும்பைக்காரர்கள் சந்தோஷித்தார்கள். ஆட்டோவும் ஸ்ட்ரைக்கில் இணையலாம் என்றதும் மகிழ்ச்சிக் கூத்தாடினார்கள். 'அச்-புச்' சென்று தும்மாமல், 'லொக் லொக்' என்று இருமாமல், காலை வீசிப் போட்டு மும்பைத் தெருக்களில் நடந்து எத்தனை காலமாகி விட்டது? அதுவும், கூப்பிடு தூரத்திலுள்ள ஸ்டேஷனுக்கு, டாக்ஸியில் சென்றால் அரை மணி, ஆட்டோவென்றால் இருபது நிமிடம், நடந்து சென்றால் பத்து நிமிடம் என்ற நிலை வந்து விட்ட பிறகு, இந்தத் தலைவலிகள் இல்லாத தெருக்களை மக்கள் காதலிக்கவே துவங்கி விட்டனர். ஆனால் இந்த சுதந்தரத்தை அதிக நாள் நீடிக்க விடாமல், முதல்வர் தலையிட்டு, சமரசப்படுத்தி விட்டாரே! ஹூம்... அவர் கவலை அவருக்கு! எங்கேயாவது மறுபடியும் தேர்தல் வந்து தொலைந்தால்... ஆயிரக்கணக்கில் வோட்டுக்களை இழக்க முடியுமா என்ன?

## விழுந்து விட்ட விழாக்கள்

பொது நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்பவர்கள், இரண்டு விஷயங்களை கவனிக்க வேண்டும்; வி.ஐ.பிக்களுக்கு மாலை, மரியாதை, மைக்கைப் பிடித்தால் மணிக்கணக்

கில் லைக்சரடித்தல் போன்றவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்தால், அங்கே கலை நிகழ்ச்சிகளுக்கு இடமளிக்கக் கூடாது; இரண்டாவதாக, கலைஞர்களைப் பாராட்ட வேண்டுமென முடிவு செய்தால், அங்கே கைதட்டுமளவுக்காவது ஆடியன்ஸ் இருக்க வேண்டும்.



• ஸ்டிரைக் செய்த டாக்சிகள்

முதல் நீதி போதிக்கப்பட்டது, ஷண்முகானந்தாவில் நடந்த IES மானேஜ்மெண்ட் மாணவர்கள் கவுன்ஸில் நடத்திய விழாவில். ஆறு மணி நிகழ்ச்சி ஏழு மணிக்குத் துவங்கி, அறிமுக உரை, டெமோ, தலைமையுரை, சிறப்புரை என இழுத்தடித்து, கிஷோரி அமோன்கரின்

# அமைச்சர்!

இசை நிகழ்ச்சி துவங்கவே இரவு பத்தே காலாகி விட்டது; அந்த இசை மேதையின் குரலில் மயங்கி, 'ஒலி' அமைப்புகள் புதிய பக்கவாத்தியத்தை ஆரம்பித்தன. அதை ஒரு வழியாக சரிப்படுத்தி, அவர் பாட ஆரம்பித்தாரோ இல்லையோ, தபலாக்காரருக்கு, "15 நிமிடத்தில் கச்சேரியை முடிக்கவும்" என்ற 'சிட்' போயிற்று. வெகுண்ட அமோன்கர், "நான் டீ.வி. கமர்ஷியலில்லை; நினைத்த போது ஆன் ஆஃப் செய்வதற்கு" எனக் கோபமாகக் கீழே இறங்கி விட்டார். "இது போல் மூன்று மடங்கு பணம் கொடுத்தாலும் இனி இவர்களுக்குப் பாட மாட்டேன்" என அவர் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, மேடை கலைக்கப்பட்டது!

இரண்டாவது போதனை கிடைத்தது, ஐந்து மாநிலங்களிலிருந்து எம்.பிக்கள் ஆகியிருக்கும் சினிமாக்காரர்களைப் பாராட்ட, பாலிவுட் தயாரிப்பாளர்கள் மும்பையில் நடத்திய விழாவில். விரல் விட்டு எண்ணக்கூடிய அளவிலிருந்த கூட்டத்தைக் கண்டு ஏமாற்றமடைந்த நட்சத்திரங்கள், தங்கள் வேதனையை வாய்விட்டே கூறி விட்டனர். சுனில் தத்தும், ஷத்ருகன் சின்ஹாவும், "எங்கே போய் விட்டது சினிமா உலகமும் அதன் ஆடம்பரமும்? எங்களுக்கு வோட்டளித்தவர்களெல்லாம் எங்கே... எங்கே...?" எனத் தேடவே ஆரம்பித்து விட்டனர். ராஜ் பப்பர் வேறு சமாதானப்படுத்துவது போல், "சுனில் தத் அவர்களே... நீங்கள் அமெரிக்கா போய் வாருங்கள்; பிரமாதமான விழா ஏற்பாடு செய்கிறேன்" என்றதும், தயாரிப்பாளர்கள் கடுப்பாகி விட்டனர். "இது ப்ரொட்யூசர்கள் மட்டுமே கலந்து கொள்ளும் விழா" என்று அவர்கள் வெறுப்பேற்ற, ஒரே குழாயடிச் சண்டை போலாகி விட்டது. மொத்தத்தில், பார்லிமெண்டில் கலந்து கொள்ள நல்ல 'ரிஹர்சல்'!

## ஞான வழி

**வா**ஷி ஃபைன் ஆர்ட்ஸினரின் கலை விழாவில், இறுதி நாளன்று பெண்கள் அணியினர் அரங்கேற்றிய 'இவர்கள்' நாடகம்! முன்பு பம்பாய் ஞானம் நாடகம் நடத்திக் கொண்டிருந்த போது, பெண்களுக்கே ஆண்கள் மேக்-அப் போட்டு மேடையில் உலவ விடுவார். 'இவர்களில்' அந்தச் சங்கடமில்லாமல், இருந்த ஆண் காரெக்டர்களில் இருவரை ஆசுபத்திரியிலும், ஒருவரை ஆபீசிலும், மற்றொருவரை அமெரிக்காவிலுமாகக் காட்டி விட்டார்கள் – நிரந்தரமாய். நல்ல யுக்திதான்!

— ஜெயஸ்ரீ ராஜ்

பழைய ஆங்கிலத் திரைப்படங்களில் அல்லது கார்ட்டூன் படங்களில் ஒரு காட்சி இடம்பெறும்.

முதலில் ஒரு போலீஸ்காரன் திருடனைத் துரத்திக் கொண்டு ஓடுவான்.

திருடன் தப்பிக்க முயன்று, ஒரு பூங்காவை அல்லது கட்டடத்தைச் சுற்றிச் சுற்றி வருவான்.

அப்புறம் பார்த்தால், போலீஸ்காரனைத் துரத்திக் கொண்டு திருடன் ஓடுவது போன்ற நிலை உருவாகிவிடும்!

தமாஷ்தான். ஆனால் உட்பொருளும் உண்டு. திருடன் முழுக்க முழுக்க திருடனும் அல்ல; போலீஸ்காரனும் முழுக்க முழுக்க சட்டத்தின் காவலனும் அல்ல. எல்லோரும் குறையும் நிறையும் உள்ள மனிதர்களே.

அமரர் கல்கி அவர்களுக்கு இந்தக் கருத்தில் மிகுந்த நம்பிக்கை உண்டு. அதனால்தான் அவரது வில்லன்கள் 'வில்லி'களிடம் கூட நமக்கு அனுதாபம் பிறக்கும்.

நாகநந்தியைத் தொடக்கத்தில் வெறுக்காதவர்கள் யார்? அதே நாகநந்தியிடம் நாவலின் பிற்பகுதியில் அனுதாபம் கொள்ளாத வாசகர் ஏது?

அப்படியே நந்தினி. அதனால்தான் அந்த 'வில்லி'யின் பெயரைக் கூட பல பெற்றோர்கள் தங்கள் குழந்தைக்குச் சூட்டத் தயங்கவில்லை.

கல்கி அவர்களின் கதைகள் மட்டுமின்றி பல்வேறு கலை விமர்சனக் கட்டுரைகளில் கூட இந்தத் தன்மையைப் பார்க்கலாம். எதிலும் நிறை குறை இரண்டையும் பார்த்தார். எதற்கு அழுத்தம் கொடுத்துச் சொல்ல வேண்டுமோ அதைச் சொன்னார்.

நிற்க. ஆரம்பத்தில் குறிப்பிட்ட, ஒருவரை ஒருவர் துரத்தும் போட்டி இந்த நூலின் தொகுப்பாசிரியருக்கும் எனக்கும் இடையே நடைபெற்றது.

முதலில் நான் அவரை, 'கதை கட்டுரைகளைத் தொகுத்து விட்டீர்களா? தாமதம் செய்யாதீர்கள்' என்று விரட்டிக் கொண்டிருந்தேன். ஒரு கட்டத்தில் கதை கட்டுரைகளைத் தொகுத்து முடித்து என்னிடம் தந்த பிறகு, 'புத்தகம் என்ன ஆச்சு? கம்போஸ் ஆச்சா இல்லையா? எத்தனை ஃபாரம் அச்சேறின?' என்றெல்லாம் அவர் என்னை விரட்ட ஆரம்பித்தார்!

எப்படியோ ஒருவரை ஒருவர் விரட்டி புத்தகத்தை நேரத்தோடு வெளிக்கொணர்ந்து விட்டோம்.

தொகுப்பாசிரியர் ரங்கராஜன் தமது முன்னுரையில் குறிப்பிட்டிருப்பது போல இந்த நூல் உருவாவதற்குக் காரணம் கல்கி கிருஷ்ணமூர்த்தி நூற்றாண்டுக் குழுவினர் தான். முதல் கூட்டத்திலேயே 'கல்கி'யின்

# கல்கி




சிறந்த கதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள் அடங்கிய ஒரு நூல் வெளிவர வேண்டும் என்று தீர்மானித்தார்கள். அந்தத் தீர்மானம் அமரர் கல்கி நூற்றாண்டு நிறைவு விழாவின் போது நிறைவேறுகிறது.

தீர்மானம் போட்ட பிறகு தொகுக்கும்

பொறுப்பை யாரிடம் ஒப்படைப்பது என்ற கேள்வி எழுந்தது. உடனடியாக எனக்கு ரங்க ராஜனைத் தவிர வேறு யாருமே தோன்ற வில்லை. நன்கு யோசித்த பிறகும் இவரை விடச் சிறந்த ஒருவர் நினைவுக்கு வரவில்லை. காரணம், கல்கி அவர்களுடைய பரம ரசிகர் ரங்கராஜன் என்று சொன்னால் போதாது. கல்கி விசிறி, கல்கியைக் கரைத்துக் குடித்தவர், மனப் பாடம் செய்தவர் என்றெல்லாம் சொன் னாலும் போதாது. 'கல்கி பைத்தியம்' என்று சொன்னால் ஒருவேளை பொருத்தமாயிருக்க லாம். அவர் கல்கி பைத்தியமாக இருப்பது மட்டுமல்ல, அவரை அணுகுகிற அனைவரை யும் கல்கி பைத்தியமாக அடித்து விடுவார்! அவ்வளவு தூரம் கல்கியின் எழுத்துக்களில் மூழ்கிக் குளித்தவர். இந்தத் தொகுப்புக்கு முத்துக்களைக் கண்டெடுத்துக் கொடுத்திருக் கிறார். அவருக்கு எவ்வளவுதான் நன்றி சொன்னாலும் போதாது.

# களஞ்சியம்

ரங்கராஜன் கல்கி கதைகளைப் படித்தவர் மட்டுமல்ல. எந்தச் சூழ்நிலையில் எழுதினார் என்றெல்லாம் கூட அறிந்தவர். ஒரு கதையில் வரும் கதாபாத்திரங்களை, நிஜ வாழ்க்கையில் யார் யாரை மனத்தில் வைத்துக் கொண்டு கல்கி படைத்தார் என்பதைக் கூட சொல்லி விடுவார். அந்த அளவுக்கு அனுபவமும் ஆற்றலும் உள்ளவர். கல்கி பார்த்த சினிமாக் களை, நாடகங்களை, நடன நாட்டியங்களை எல்லாம் அவரும் பார்த்திருக்கிறார். அவர் கேட்ட கச்சேரிகளை இவரும் கேட்டு ரசித் திருக்கிறார். விமர்சகருடன் கருத்தொருமித் துப் போய் வியந்து வியந்து அவரை தமது அருமை நண்பர்களிடம் போற்றியிருக்கிறார். அந்த அருமை நண்பர்களோ (கி. சந்திர சேகரன் போன்றவர்கள்) இவர் சொன்னதற்கு மேலும் சொல்லி இவரிடம் கல்கியின் எழுத் தைப் பாராட்டியிருக்கிறார்கள். இப்படியாக வழக்கறிஞர் ரங்கராஜனின் வாழ்க்கை என்பது சட்ட உலகம், கல்கி உலகம் என்று இரண்டு பகுதிகளாக இன்று வரை நடந்து வந்திருக்கிறது. அப்படிப்பட்டவர் இந்த நூலைத் தொகுத்து அளித்திருப்பது தமிழர்கள் செய்த பாக்கியம்.

ரங்கராஜனே தமது முன்னுரையில் எழுதியிருப்பது போல இதிலுள்ள கதைகள் ஏற்கெனவே நூல் வடிவம் பெற்றிருக்கலாம். ஆனால் அவற்றின் முக்கியத்துவம் கருதி இத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. மறுமுறை படிக்கும் போதும் சிரிப்பும் வரும். கண்ணீ ரும் துளிர்க்கும். அப்படிப்பட்ட அருமை யான கதைகள்.

கட்டுரைகள், விமர்சனங்கள் முதலியன இதுவரை நூல் வடிவில் வெளிவராதவை. எனவே அவற்றுக்கு அதிக முக்கியத்துவம் தந்து, நிறைய இத்தொகுப்பில் சேர்க்கப்பட் டுள்ளன. அவைதாம் எவ்வளவு சுவாரஸ்ய மாய் உள்ளன! கல்கி அவர்களே குறிப்பிட்டி ருப்பது போல விமர்சனத்துக்கு உள்ளாகும் கலை நிகழ்ச்சியைப் பார்க்காதவர்கள் கூட ரசிக்க வேண்டும் என்ற நோக்கில் எழுதப்பட் டவை. அதனால்தான் இத்தனை காலம் சென்று அவற்றை நாம் படித்து ரசிக்க முடிகிறது. கல்கியின் விமர்சனத்துக்குள்ளான கலை நிழ்ச்சிகள் மறைந்து போயின. அவற்றை அளித்த கலைஞர்களும் பலர் மறைந்து போனார்கள். ஆனால் கல்கியின் விமர்சன எழுத்து இன்றும் வாழ்கிறது. அமர நிலை அடைந்து என்றும் வாழும். நம்மை மட்டுமின்றி எதிர்காலச் சந்ததியினரையும் சிரிக்க வைத்து மகிழ்வித்துக் கொண்டே இருக்கும்! அந்தச் சிரிப்பினூடே சிந்திக்கவும் வைக்கும்!

**— 'கல்கி களஞ்சியம்' நூலில்**
**கி. ராஜேந்திரன் எழுதிய நன்றியுரையில்**
**ஒரு பகுதி...**
**(கல்கி களஞ்சியம்; தொகுப்பாசிரியர்:**
**தி. ஸ்ரீ. ரங்கராஜன்,**
**வானதி பதிப்பகம்,**
**13, தீனதயாளு தெரு,**
**சென்னை - 17.**
**விலை ரூ. 150/-)**

'இக்கால இளசுகள் எதை அதிகம் விரும்புகிறார்கள்? மாப்பிள்ளை அழைப்பு; மூகூர்த்தம், வரவேற்பு?' என்று அரட்டை அரங்கத் தலைப்பு பாணியில் திருமணப் பத்திரிகை கொடுத்தவர் வேறு யாருமில்லை! விசுதான்! தமது இரண்டாவது மகள் சங்கீதாவின் திருமணத்திற்கு அவர் இன்னொரு வித்தியாசமான காரியமும் செய்தார்: திருமணத் தாம்பூலத்துடன் சுமார் நூறு பக்கத்தில் ஒரு புத்தகமும் அளித்தார். இதில் வழக்கமான




ஆன்மீக, இலக்கிய விஷயங்கள் மட்டுமின்றி, ஜோதிடம், சுற்றுலா, ஸ்போர்ட்ஸ், வைரமுத்து கவிதை என்று பல சுவையான விஷயங்கள் இடம் பெற்றிருந்தன. சிலவற்றின் தொகுப்பு:

● கடவுளைக் கொண்டாட எத்தனையோ விழாக்கள் உண்டு. அது போல குருவைக் கொண்டாட ஒரு விழா உண்டு. அது ஆனி (அ) ஆடி மாதத்தில் வரும் பௌர்ணமி நாளான குரு பூர்ணிமைதான்.

● நெய் விட்டு தீபமேற்றுவது உத்தமம். நல்லெண்ணெய் விட்டும் ஏற்றலாம். கடலை எண்ணெய் விட்டு ஏற்றுவது அவ்வளவு நல்லதன்று. பஞ்சுத் திரி, தாமரைத் தண்டு திரி, வெண்மையான துணியிலான திரி முதலிய திரிகளை இட்டு ஏற்றலாம். தெற்குத் திசை நீங்கலாக மற்ற திசைகளை நோக்கி விளக்கேற்றலாம். தேவதைகளுக்குப் பிரார்த்தனையாக தீபமிடும் போது, இலுப்பை எண்ணெய்யைப் பயன்படுத்தலாம். அகல், வெள்ளி, பித்தளை விளக்குகள் ஏற்றலை.

● தமது வீட்டுத் திண்ணையில் ஓர் ஏழை பசியோடு இருக்க, அதனைக் கவனிக்காமல் கணவனும், மனைவியும் உண்டால், அந்த ஏழை அதுவரை செய்த பாவத்தில் பாதி அந்த வீட்டுக்காரனைச் சாரும் – காஞ்சிப் பெரியவர்.

● இன்றைய பாவங்கள் ஏழு என காந்திஜி குறிப்பிடுபவை : 1. கொள்கை இல்லாத அரசியல், 2. உழைப்பு இல்லாத ஊதியம், 3. நாணயம் இல்லாத வியாபாரம், 4. ஒழுக்கம் இல்லாத கல்வி,

5. மனச்சாட்சி இல்லாத இன்பம்,
6. மனிதாபிமானம் இல்லாத விஞ்ஞானம்,
7. தியாகம் இல்லாத பிரார்த்தனை.

● ஆயுளை விருத்தி செய்பவை : மாலை வெயில், ஹோமப் புகை, தெளிந்த நீர், இரவில் உண்ணும் பால் சோறு, பெரியோர்களை வணங்குதல், நோயாளிகளுக்கு உதவுதல்.

● பகவத் கீதையில் பகவான் சொல்கிறார் : அர்ஜுனா! மூன்று உலகங்களிலும், நான் செய்ய வேண்டியது என்று எனக்கு எந்தவிதமான கடமைகளும் இல்லை. நான் பெறாத பேறும் ஒன்றுமில்லை. ஆனாலும் கூட நான் செயலில் ஈடுபட்டுக் கொண்டுதான் இருக்கிறேன். நான் எந்தக் காரியமும் செய்யாமல் சும்மாவே இருந்திருப்பேனேயாகில் உலக மக்களும் என்னைப் பின்பற்றி எந்த ஒரு தொழிலையும் செய்யாமலேயே இருந்து விடுவார்கள்.

● வழக்கமாக, பெருமாள்தான் பள்ளிகொண்ட நிலையில் இருப்பார்.

# விசு வீட்டுத் திருமணம்!

ஆனால் திருப்பதிக்கும், சென்னைக்கும் இடையே ஊத்துக்கோட்டைக்கு அருகில் உள்ள சுருட்டப்பள்ளி என்ற இடத்தில் உள்ள சிவன் கோவிலில் சிவன் பள்ளிகொண்டு இருக்கிறார். இவருக்கு 'பள்ளிகொண்டேஸ்வரர்' என்று பெயர்.

● நம் நாட்டு தேசிய கீதம் முழுவதையும் பாடி முடிக்க ஆகும் நேரம் எவ்வளவு தெரியுமா? 52 விநாடிகள்.

● ஆஸ்திரேலிய பிரதமர் வாழும் அலுவலக இல்லத்துக்குப் பெயர் 'லாட்ஜ்'.

● முதன் முதலில் தமிழில் உருவாக்கப்பட்ட கம்ப்யூட்டர் சாப்ட்வேர் பெயர் : பாரதி.

## குவிஸ் போட்டி – 12 முடிவு!

**சரியான விடைகள் :**

**1) செஞ்சிலுவைச் சங்கம் 2) ஷபானா ஆஸ்மி 3) மேதா பட்கர் 4) ப்ளூக்ராஸ் 5) கல்கத்தா 6) சமூகநீதி 7) சென்னை 8) உன்னால் முடியும் தம்பி.**

சரியான விடைகளை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**இரா. சந்திரசேகரன்,**
**25/1 கட்டபொம்மன் தெரு,**
**விருது நகர் – 626 001**

● உலக புத்தக தினம் ஆண்டுதோறும் ஏப்ரல் இருபத்து மூன்றாம் தேதி கொண்டாடப்படுகிறது.

● உலகின் மிகப் பெரிய சினிமா தியேட்டர் நியூயார்க்கில் உள்ள 'ராக்ஸி' அரங்கம்தான்.

● ஏ இரண்டாயிரமே! என்ற வைரமுத்துவின் கவிதையிலிருந்து சில வரிகள் :

ஏ இரண்டாயிரமே!
ஏது கொணர்வாய் எமக்கு?
கவலைகள் கழிந்த
நாடு கொண்டு வா!
கதவுகள் அழிந்த
வீடு கொண்டு வா!
தேய்வதை மறந்த
நிலவு கொண்டு வா!
தீமைகளை மறந்த
மனது கொண்டு வா!
நிம்மதி என்னும்
வெகுமதி கொண்டு வா!
அகிலம் துயில
அமைதி கொண்டு வா!

தொகுப்பு : **கௌதம்ராம்**



## சுமி சூப்பர்மார்க்கெட்

தீபாவளி மலர்கள்ல இன்னும் யாரும் பொம்மை பார்த்து முடிச்சிருக்க மாட்டாங்கன்னு நினைக்கறேன். தினமணி மலர்ல வந்திருக்கற சுந்தர ராமசாமியோட ஷார்ட் ஸ்டோரியைப் படிச்சிட்டவங்க மட்டும் ஒரு அற்புதமான கனவு கலைஞ்சி, அந்த ஞாபகத்துலேயே குளிர் காயற ஃபீலிங்கை அனுபவிச்சிருப்பாங்க. அம்மன் தரிசனம் மலர்ல ஏ.என். சிவராமன் வேதங்கள் பத்தின ஒரு அறிமுகக் கட்டுரை எழுதியிருக்கார். புரிஞ்சிக்க ரொம்பக் கஷ்டமான ஒரு விஷயத்தை 'இதைவிட யாரும் சிம்பிளா விளக்க முடியாது'ன்னு அடிச்சி சொல்றா மாதிரியான கட்டுரை அது. எப்பவும் படிச்சிட்டே இருக்கறதோட லாபத்தைப் பத்தி தினமணி மலர்ல எழுதியிருக்கிற ஏ.என்.எஸ்., அதனோட பலன் என்னன்றதை இந்த வேதம் கட்டுரைல காட்டியிருக்கார்.

இத்தனை சிம்பிளா, அழகா, தெளிவா எடுத்துச் சொல்ற ஒரு தமிழ் வாத்தியார் எனக்குக் கிடைச்சிருந்தா, நான் கூட தமிழண்ணல் கணக்கா தொடர் கட்டுரை எழுத ஆரம்பிச்சிருப்பேன்.

** ** **

# புயல் பாதித்த மக்களுக்கு அரிசி கொடுக்காதீர்!

ஒரிஸ்ஸா புயல் பத்தி பேப்பர்ல படிக்கும்போது ரொம்பக் கஷ்டமா இருக்கு. இயற்கை, வருஷம் தவறாம அநேகமா அந்த ஏரியாலதான் கபடி ஆடுது. நிவாரண நிதி, உணவுப் பொருட்கள்னு முடிஞ்ச அளவு உதவறது தேவ குணம். பை-த-வே, ஒரு பழைய இன்ஸிடென்ட் ஒண்ணு ஞாபகம் வருது.

ரொம்ப வருஷம் முன்னாடி அதிசயமா ராமநாதபுரம் டிஸ்ட்ரிக்டை மழையும் புயலும் துவம்சம் பண்ணிச்சாம். அப்ப இங்க சி.எம்., காமராஜர்.

வேஷ்டியை மடிச்சிக் கட்டிக்கிட்டு மதுரைலேருந்து வெள்ளப் பகுதியைப் பார்க்கக் கிளம்பிட்டார்.

'நடந்து வரவேண்டாம், ரொம்ப ரிஸ்க்'னு அதிகாரிகள் சொன்னதை கேர் பண்ணவேயில்லை.

நிவாரண ஏற்பாடுகள் எப்படி இருக்குன்னு விசாரிச்சிட்டே வந்தவர், "சாப்பாட்டுக்கு என்ன பண்ணியிருக்கீங்க. அதைச் சொல்லுங்க முதல்ல!"ன்னாராம் ஒரு ஆபீசர்கிட்ட.

'அதுக்கென்ன, வீட்டுக்கு அஞ்சு கிலோ அரிசி...'ன்னு அவர் சொல்லி முடிக்கலை; சீறிட்டாராம் காமராஜர்.

"அரிசி ஒண்ணும் குடுக்க வேணாம். ஆள் வெச்சி, அங்கங்க சாதமாவே வடிச்சித் தந்துடச் சொல்லு"ன்னாராம்.

அப்ப அந்த ஏரியா பிரமுகர் ஒருத்தர், தனியா அவர்கிட்ட "அரிசியா குடுக்கறது வேலை சுலபமில்லையா? இந்த நேரத்துல சாதம் வடிச்சிக்கிட்டிருந்தா எப்படி முடியும்"ங்கற மாதிரி ஏதோ சந்தேகம் கேட்டிருக்கார்.

அதுக்குக் காமராஜரோட பதில்: "அரிசின்னா ஒழுங்கா போய்ச் சேராதே!"

மக்கள் நலன்ல அக்கறையும் 'தீர்க்கதரிசனமும்' சேர்ந்த இப்படியொரு தலைவர் இப்ப ஒரிஸ்ஸால உண்டான்னு எனக்குத் தெரியலை.

** ** **

இந்த தீபாவளி ரிலீஸ் படங்கள்ல ரெண்டு ரஹ்மான் ம்யூசிக். மூணு தேவா. ஆக்சுவலா ரஹ்மானுடைய நாலு படம் வந்திருக்கணும். ராஜீவ்மேனனும் மணிரத்னமும் ஜகா வாங்கிட்டதால தாஜ்மஹாலும் முதல்வனும் மட்டும் இப்ப கிரவுண்ட்ல நிக்குது.

சூப்பர் ஹிட்னு சொல்றமாதிரி தாஜ்மஹால்ல ரெண்டு பாட்டுத் தேறுது- நான் கேட்ட வரைக்கும். முதல்வன் அவ்வளவா இம்ப்ரஸ் பண்ணலை.

'ஹலோ'ல தேவாவோட ஒரு பீஸ் இந்த வருஷம் தமிழ் நாட்டு டீக்கடைகளை மொத்தக் குத்தகைக்கு எடுத்துக்கும்னு நினைக்கறேன்.

— சுமி

## எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும் அனைவருக்கும் எங்களது தீபாவளி வாழ்த்துக்கள்

### ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி




# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
**102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017.**
**PH: 4344442., 4327764 TUESDAY HOLIDAY**



**P.R. ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-**

**(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)**

*குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.*

---



நகைக் கடைக்கு நிறைய அனுபவம் தேவை. எனக்கு 20 வருட அனுபவம் உள்ளது. P.R. ஜுவல்லரி நிறுவனம் தொடங்கி 13 ஆண்டுகள் ஆகிறது. எங்கள் கடைக்கு நிறைய வாடிக்கையாளர்கள் உள்ளனர். ஆர்டரின் பேரில் வைர நகைகள், தங்க நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் சிறந்த முறையில் செய்து தருகிறோம். பரிசுப் பொருட்கள் ரூ. 50 முதல் ரூ. 10,000 வரை கிடைக்கும். அனைத்து ராசிக் கற்களும், ஸ்படிக மாலைகள், ஸ்படிக விநாயகர், ஸ்படிக லிங்கம், பவழ விநாயகர், பவழ மாலைகள், முத்து மாலைகள் அனைத்தும் கிடைக்கும்.

ராஜாக்கள் காலத்தில் இருந்தே வைரங்கள், வைடூரியங்கள், இரத்தினங்கள், நவரத்தினங்கள் உபயோகத்தில் உள்ளன. தற்போது 5 வருடமாக அனைவரும் ராசிக்கற்களை விரும்பி வாங்குகிறார்கள். எந்த ஜோதிடராக இருந்தாலும் ஒருவருக்கு இராசிக்கல் தேர்ந்தெடுக்க அவரது ராசிப்படியும், நடப்பு திசைப்படியும், என் படியும்தான் எழுதித் தருகிறார்கள். இதில் ராசிப்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. உதாரணமாக, நாம் கோவிலுக்குச் சென்று அர்ச்சனை செய்யும் பொழுதும், வீட்டில் நடைபெறும் ஹோமங்களின் போதும் ஜென்ம நட்சத்திரம், இராசி சொல்லித்தான் அர்ச்சனை செய்கிறோம். அதனால், அதன்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. அனைவரும் நவரத்தின மோதிரம் அணியலாம். மிகவும் நல்லது. இது 9 கிரகங்களின் பலனைத் தரும். 6 கிராம் தங்கத்தில் நவரத்தின மோதிரம் ரூ. 6,250/-

<u>நவரத்தினங்களின் பயன்கள், விலை விபரங்கள், அணிபவர்கள் வழிபட வேண்டிய ஸ்தலங்களின் விபரங்கள் :</u>

1. சூரியன் – மாணிக்கம் (RUBY) அறிவு விருத்தியாகும். நல்ல உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லும். தைரியத்தையும் துணிச்சலையும் தரும். செல்வம் தரும். சிம்மராசிக்காரர்களும், சூரிய தசை நடப்பவர்களும் அணியலாம். 1 CARAT விலை ரூ. 1500/- ஆகிறது. வெள்ளியில் அணிவது சிறந்தது. 20 Centகல் வைத்து மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் சூரியனார் கோயில். தஞ்சை மாவட்டம். கும்பகோணத்திலிருந்து 12 கி.மீ. தொலைவில் உள்ளது.

2. சந்திரன் – முத்து (PEARL) ஞாபக சக்தி, செல்வம், வாக்கில் வலிமை, பலவித வசதிகள் ஏற்படும். கடக ராசிக்காரர்களும், சந்திரன் தசை நடப்பவர்களும் அணியலாம். 1 CARAT விலை ரூ. 100/-. வெள்ளியில் அணிவது சிறந்தது. 2 காரட் முத்து வைத்து மோதிரம். ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திங்களூர். தஞ்சை அருகில் உள்ளது.

3. குரு – புஷ்பராகம் (PUSPARAGAM) வசதி, சுபகாரியங்கள், நன்மதிப்பு, செல்வம் ஆகியவை பெருகும். தனுசு ராசி, மீன ராசிக்காரர்கள் மற்றும் குருதசை நடப்பவர்கள் அணியலாம். வெள்ளை, மஞ்சள் ஆகிய வண்ணங்களில் கிடைக்கும். தங்கத்திலும், வெள்ளியிலும் அணியலாம். 4 கிராம் தங்கத்தில் ரூ. 2300/- ஆகும். வெள்ளியில் ரூ. 400/- ஆகும். வழிபட வேண்டிய ஸ்தலம் ஆலங்குடி. கும்பகோணத்தில் இருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது.

4. ராகு – கோமேதகம் (GOMEDAGAM) தடைபடும் காரியங்கள் நிறைவேறும். ராகு தசை நடப்பவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. 1 CARAT விலை ரூ. 250/- மோதிரம் விலை ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திருநாகேஸ்வரம் கும்பகோணத்தில் இருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

5. புதன் – மரகதப் பச்சை (EMERALD) கல்வி, செல்வம், ஞானம், ஆரோக்கியம், அதிர்ஷ்ட வாய்ப்புகள் ஏற்படும். மிதுன ராசி, கன்னிராசிக்காரர்கள் மற்றும் புதன் தசை நடப்பவர்கள் அணியலாம். 1 CARAT விலை ரூ. 1500/- வெள்ளியில் அணிவது சிறந்தது. 20 Cent கல் வைத்து வெள்ளி மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திருவெண்காடு. மயிலாடு துறை அருகில் உள்ளது.

6. சுக்கிரன் – வைரம் (DIAMOND) புகழ், செல்வம், அனைத்துக் காரியங்களிலும் வெற்றி கிடைக்கும். துலா ராசி, ரிஷப ராசிக்காரர்கள் மற்றும் சுக்ர தசை நடப்பவர்கள் அணியலாம். தங்கத்தில் அணிவது சிறந்தது. 1 CARAT விலை ரூ. 35,000/- 5 Cent வைரம் வைத்து 4 கிராம் தங்கத்தில் மோதிரம் ரூ. 4,250/- வழிபட வேண்டிய ஸ்தலம் கஞ்சனூர், கும்பகோணத்தில் இருந்து சூரியனார் கோயில் வழியில் 20 கி.மீ. தொலைவில் உள்ளது.

7. கேது – வைடூரியம் (CATSEYE) வியாபாரம் பெருகும். நிறைய வருமானங்களைக் கொடுக்கும். கேது தசை நடப்பவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. 1 CARAT விலை ரூ. 1000/- 20 Cent கல் வைத்து மோதிரம் விலை ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் பெரும்பள்ளம் (வாணகிரி) மயிலாடுதுறை – பூம்புகார் வழியில் தர்மகுளம் அருகில் உள்ள நாகநாதசுவாமி கோவிலில் உள்ளது.

8. சனி – நீலம் (SAPPHIRE) அறிவு, மன அமைதி, பெயர், புகழ், செல்வம் ஆகியவை தரும். மகர ராசி, கும்பராசிக்காரர்கள் மற்றும் சனி தசை நடப்பவர்கள் அணியலாம். 1 CARAT விலை ரூ. 1500/- வெள்ளியில் அணிவது சிறந்தது. 20 Cent கல் வைத்து மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் திருநள்ளாறு. காரைக்காலுக்கு அருகில் உள்ளது.

9. செவ்வாய் – பவழம் (CORAL) மனதில் துணிவு, திருஷ்டியைப் போக்கும். செல்வம் மேலும் பல நன்மைகள் கூடும். மேஷ ராசி, விருச்சிகராசிக்காரர்கள், செவ்வாய் தசை நடப்பவர்கள் அணியலாம். 1 CARAT விலை ரூ. 100/- வெள்ளியில் அணிவது சிறந்தது. 2 CARAT பவழம் வைத்து மோதிரம் ரூ. 400/- வழிபட வேண்டிய ஸ்தலம் வைத்தீஸ்வரன் கோயில். மயிலாடுதுறையில் இருந்து 14 கி.மீ. தொலைவில் வடக்கில் உள்ளது.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம். விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபகசக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும். நம்பிக்கை, உழைப்பு, முயற்சி செய்தால் ராசிக்கல் மோதிரம் அணிந்து 100 சதவீத வெற்றி பெறலாம். எங்களிடம் ஜாதகம் கொண்டு வந்தால் என்ன கல் போட வேண்டும் எனச் சொல்கிறோம். கட்டணம் கிடையாது. ஜாதகம் இல்லாதவர்கள் பிறந்த தேதி, நேரம் ஆகியவற்றைக் கொண்டு வந்தால் கம்ப்யூட்டர் மூலம் ஜாதகம் கணித்து தருகிறோம். கட்டணம் ரூ. 50/- எங்கு ஜாதகம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ராசிக்கல் மோதிரம் வாங்கிப் பயன்பெறுங்கள். நாங்கள் தரும் கல் ஒரிஜினல் என முழு உத்தரவாதம் தருகிறோம். தபால் எழுதினால் முழு விவர பாம்லெட் இலவசமாக அனுப்புகிறோம்.

ADVT.

# 42

# குறையொன்றுமில்லை

**ச**த்யத்தினால்தான் இந்த பூமி நிலைத்து நிற்கிறது. சூரியனால் ஆகாசம் நிலைத்து நிற்கிறது. ருதத்தினால் சூரியாதிகளெல்லாம் நிலைத்து நிற்கிறார்கள். (இயற்கையின் நியதிகளை, இயக்கத்தை ருதம் என்று சொல்வார்கள்.)

சத்யம், ருதம் இந்த இரண்டும்தான் நம்மைக் காப்பாற்றுகின்றன. ஆகையால் இவற்றை நாம் கடைப்பிடிக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

பகவத் கீதையிலே நான்காவது அத்தியாயத்திலே இதே விஷயத்தை பகவான் அழகாகச் சொல்கிறான் :

கர்மாவை முதலில் தெரிந்துகொள்
அகர்மாவையும் தெரிந்துகொள்
விகர்மாவையும் தெரிந்து கொள்

– இந்த மூன்றையும் நன்றாகத் தெரிந்து கொண்ட பிற்பாடு, கர்மாவிலே அகர்மா, விகர்மாவைப் பார்; அகர்மாவிலே கர்மா, விகர்மாவைப் பார்; விகர்மாவிலே கர்மா, அகர்மாவைப் பார் என்கிறான் கீதையில்!

'எவன் அப்படிப் பார்க்கிறானோ, அவன் தான் புத்திமான்' என்கிறான்.

பார்ப்பது இருக்கட்டும். இப்போது இது புரிகிறதா யாருக்காவது!

கர்மாவில அகர்மா விகர்மாவை பார்; அகர்மாவிலே விகர்மா கர்மாவைப் பார்; விகர்மாவிலே கர்மா, அகர்மாவைப் பார் என்றால் என்னவென்று தெரிந்தால்தானே பார்க்க முடியும்!

கர்மாவும் அகர்மாவாகும் என்பதை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அதே போல் கர்மா விகர்மாவாகும், அகர்மா கர்மாவாகும்... எல்லாம் மாறி விடும்! நாம் அனுஷ்டானத்திலே மாறினோமானால் அதுவே மாறிவிடும்.

விகர்மா எப்படி கர்மாவாகிறது என்று பாருங்கள் :

விகர்மா என்றால், 'மறந்தும் செய்யக் கூடாத கெட்ட கர்மா. ரொம்ப ரொம்பக் கொடியது! அதைச் செய்யவே கூடாது என்னும் போது அதைச் செய்வது எப்படி கர்மாவாக ஆகும்..? கெட்டது கூட கர்மாவாகுமா? எ.ர.றால், உதாரணம் சொல்லலாம்.

பொய் சொல்வது இருக்கிறது பாருங்கள், அது விகர்மா. விகர்ம கோஷ்டியிலே சேர்ந்தது. பொய் சொல்வது என்பது எப்படி கர்மாவாக ஆகும்?

'சத்யம் வத' – உண்மையே பேசு என்று





எடுத்துச் சொல்லிவிட்டு 'அந்ருதம் வத' (உண்மை அல்லாததைப் பேசு) என்றால் அது நன்றாகவா இருக்கிறது?

ஆனால் சில இடங்களிலே பொய்யைச் சொன்னால்தான் சத்யம் என்கிறது சாஸ்திரம்!

கல்யாண காலத்திலே பொய் சொல்லலாம்.

ஆயிரம் பொய் சொல்லியாவது கல்யாணம் பண்ணு என்பது உலக வழக்கு.

நன்றாக கவனிக்க வேண்டும் –

**விவாஹ காலே** என்பதுதான் மனுஸ்ம்ருதி வாக்கு. விவாஹம் நடந்து கொண்டேயிருக்கிறது. மாங்கல்ய தாரணம் ஆகப் போகிறது. அப்போது உபய சம்பந்தி வர்க்கங்களுக்கிடையிலே சண்டை வந்து விடுகிறது. ஏகமாக சண்டை! கல்யாணமே நின்றுபோய் விடும் போலிருக்கிறது. மாங்கல்ய தாரணமே நடக்காது போலிருக்கிறது.

அப்போது, வந்திருக்கிற பந்து மித்ரர்களெல்லாம் ஆயிரம் பொய் சொல்லியாவது அந்தக் கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டும் என்று அர்த்தம், அந்த வாக்குக்கு.

அந்த மாதிரி சமயத்தில் கல்யாணத்தை நிறுத்துவதற்கு யாரும் பிரயத்தனம் பண்ணக் கூடாது. உற்சாகப்படுத்தி, சண்டையை வலுக்கும்படியாகப் பண்ணக் கூடாது. சமனம் பண்ணி வைத்து, கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டும்.

- இதைத்தான் சொல்கிறார் மனுஸ்ம்ருதியிலே – விவாஹ காலத்திலே விவாஹம் நடக்கிறபோதே ஏதாவது தடங்கல் நேர்ந்து கல்யாணம் நிற்கும்போல் இருந்தால், அந்தச் சமயத்திலே பொய் சொல்லி கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டும் என்று சொல்லப்பட்டதேயொழிய, ஜாதகத்தைக் கொடுக்கிற நேரத்திலிருந்தே பொய்யை ஆரம்பித்து விடு என்று

■ முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் ■

அர்த்தமில்லை! ஆகையினால் சாஸ்திரத்தை ரொம்ப ஜாக்கிரதையாக அணுகிப் புரிந்து கொள்ள வேண்டும் நாம்.

பொய்யைச் சொல்லி, பொய்யைச் சொல்லியே மொத்தமும் பொய்யாக ஒரு கல்யாணம் பண்ணினால், கடைசியில் அது தெரிந்து போயிற்று என்றால் எவ்வளவு கஷ்டமாக இருக்கும்! அப்புறம் சம்பந்திகள் ஒருத்தரையொருத்தர் சந்திக்க வேண்டாமா?

ஆகையினாலே பொய்யை சந்தர்ப்பத்துக்கும் சமயத்துக்கும் ஏற்றபடி சொல்ல அனுமதி தருகிறது சாஸ்திரம்.

மனுவானவர் பொய் சொல்லலாம் என்று அனுமதி கொடுத்திருப்பதாக இதன் காரணமாய் அர்த்தம் கொண்டுவிடக் கூடாது.

அந்தச் சமயத்திலே கல்யாணம் நின்று போனால் அப்புறம் அது நடப்பதற்கு எவ்வளவு சிரமப்பட வேண்டும்! அதை உத்தேசித்துத்தான் சொல்கிறார். ஆகையினாலே விவாஹ காலத்தில் பொய் சொல்ல அனுமதி உண்டு.

அதே மாதிரி மனைவியிடமும் குழந்தையிடமும் பொய் சொல்ல அனுமதி இருக்கிறது – ஹிதத்துக்காகச் சொல்கிற பொய்கள் அவை. 'இப்போது இல்லை. அப்புறம்' என்று சில நேரங்களில் சொல்கிறோமே – அந்த மாதிரியான பொய்கள்.

ஒருத்தர் வீட்டை விட்டு வெளியே கிளம்புகிற போது, அவருடைய குழந்தை அங்கேயிருந்து வந்து, 'யானை வாங்கிக் கொடு' என்று கேட்கிறது!

ஒருநாள் திருவல்லிக்கேணிக்கு அந்தக் குழந்தையை அழைத்துப் போயிருக்கிறார் அவர். அங்கே வாசலில் ஒரு யானை கட்டியிருக்கிறது. அந்த யானை வேண்டுமென்று கேட்கிறது குழந்தை! அன்றைக்கு யானையைப் பார்த்த தினத்திலிருந்து தினமும் கேட்டுக் கொண்டே இருக்கிறது. ஒருநாள் இப்படி வெளியே போகிறபோது யானை வேண்டும் என்று அது கேட்கிறது. 'நாளைக்குக் கட்டாயம் வாங்கி வருகிறேன்' என்று சொல்லி விட்டுக் கிளம்பி விடுகிறார் அவர்! 'நிச்சயமாக நாளை வாங்கிண்டு வரேன்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டவர்தான்... ஆனால் அவர் அதை வாங்கிக் கொண்டு போகப் போவதில்லை. அந்த யானையை வைத்துக் கொண்டு விளையாட முடியுமா...? 'கட்டாயம் வாங்கிக் கொண்டு வருகிறேன்' என்று குழந்தைக்கு ஒரு திருப்தியை உண்டாக்குகிறார். இது பொய்யா? பொய் என்று சொல்லலாமா...?

சொல்கிற **வார்த்தை** பொய்தான். யானையை வாங்கிக் கொண்டு போவதாகச் சொல்வது பொய் – ஆனால் அது பொய் யாகாது!

பொய்ம்மையும் வாய்மையிடத்து புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்

என்று திருவள்ளுவரும் பொய்மையும் வாய்மையாகும் என்றே சொல்லியிருக்கிறார். பிறருக்கு அதனால் சிரமமில்லாமலிருந்தால் அந்தப் பொய்யும் உண்மையாகும்.

சீதா பிராட்டியே பொய் சொல்கிறாள் என்றால் மீதிப் பேர் விஷயத்தை என்ன சொல்வதாம்!

ஆனால் எந்த விஷயத்தில் அவள் பொய் சொல்லியிருக்கிறாள் என்று கவனியுங்கள்.

அசோக வனிகையை துவம்சம் பண்ணுகிறான் ஆஞ்சநேயன். அத்தனை அரக்கர்களும் அலறியடித்துக் கொண்டு எழுந்தார்கள். எல்லோரும் அலறியடித்துக் கொண்டு வந்து சீதையிடம் 'இது யார்? இப்படி துவம்சம் பண்ணுவது யார்?' என்று கேட்டார்கள்.

அதற்கு சீதை என்ன சொல்ல வேண்டும்...?

"என் பர்தாவிடமிருந்து வந்த தூதுவன். எனக்குக் கணையாழியைக் கொடுத்திருக்கிறான். நானும் சூடாமணியைக் கொடுத்திருக்கிறேன். அங்கே ராமனிடத்திலே போகப் போகிறான் அவன். ராமனிடத்திலேயிருந்து வந்த தூதுவன். ஆஞ்சநேயன் என்று பெயர்..." – இப்படித்தானே சொல்ல

## அருள்வாக்கு

**ஸூர்யோதயத்துக்கு முந்தைய மூன்றே முக்கால் நாழிகை (ஒரு நாழிகை என்பது 24 மினிட்)க்குப் பிராதக் காலம் என்று பேர். அருணோதயம் என்றும் சொல்லுவதுண்டு. அந்தக் காலத்தில் பச்சை ஜலத்தில் குளிப்பதற்கு பிராதஸ்நானம் என்று பெயர். ஆற்றில், குளத்தில் செய்தாலும் சரி, அகத்தில் மொண்டு விட்டுக் கொண்டு செய்தாலும் சரி. தலைக்கும் ஜலம் விட்டுக் கொள்ள வேண்டும். (தலைக்கு தினமும் ஜலம் விட்டுக் கொள்வது ஸ்திரீகளுக்கு அவசியமில்லை. விரததினம், பித்ருதினம் தவிர மற்ற நாட்களில் அவர்கள்**

வேண்டும் சீதை? உண்மையைத்தானே சொல்ல வேண்டும்? ஆனால் அவள் என்ன சொல்கிறாள்...?

''என்னைக் கேட்கிறீர்களே! எனக்கென்ன தெரியும்? பாம்பின்கால் பாம்பறியும்! உங்களில் ஒருவனாக அவன் இருக்கக்கூடும். எனக்கென்ன தெரியும்!'' என்று சொல்லி விட்டாள்.

ஆஞ்சநேயனாகிற உத்தமனை ரக்ஷிப்பதற்காக இப்படிச் சொன்னாள் சீதை. ஆகையினாலே உத்தம பதார்த்தத்தை ரக்ஷிக்க வேண்டுமென்றால் பொய் சொல்லலாம்; தோஷமில்லை.

இன்னொரு இடத்திலே பாருங்கள் – ஒரு மஹரிஷி உட்கார்ந்து கொண்டு ஜபம் பண்ணிக் கொண்டிருக்கிறார். அவருக்கெதிரே 'அம்மா' என்று கத்திக் கொண்டு ஓடி வருகிறது ஒரு பசு. அலறியடித்துக் கொண்டு அவர் ஆசிரமத்துக்குள்ளே போய் விடுகிறது. அங்கேயிருந்து கையிலே கத்தியோடு ஒருவன் வருகிறான். பசுவை வெட்டுவதற்காகத் துரத்திக் கொண்டு வருகிறான். அது பயந்துகொண்டு உள்ளே போயிருக்கிறது. வந்தவன் பார்த்தான். பசு கண்ணுக்குத் தெரியவில்லை. அந்த மஹரிஷியைப் பார்த்து, 'இந்தப் பக்கம் பசு போயிற்றா?' என்று கேட்டான்.

அவர் என்ன சொல்ல வேண்டும்...? 'பசு வந்தது. உள்ளுக்குள்ளே இருக்கிறது' என்று அவர் உண்மையே சொன்னாரென்றால் என்ன நடக்கும் இப்போது....' அவர் ஆசிரமத்துக்குள்ளேயே கோஹத்தி பண்ணி விடுவான் அவன். பசுவைக் கொல்லுவான்!

ஆகையால் இப்போது அந்த மஹரிஷி என்ன சொல்ல வேண்டும் என்று கேட்டால் பொய்தான் சொல்லவேண்டும்! 'பசு இந்தப் பக்கம் வரவேயில்லை' என்று அப்பட்டமான பொய்யைச் சொன்னால்தான் அது 'சத்யமாகும்'.

'சத்யம்' பேசக் கூடாது இந்த இடத்திலே.

ஆனால் மஹரிஷி பொய் சொல்லாமலே தப்பித்துக் கொண்டு விட்டார். ரொம்ப கெட்டிக்காரர் அவர்! என்ன பண்ணினார்... "கண் பார்க்கும் ஆனால் பேசாது; வாய் பேசும் ஆனால் பார்க்காது" என்று பதில் சொன்னார்!

வந்தவன், 'இது ஏதோ பைத்தியம் போலிருக்கிறது! எதையோ உளறுகிறது' என்று கத்தியை எடுத்துக் கொண்டு புறப்பட்டுப் போய்விட்டான்!

அவர் சொல்வதைப் புரிந்துகொள்கிற ஞானம் அவனுக்கு இல்லை. கண் பார்க்கும் ஆனால் பேசாது. வாய் பேசும் ஆனால் பார்க்காது என்றால், ''கண்ணால் பார்த்தேன்; பேச முடியாத நிலையில் இருக்கிறேன்'' என்று சொல்கிறார். அதைப் புரிந்து கொள்வதற்கு அவனுக்கு சக்தியில்லை. திரும்பிப் போய் விடுகிறான். பசு ரக்ஷிக்கப்படுகிறது.

ஆகையினாலே, விகர்மா கர்மாவாகிறது பாருங்கள்!

ததிபாண்டன் கதையும் இதையே உணர்த்துகிறது.

(தொடரும்)



தலைக்கு மஞ்சள் ஜலம் புரோக்ஷித்துக் கொண்டாலே போதும்.) பொதுவாகத் தலையோடு கால் பச்சை ஜலத்தில் காலங்கார்த்தாலேயே குளித்துவிட வேண்டும். இதன் த்ருஷ்ட பலன், அதாவது ப்ரத்யக்ஷ விளைவு, முதலாவதாக தேஹ சுத்தி. உடம்பின் அழுக்கு போகிறதென்று நேரே தெரிகிறது. அதோடு அந்த வேளையில் குளித்து விடுவதால் தூங்குமூஞ்சித்தனம், சோம்பல் எல்லாம் போய், உத்ஸாஹமும் சுறுசுறுப்பும் உண்டாகின்றன. புத்தித் தெளிவும் ஏற்படுகிறது. இன்னம் மெடிகல் ஸயன்ஸ்படி சொல்லும் போது இந்தப் ப்ராத ஸ்நானத்தினால் நரம்பு மண்டலமே உறுதியடைந்து, இப்போது 'நெர்வஸ் டிஸீஸ்' என்று பல ரூபத்தில் பரவி வருவதெல்லாம் க்ஷீணித்து விடும் என்கிறார்கள். அந்த வேளையில் ஸ்நானம் செய்வது உணர்ச்சிகளையும் குளிரப் பண்ணி சமனமாக்குகிறதென்பது இதன் ஸைகலாஜிகல் எஃபெக்ட்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.



அவர்கள் எதை எதிர்பார்க்கவில்லையோ அது நடந்தது. அசாத்தியம் என டாக்டர்கள் கூறியது அசத்தியமாகப் போயிற்று.

இரண்டு வருடங்களாகக் 'கோமா'வில் கிடந்த பரமேஸ்வரன் ஒருநாள் கண்களைத் திறந்தார். மலங்க மலங்க விழித்தார். மறுநாள் கை கால்களை அசைத்தார். ஐந்தாம் நாள் சாய்ந்தாற்போல் உட்கார வைக்கும்படி ஜாடை காட்டினார். மறுநாள் பகல் ''இன்றைக்கு என்ன சமையல்?'' எனக் குழறியபடி விசாரித்தார்.

பிள்ளைகள் மோகனுக்கும் குமாருக்கும் உதறல் எடுத்தது. மருமகள்கள் ரமாவும் சுதாவும் நடுங்கிப் போனார்கள். தாத்தா மறுபடி எழுந்து உட்கார்ந்ததில் வீட்டு வாண்டுகளுக்கு மட்டும்தான் மகிழ்ச்சி.

டாக்டர் வந்து பார்த்தார்.

"நீங்கள் 'ரெகவர்' ஆனது மெடிகல் ஹிஸ்டரியிலேயே ரொம்ப அபூர்வம். இருந்தாலும்..."

''கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அப்படித்தானே டாக்டர்'' எனக் கேட்டுச் சிரித்தார் பரமேஸ்வரன்.

படுக்கையிலே படுத்துக் கிடந்ததால் எழுந்து நடப்பது மட்டும் சிரமமாக இருந்தது. டாக்டர் ஏற்பாட்டின்படி கை கால்களுக்குத் தைலம் தடவி கைத்தாங்கலாக நடை பயில ஆட்கள் தினமும் காலை மாலை வந்து உதவினர். பேச்சு இப்போது தெளிவாகி விட்டது.

அன்று இரவு பிள்ளைகள் இருவரையும் கூப்பிட்டார். மருமகள்கள் கதவோரத்தில் படபடக்கும் நெஞ்சைக் கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டபடி நின்றனர்.

"இரண்டு வருஷமாவா நான் கோமாவில் கிடந்திருக்கிறேன்."

"ஆமாம், அப்பா!" என்றான் மோகன்.

"உன் அம்மா திதி வந்திருக்குமே! செய்தீர்களா"

"செய்தோம்" என்றான் குமார் அவசரம் அவசரமாக.

பரமேஸ்வரன் குரல் உயர்ந்தது. "உங்களுக்கு எந்த மாதம், எந்தத் திதியில் செய்ய வேண்டும் எனத் தெரியாது. பொய் சொன்னாலே எனக்குக் கட்டோடு பிடிக்காது. தெரியும் இல்லையா."

''ஆமாம்... அப்பா... இல்லை... அப்பா... மறந்துதான் போய்விட்டது....'' எனத் தலையைச் சொறிந்தார்கள்.

''அந்தப் புண்ணியவதி செய்த தர்மத்திற்கு எப்போதோ ஸ்வர்க்கம் போயிருப்பாள். உங்கள் கைப்பிண்டத்தை நிச்சயம் எதிர்பார்க்க மாட்டாள்...'' என்றார் அவர்.

மேலுக்கு அப்படிச் சொன்னாரே தவிர இதழ் ஓரம் கண்ணீர் கோத்தது.

சற்று நேரம் கழித்து அவராகக் கேட்டார் "கிராமத்து வீட்டிலிருந்து வாடகை ஒழுங்காக வருகிறதா?"

"உம். வருகிறதே..." என்றான் குமார்.

"பாங்கில் போட்டு விடுகிறீர்களா."

''போட்டு விட்டோமே!'' என்றான் மோகன்.

''மறுபடியும் பொய்... இப்போது பாங்க் பாஸ் புஸ்தகத்தைப் பார்த்தால் உங்கள் திருட்டுத்தனம் தெரிந்து போகாதா! செலவழித்து விட்டோம் எனச் சொல்லுங்கள். என் வைத்தியத்திற்கே எவ்வளவு ஆகியிருக்கும்'' எனச் சமாதானப் படுத்தினார்.

"குத்தகைக்காரர் ஒழுங்காக நெல் அளக்கிறாரா, இல்லையா! வீட்டில் ஒரு மூட்டை நெல்கூட கண்ணில் படவில்லையே!" என விசாரித்தார் பரமேஸ்வரன்.

பிள்ளைகளுக்குக் கொஞ்சம் தைரியம் வந்திருந்தது.

"இந்தமுறை பணமாகக் கொடுத்து விட்டார் அப்பா."

"இது என்ன புதுப் பழக்கம்? நம் நிலத்தில் விளையறதை நாம சாப்பிட்ட பிறகு தான் விற்க வேண்டும். அவரை வரச் சொல்லி லெட்டர் போடு" என்று உத்தரவிட்டார் பரமேஸ்வரன்.

பரமேஸ்வரன் தூங்கும் சமயம் நான்கு பேரும் வெளியே வந்து பேசிக் கொண்டார்கள்.

''இப்ப என்ன செய்யறது? ஒரே

■ அன்னம் ■

குழப்பமா இருக்கே!"

இப்படி 'டக்'னு படுக்கையிலே எழுந்து உட்கார்ந்து கேள்வி மேல கேள்வி கேட்பார் என யார் கண்டது? கிராமத்து வீட்டையும் நிலத்தையும் விற்றது அப்பாவிற்குத் தெரிந் தால்...

"'தொலைந்தோம்... பாக்கி இருக்கிற சொத்தையெல்லாம் அவர் சுயார்ஜிதம். எந் தக் கோவிலுக்கோ அனாதையாசிரமத் துக்கோ போய் விடும்."

அவர் பிழைப்பதற்கு வாய்ப்பே இல்லை என டாக்டர் அடித்துச் சொன்ன பிறகு - அவர் சம்மதத்தைக் 'கோமா'வில் கிடந்த போது இடது கை பெருவிரல் குறியிட்டு வாங்கிக் கொண்டு இரண்டு பிள்ளைகளு மாக விற்று விட்டார்கள். அந்தத் தொகை இப்போது ரமா, சுதா காதிலும் கழுத்திலும் மின்னின.

எங்கே மாமனார் 'எது நகை?' எனக் கேட்டு விடுவாரோ எனப் பயந்து இப்போது அவை பீரோவில் புடவைகளுக்கிடையே தூங்குகின்றன.

மறுநாள் காலை இன்னொரு சவால்.

"மோகன்! நாம எல்லோரும் ஒரு நடை கிராமத்திற்குப் போய் வருவோமே... கோவிலில் அபிஷேகம் செய்து விட்டு வர லாம். குடித்தனக்காரருக்குக் கடிதம்



போட்டுவிடு."

"இப்பவேவா!" எனக் கேட்டான் மோகன்.

"ஏன்? அங்கே போவதற்கு நாள் நட்சத்திரம் பார்க்க வேண்டுமா" என வழக்கமான இடக்குடன் கேட்டார் பரமேஸ்வரன்.

"இல்லை. அப்பா. இப்ப பள்ளிக்கூட லீவு நேரம், கல்யாண காலம். ரயிலில் டிக்கெட் கிடைப்பது சிரமம்."

"அதெல்லாம் நமக்கில்லை. ரயில்வே ஆபீஸில் ராம பத்ரனிடம் சொல். 'எமர்ஜென்ஸி கோட்டா'வில வாங்கித் தருவான்."

"சரி! அப்பா" எனத் தலை ஆட்டினான் மோகன்.

கிராமத்திற்குப் போனால் எல்லாம் வெட்ட வெளிச்சம் ஆகி விடும்.

வீட்டை அவர் கண்ணில் காட்ட முடியாது. அதை வாங்கின ராவுத்தர் தரை மட்டமாக இடித்து புதிதாகக் கட்டிக் கொண்டிருக்கிறார்.

நிலத்தை வாங்கியவர் அதை 'பிளாட்'டாக வீட்டு மனையாக்கிக் கொண்டிருக்கிறார்.

நல்லவேளை ராமபத்ரன் ஊரில் இல்லை. 'நான்கு நாளில் வருவார். அப்பாவைப் பார்க்க அவரை நானே வரச் சொல்கிறேன்' என்று உத்தரவாதம் கொடுத்தாள் அவர் மனைவி.

'எல்லோருமாகச் சேர்ந்து அவர் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டால் என்ன' - அதுதான் சரியாகப்பட்டது.

குமாரும் மோகனும் அன்று ஆபீஸிலிருந்து திரும்பும்போது வக்கில் வந்திருந்தார்.

"உயில் எழுதத்தான் கூப்பிட்டு இருக்கிறேன்" என்றார் பரமேஸ்வரன்.

"அதற்கென்ன அப்பா இப்போ அவசரம்?" - இருவரும் பதறினார்கள்.

"இதுவே ரொம்ப லேட். இப்படி எழுந்து உட்கார்ந்ததுபோல் மறுபடி படுத்து விட்டால்..."

வக்கில் உயில் வாசகத்தைப் படித்துக் காண்பித்தார். நியாயமாக யாருக்கும் மனக்குறை வராமல் சொத்துக்களைப் பிரித்து எழுதியிருந்தார்.

படித்து முடித்தவுடன் எல்லோர் மனதில் ஒரு ஆச்சரியம். கிராமத்து வீட்டையும் நிலத்தையும் பற்றி அதில் எழுதப்படவே இல்லை!

"என்ன யோசிக்கிறீங்க? 'கிராமத்து வீட்டையும் நிலத்தையும் என்ன செய்யப் போறேன்னா!'"

அவர்கள் பேசவில்லை.

"ரொம்ப நாளா குடித்தனம் இருக்கார். ரொம்ப வருஷமா குத்தகை எடுத்திருக்கார்... அவர்களே அனுபவிச்சுட்டுப் போகட்டுமே. என்ன நான் சொல்றது!"

அவர்கள் மலங்க மலங்க விழித்தார்கள்.

"பயப்படாதீங்க. எனக்கு எல்லாம் தெரியும்.நேத்தைக்குக் கடை வீதிப் பக்கம் போயிருந்தபோது தற்செயலா நம்ம குத்தகைதாரரைப் பார்த்தேன். அவர் எல்லா விஷயத்தையும் சொல்லிட்டார்.

கிராமத்து வீட்டையும் நிலத்தையும் மட்டும் நான் என் தலையிலா சுமக்கப் போறேன்? உங்களுக்குத்தான். கொஞ்சம் நீங்க அவசரப்பட்டுட்டீங்க. அவ்வளவுதான்! அதோட, நான் கோமாவுல இருந்தப்ப நீங்க என்னோட பெருவிரல் ரேகையை எடுத்தது சட்டப்படி செல்லாது. அதனால, வாங்குன ராவுத்தரை வரச் சொல்லுங்க. நானும் கையெழுத்துப் போட்டு புதுசா பத்திரம் பதிய ஏற்பாடு பண்ணலாம்."

"அப்பா! என்ன இருந்தாலும் நாங்க செஞ்சது தப்புத்தான்" என்றான் குமார்.

"அசடுகளா', உங்களையெல்லாம் மறுபடியும் பார்த்துப் பேச, பேரப் பசங்களோட கொஞ்ச... அந்த ஏழுமலையான் ஒரு சந்தர்ப்பம் கொடுத்தானே - அந்தக் கருணைக்கு முன் எந்தச் சொத்தும் துச்சம்டா!" என்றார் பரமேஸ்வரன் நெகிழ்ச்சியுடன்.




**"அந்தக் கணக்கு வாத்தியார் ரொம்ப அரசியல்ல ஈடுபாடு உடையவர் போலிருக்கு!"**

**"எப்படிச் சொல்றே?"**

**"ஒரு கள்ள வோட்டுக்கு ஐம்பது ரூபாய்னா ஐநூறு கள்ள வோட்டுக்கு எவ்வளவுன்னு பாடம் நடத்தினாராம்!"**

**— புளியரை கணேசன்**

■ பிரபஞ்சன் ■

<u>சென்ற வாரம்</u>

பாரதி, இனிமை ததும்பும் பெண். பாட்டு, கவிதை போன்றவைகளில் மிக்க ஈடுபாடு கொண்டவள். முன்னாள் சுதந்திரப் போராட்டத் தியாகியும், பாட்டு வாத்தியாருமான வைத்தியநாதனின் ஒரே மகள். தன் அபார பாட்டுத் திறமையால், உயர உயரப் போகிறாள். சங்கீதத் துறையில் புதிய நட்சத்திரம் என்றார்கள் விமர்சகர்கள். என்றாலும், பாரதி பாடுவதை விட்டு விடுகிறாள். அவளுக்கு என்ன நேர்ந்தது? திருமணம் நடந்தது.

கணவன் கனகராஜ், வெளியூரில் இருந்து பாரதிக்குக் கடிதம் எழுதுகிறான். நூறு ரூபாய்க்குக் குழந்தைக்கு விளையாட்டுச் சாமான் வாங்க வேண்டுமா, என்கிறான். பாரதி, விரும்பி ஒரு புத்தகம் வாங்குகிறாள். அதன் விலையைப் பார்த்து, இத்தனை விலைக்குப் புத்தகமா என்கிறான் கணவன். அவன் சம்பளம் மாதம் இருபதாயிரம். புத்தகத்தின் விலை ரூ. 130/- மட்டும்.

இனி கதை தொடர்கிறது....

மா லை, உலை பொங்கி மேலே வரும் சாதம் போல வெளுத்தபடி வந்து கொண் டிருந்தது. பாரதி, பஞ்சாலைத் தெருவில் இருக்கும், சினேகிதியைப் பார்த்து வரலாம் என்று புறப்பட்டாள். கல்லூரியில் பாரதி யுடன் படித்தவள் என்பதும் தவிர, அவளு டைய ஒரே சிநேகிதியாகவும் இருந்தவள். இவள் பாட்டு என்று போனபின், அவள் கம்ப்யூட்டர் பயிற்சி பெற்று, ஏதோ ஓர் உத்தியோகத்தில் இருந்து கொண்டு, சொந்த ஊரிலேயே கல்யாணமும் பண்ணிக் கொண்டிருப்பவள்.

வேலையில் இருந்து ஜனங்கள் திரும்பிக் கொண்டிருந்தார்கள். சூரியன் உதிப்பதைப் பார்த்திருப்பார்கள். அது எழும்போது, பத்து மணி வானத்தை, மதிய உச்சியை, ஐஸ்கிரீம் விற்று வருகிற அந்த முதியவரை, ஆபீசுக்குச் சோறு கொண்டு போகிற ஆயாவை, பிச்சை எடுக்கும் யானையை, மனுஷனுக்கு விதியின் ரகசியத்தைச் சீட்டெடுத்துச் சொல்லித் தரும் ஜோசியக் கிளிகளையெல்லாம் பார்க் காமல், இருட்டிய பிறகு, ரொட்டி சம் பாதித்து வருகிற மனிதர்கள். அதில் ஒருவர், கையில் கிலுகிலுப்பை வைத்திருந்தார். அவர் வயசு நாற்பதுக்கு மேல் இருக்கும் நிச் சயம். அது ஏதோ ஒரு குழந்தைக்காகத்தான் இருக்கும். கிலுகிலுப்பைச் சப்தம் கூட சற்றே பாரதிக்குக் கேட்டதாகத்தான் தெரிந்தது. அதை வாங்கும் போது, அதன் விலை பற்றி அவர் சிந்தித்து இருப்பாரா? அவளுக்குச் சிரிப்பு வந்தது.

முருகன் - வள்ளி கோயிலைக் கடக்கும் போது, பேரிரைச்சலுடன், யாரோ ஒரு பாடகியின் முனகல் பாட்டு முழங்கியது. காதால் கேட்க முடியாத பாட்டு. எரிச் சலும் வருத்தமுமாக இருந்தது. சுற்றி இருந்த யாரையும் சங்கடப்படுத்தவில்லை அப் பாட்டு. சீக்கிரமாக அதைக் கடந்து ஏரிக்கரைத் தெருவை அடைந்து, சினே கிதியின் வீட்டுக் கதவுப் பொத்தானை இயக்கினாள், பாரதி.

கதவு திறந்து, லலிதாவின் மாமியார் எட்டிப் பார்த்தாள். 'ஆரு' என்றபடி, கண்களுக்கு மேலே கையை வைத்து



# 2

# முதல் மழைத் துளி

உற்றுப் பார்த்தாள். பாரதி தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டாள்.

"வாத்தியார் மகளா? வா வா" என்றார் அந்த அம்மாள். லலிதாவுக்குத் தோழியைப் பார்த்ததில் மகிழ்ச்சி. மாமியார் டீவி. பார்க்கட்டும் என்று அவளை மொட்டை மாடிக்கு அழைத்துச் சென்றாள். மாடியின் நடுவில் அமர்ந்து கொண்டார்கள் அவர்கள்.

"எப்படி இருக்கே, பாரதி? இளைச்சுப் போயிட்டே...."

பாரதி சிரித்தாள். அவள் சிரிக்கும் போது புருவம் மேலே உயரும். கண்கள் விரியும். லலிதா சொல்லிக் கொண்டு போனாள். மேலே, பாதி வளர்ந்த நிலா, இவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தது. அடிக்கடி நட்சத்திரங்கள் தலையை ஆட்டி 'ஓஹோ' என்றன. காற்று, பள்ளி முடிந்து வீடு திரும்பும் குழந்தைகளின் உற்சாகம் போல, களித்து வீசியது. லலிதாவின் மாமியார், நல்லவளாக வாய்த்தாள். புருஷனும் புரிந்து கொள்ளும் மாதிரிதான். சம்பளம், அவனுக்கும் கைநிறைய வருகிறது. குழந்தை இனி வரும். பிக்கல் பிடுங்கல் இல்லை.

"ஆனாலும் பாரதி, மனசு என்னவோ வெறுமையா இருக்கு."

"அது நல்லதுதானே?"

"எது? வெறுமையா இருக்கிறதா?"

"ஆமா. எல்லாக் குப்பைகளையும் போட்டு வைக்கிற 'ஸ்டோர் ரூமா', மனசை மாத்திக்க வேணாம்னுதான் ஒரு ஞானி சொல்றார். உள்ள ஏராளமான அடைசல் இருந்தா புதுசா எதுவும் உள்ள போக முடியாது. புதுசு புதுசா எண்ணங்களும், கிளர்ச்சிகளும் தோணணும்னா, மனசை எப்போதும், துடைச்சு கழுவிச் சுத்தமா வச்சிக்கணும்னு அவர் சொல்றார்."

"முடியறதா?"

"முடியணும். முடியறதான்னு சுலபமா கேட்கலாம். அப்படிக் கேட்கிறபோதே, நாம் நம் இயலாமையை, வெளிப்படுத்திக் கொள்றோம். அதோட, நம்மால ஆகாதுன்னு ஒரு நெகடிவ்தனத்தை நாமே அங்கீகரிச்சிடறோம். பிரச்னையே அதுதான்."

லலிதா, யோசித்துக் கொண்டிருந்தாள்.

"என்ன பண்ணணும்?"

"ஒரு கதை. ஒரு குருகிட்ட, ஒரு சிஷ்யன் போய், என்னை ஏத்துக்குங்கன்னு கேட்டான். சும்மா கேட்டிருக்கலாம். அந்தப் பையன், தன்னைப் பெரிய படிப்பாளின்னு காட்டிக்க, நான் அதைப் படிச்சிருக்கேன், இதைப் படிச்சிருக்கேன்னு பெரிய பட்டியலைக் காட்டியிருக்கான். குரு, ரொம்ப சரி, முதல்ல தேநீர் சாப்பிடுவோம்னு, தேநீர் கொண்டு வரச் சொன்னார். தன் கோப்பையில, கொஞ்சம் தேநீரை ஊற்றிக் கொண்டு, சிஷ்யன் கோப்பையிலே, வழிய வழிய ஊத்தினாராம். தேநீர் வழிஞ்சு ஓடறதைப் பார்த்த சிஷ்யன், பதறிப் போய், ஏற்கெனவே கோப்பை நிரம்பிடுச்சே. மேலும் மேலும் ஏன் ஊத்தறீங்க.. கோப்பை ஏத்துக்காதேன்னு சொன்னானாம். அதுக்குக் குரு சொன்னாராம். 'கோப்பை மாத்திரம் அல்ல. உன் மனசும்தான். உள்ளே ஏராளமான குப்பையை வைத்துக் கொண்டு என்னிடம் என்ன தெரிந்து கொள்ள வந்திருக்கிறாய்? உள்ளே வைத்துக் கொள்ள இடம் ஏது? முதலில், அதைக் காலி பண்ணிக் கொண்டு என்னிடம் வான்னு சொன்னாராம். அது மாதிரிதான். அது நமக்கும் பொருந்தும், பொருந்தணும்."

"அது என்ன அத்தனை சுலபமா? சும்மா இரு. சும்மா இருன்னு சொல்றாங்க. சும்மா இருக்க முடியறதா? சாமி அறைக்குள்ள போயி, வத்தி கொளுத்தி வைக்கிறேன். கத்திரிக்கா என்ன இந்த விலை விக்கறதுன்னு மனசு கதறுது. வலது கால் கட்டை விரல்ல நகம் நீண்டிருச்சு. அதை வெட்டணும்னு மனசு அலையுது. என்னடி பண்றது?"

லலிதாவுக்கு வீடு கட்ட வேண்டும் என்கிற ஆசை. ஆபீசில் பணம் கேட்டிருக்கிறான். வரும். பிளாட் ரெடி. வீட்டுக்காரரிடம் இருந்து பைசா இதற்காக எதிர்பார்க்கவில்லையாம்.

"ஏன்? உங்கள் இரண்டு பேர் வீடும்தானே அது?"

"ஆனால், பேசியபடி வரதட்சணை கொடுக்க முடியவில்லையே, அப்பாவால்."

"மாசம் ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கிறாயே?"

"அது கணக்கில் சேர்த்தியா? அந்தப் பணம்தானே மாப்பிள்ளைகளுக்கு முக்கியம்?"

பாரதி, லலிதாவின் கண்களை உற்றுப் பார்த்தாள்.

● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

**முயற்சி இல்லாத நம்பிக்கை கப்பலில்லாத கடல் யாத்திரை போன்றது!**
**— பர்மியப் பழமொழி**

**தகவல்: ஆர். பிரகாசம்**

"இது உனக்கு வருத்தமா இல்லையா?"

லலிதா தலையைக் குனிந்து கொண்டாள். தலைப்புச் சரிகையை நீவி விட்டுக் கொண்டாள்.

"பொம்பிளை வருத்தம் என்னத்துக்கு ஆகும்? ஆறு மேல கோவிச்சுக்கிட்டு, குளிக்காமே இருக்க முடியுமா?"

அப்போது, படி ஏறி ஓர் இளைஞன் வந்தான்.

"சாரி, லலிதா. ஒரு நிமிஷம். தகவல் சொல்லிட்டுப் போக வந்தேன். நாளைக் காலையில, ஆபீசுக்கு போறதுக்கு முன்னாலே, எம்.டி. வீட்டுக்கு வந்துட்டுப் போகச் சொன்னார். மதியம் பிளைட்டுல அவர் 'அப்ராட்' போறார்."

"ஃபைல் என்னிடம் இல்லையே?"

"ஏதானும் தகவல் சொல்வதற்காக இருக்கும்."

"சரி."

"நான் வர்றேன்."

"இரு. ஒன்றும் ரகசியம் இல்லை. பேசிட்டுப் போகலாம்."

அவன் அமர்ந்தான்.

"இது அரவிந்தன். என்னோட வேலை பார்க்கிறவர். கம்ப்யூட்டரில் புலி. பெரிய அறிவாளி. இவ, என் சினேகிதி, பாரதி."

அரவிந்தன், பாரதியைப் பார்த்துச் சொன்னான்.

"மேடம். இந்த நாட்டுல, சாதாரண அறிவுள்ளவன் எல்லாம், அறிஞர்கள். சாதாரண தொழில்நுட்பம், புலித்தனம். எதையுமே, அதிகபட்ச 'டிகிரி'யில் சொன்னால்தான் நம்ம ஆட்களுக்குத் திருப்தி."

பாரதி சிரித்தாள்.

"நீங்க அசாதாரணமானவர்னு, லலிதா நினைச்சிருக்கலாம்."

"ரெண்டு தலை, நெற்றிக் கண், பாதத்துல சங்கு சக்கரம் கேஸ்கள் மாதிரியா?"

"ஏய், அரவிந்த். ரொம்பப் பெரிய ஆட்கள், தங்களைச் சாமானியர்களாகக் காட்டிக் கொள்றதே, சாமானியர்களைக் கேலி செய்யற அகந்தை தெரியுமா?"

"தெரியாது. சாதாரணமானவர்கள், தங்களைப் பூதக் கண்ணாடி வைத்துப் பார்த்துக் கொண்டு, பெரியவர்களா பந்தா காட்டறது, அதைவிட மோசம் இல்லையா?"

"அது சரி" என்று ஒப்புக் கொண்டாள் பாரதி.

"பாரதி மேடம். உங்ககிட்ட ஒரு விஷயம் கேட்கணுமே..."

"சொல்லுங்க."

"உங்க கச்சேரியை ஒருமுறை கேட்டேன்.



**"தேர்தல் முடிஞ்ச கையோட கட்சி ஆபீசுக்கு பெரிய கிரேனைக் கொண்டு வரும்படி தலைவர் சொல்லியிருக்காரா. எதுக்கு?"**

**"கட்சியைத் தூக்கி நிறுத்தத்தான்!"**

**— புளியரை கணேசன்**

என்னை ரொம்ப கவர்ந்துச்சு அந்த நிகழ்ச்சி. அந்தக் கச்சேரியில, நீங்க பாடின 'மாமவ பட்டாபிராம' என்னை மெய்மறக்க வச்சது. மணிரங்கே. ஒரு மணிதான். நவ மணிகள்ளே முதல் மணி. அசாத்தியமான, ஒரு அமைதி அதுல இருக்கு. காற்று ஓய்ந்து போன அமைதி இல்லை. அரசிலை, சலசலக்கிற சப்தத்தை உணர வைக்கிற அமைதி. தென்னை மரம், தலை சுத்தி ஆடறதை உணர வைக்கிற அமைதி. அழகு. அழகு. கொள்ளை அழகு. பட்டைக் கொலுசு மாதிரி, அழுத்தமான வார்ப்படம். ஏன், இப்போல்லாம் நீங்க பாடறது இல்லை?"

பாரதி, ஒரு ரசிகனின் பாராட்டைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தாள். என்றாலும் அவன் கேட்ட கேள்வி அந்தரத்தில் தொங்கியபடி இருந்தது.

"சாரி மேடம். நான் அந்தரங்கமா ஏதாவது கேட்டுட்டனா?"

"இல்லை. இல்லை. கல்யாணம் ஆச்சு. குழந்தை வந்துடுத்து. முடியலை."

"என்ன ஆச்சரியம். கல்யாணம் ஆனா, ஏன் பல பெண்களுக்குச் சொந்தத் திறமை போயிடறது, லலிதா? எனக்குப் புரியலை."

"புரியாது. உனக்கு ஆண்களைப் புரியாது. அதாவது பெரும்பாலான ஆண்களை. கோவல மனப்பான்மை."

"அது என்ன மனப்பான்மை?"

"மாதவின்னு ஒரு நாட்டியக்காரியைக் காதலிக்கிறது. ஆனா அவளை ஆடக் கூடாதுன்னு சொல்றது. இதுதான் கோவல மனப்பான்மை."

"சரி. கல்யாணத்துக்கு முன்னாலே, புருஷன் ரசனையும், எதிர்பார்ப்பும் தெரியாமே என்னத்துக்குக் கல்யாணம் பண்ணிக்கிறாங்களாம், பெண்கள்?"

லலிதாதான் சொன்னாள்.



**"நீங்க ஏன் ஹனிமூனுக்கு எங்கேயும் போகலை?"**

**"போகலாம்னுதான் இருந்தேன்; அதுக்குள்ள கணவரை டைவர்ஸ் பண்ணும்படி ஆயிடிச்சே!"**

**— சீர்காழி வி. ரேவதி**

"அரவிந்த், உன் சிறகை மடக்கிட்டு, மண்ணுக்கு வர்றியா?"

"வந்தேன்."

"மண் மேல நின்னு சிந்திக்கப் பழகு. உனக்குப் பல மத்திய அமைச்சர்கள், கவர்னர்கள் பழக்கம். எல்லாத்தையும் புறக்கணிச்சுட்டு, உன் பல கோடி சொத்து பற்றியும் கவலைப்படாமல், உழைக்கிறே. உனக்கு எல்லாம் அனாவசியம். நீ ஆண். ஆனால், பெண், கல்யாணமுன்னு வந்தா, எது எதுக்கோ கட்டுப்பட வேண்டியிருக்கு. எதையெதையோ இழக்க வேண்டியிருக்கு. கல்யாணம் பண்ணிக்கத் தைரியம் இல்லாத ஆள், நீ. உனக்கு என்ன பேச்சு?"

"கல்யாணம், குத்துச் சண்டைப் போட்டி இல்லை, லலிதா. கல்யாணம், இரண்டு பேர் சம்பந்தப்பட்ட விஷயம். என்னைப் போலவே..."

"சிறகுகள் கொண்ட, பறக்கிற, பெண் உனக்குத் தேவை. அதைத் தேடிக் கண்டுபிடிக்க உன்னால் ஆகலை. சரியா?"

"சரி."

"கண்டுபிடி. உன்னைப் போலவே, தோளில் தொங்குகிற பைக்குள் பிதுங்கி வழிகிற புத்தகங்கள், கண்ட கண்ட ஓட்டல்களில் சாப்பாடு என்று இருக்கிற பெண், உனக்குக் கிடைக்கட்டும்."

"கிடைக்கவில்லை என்றால் என்ன? அரவிந்தனுக்குக் கல்யாணம் ஆகவில்லை என்பதற்காகச் சூரியன் உதிக்காமலோ, அஸ்தமிக்காமலோ போய் விடுவானா, என்ன?"

பாரதி எழுந்தாள்.

"நான் புறப்படுகிறேன்."

"இருங்கள், மேடம். தயவுசெய்து எனக்காக ஒரு பாட்டுப் பாட முடியுமா?"

"தாராளமாக."

ஒரு நிமிஷம் கண்ணை மூடினாள் பாரதி. அவள் மனக்கண்முன், 'கோரி ஸேவிம்பராரே...' வந்துநித்தது. கரஹரப்ரியாவை, மெல்ல, சுருக்கமாக வழங்கி விட்டுக் கீர்த்தனத்துக்கு வந்தாள்.

"கோரி ஸேவிம்பராரே கோர் கெலீடேர..."

அவள் இருளில் கலந்து, வானத்தில் மிதந்து, காற்றில் ஒன்றிப் போய், நட்சத்திரங்களுடன் பேசி, நிலவோடு சல்லாபித்து, அவ்வப்போது மண்ணில் காலூன்றி நின்றாள். தேவர்களும் பொன் புஷ்பங்களால் அர்ச்சிக்க, அந்தணர்களும் சனகாதி முனிவர்களும் புகழ, ஸ்ரீ சௌந்தர்ய நாயகியோடு சேர்ந்து தியாகராஜவரதனான பரமாத்மா சிவபெருமான் கொலுவீற்றிருக்கிறார்...

முடிந்ததும், அரவிந்தன் சொன்னான்.

"என் கண்முன்னே கோவூர் சுவாமி நிற்கிறார்."

மகிழ்ச்சியால் கண்ணில் நீர் அரும்ப எழுந்து நின்றாள்.

"ரொம்ப நன்றி" என்று எழுந்தான் அரவிந்தன்.

"இல்லை, நான்தான் நன்றி சொல்லணும்."

"ஏன்?"

"என்னைப் பாடச் சொன்னதுக்கு. என் பாட்டைக் கேட்டதுக்கு. என்னையும் பாராட்டியதுக்கு."

அரவிந்தன் குழம்பிப் போனான்.

"பாரதி, உன் வீட்டைக் கடந்துதான் அரவிந்தன் போகணும். கூடவே போ, துணைக்கு, அரவிந்த்."

"சரி."

அவர்கள் தெருவுக்கு வந்தார்கள்.

"என்ன அப்படிச் சொன்னீர்கள். அருமையான பாடகி நீங்கள். உங்கள் பாட்டைக் கூடவா, யாரும் கேட்க மாட்டார்கள்? எதுக்குக் கசந்து கொள்கிறீர்கள். பாரதி மேடம்?"

"அதை விடுங்கள்."

"சரி, ஏன் இப்போல்லாம் பாடுவது இல்லை?"

"பாடுவது என் கணவருக்குப் பிடிக்கலை."

"ஓ."

அவன் மனம் வலித்தது.

(தொடரும்)

# தரத்துக்குத் தரும் விலை

அரசுத்துறை என்றாலே நஷ்டம்; கஷ்டம் என்று புலம்பும் நமக்கு நற்செய்தி:

போன வருடம் கைத்தறித் துறையில் தேக்கம் உண்டானபோது கூட கோ ஆப்டெக்ஸ் நிறுவனம் கணிசமான லாபம் கண்டிருக்கிறது.

இந்த வருடம்...? லாபம்தான் எதிர்பார்க்கிறார்கள்.

தீபாவளியையொட்டி நடந்த விற்பனை இதற்கு சாட்சி.

நாம் கோ-ஆப்டெக்ஸ் ஷோரூம்களை ஒரு ரவுண்ட் அடித்தபோது, "நம்ம ஊர் கிளைமேட்டுக்கு காட்டன் தான் லாயக்கு!" என்று வியர்வையைத் துடைத்துக் கொண்டே பட்டுப்புடைவை செலக்ஷனில் மும்முரமாக இருந்தார் லட்சுமிப்ரியா.

"நான் கிழமைன்னா பட்டுதானேங்க உடுத்த முடியும்?" என்று கூன்ஏஜ் மறந்து சொன்னார்.

"எங்ககிட்ட இருக்கறதிலேயே நாற்பதாயிரம் ரூபாய் புடைவைதான் காஸ்ட்லி. அதெல்லாம் தீபாவளிக்கு இரண்டு வாரம் முன்னாலே வித்துத் தீர்ந்திருச்சு..." என்றார் கோ ஆப்டெக்ஸ் 'பட்டு மாளிகை' சேல்ஸ் பெண்மணி ஒருவர். "நேற்று ஒருத்தர் வந்து 29,000 ரூபாய் விலையில் இரண்டு புடைவை வாங்கிட்டுப் போனார்" என்றார் சர்வசாதாரணமாக!

"புடைவை வாங்க பெண்கள் எடுத்துக் கொள்ளும் நேரம் பற்றி கல் தோன்றி மண் தோன்றா ஸாரி-புடைவை தோன்றா காலத்திலிருந்தே கிண்டல் அடிபடுகிறது இல்லையா... நிஜத்தில் எப்படி...?" நாம் கேட்கிறோம்.

"அரை மணி நேரத்துல செலக்ட் பண்ணாங்கன்னா சாதனைதான்." - இது குறைந்த பட்ச நேரமாம். முன்தினம் அங்கு வந்திருந்த மூவர் குழு ஒன்று, காலை கடை திறந்தவுடனே நுழைந்து அலச ஆரம்பித்து மாலை ஆறு மணிக்குத்தான் இரண்டு பட்டுச் சேலைகளை செலக்ட் செய்து முடித்தார்களாம். கூல் ட்ரிங் சாப்பிட ஒரு சின்ன இடைவேளை எடுத்துக் கொண்டதோடு சரி! மீதி நேரம் முழுக்க புடைவைகளைப் பிரித்து, புரட்டி, பார்த்துப் பார்த்து...

நாம் பார்த்தபோது

ஒரு வாடிக்கையாளருக்கு 'பில்' போட்டு புடைவையோடு மஞ்சள்-குங்குமம், பூச்சரம் எல்லாம் விதரணையாகக் கொடுத்தார்கள்.

''முகூர்த்த புடைவை வாங்கினால் இப்படி மங்கலப் பொருள்கள் சேர்த்துத் தருவது என்று சமீபத்தில் ஒரு வழக்கத்தை அறிமுகம் செய்திருக்கிறோம்'' என்றார்கள். இந்த சென்டிமென்ட் நல்ல பலன் தந்துள்ள தாம்.

மாதாந்திர சேமிப்புத் தொகை செலுத்தி ஆண்டின் இறுதியில் பட்டுப் புடைவை வாங்கிக் கொள்ளும் திட்டத்தை அறிமுகம் செய்திருக்கிறது கோ ஆப்டெக்ஸ். 300 ரூபாயிலிருந்து ஆயிரம் ரூபாய் வரை செலுத்தலாம். ஒன்பது மாதங்களுக்குச் செலுத்தினால், பத்தாவது மாதத்துக்கான தொகையை கோ ஆப்டெக்ஸே செலுத்துகிற தாம். அதற்கும் மேல் அரசு வழங்கும் தள்ளு படியையும் கொடுத்து புடைவை வாங்கிக் கொள்ள அனுமதிக்கிறதாம். இந்த சேமிப்புத் திட்டம் மிடில் கிளாஸ் மக்களிடையே பிரபலமாகி வருவதாகச் சொல்கிறார்கள்.

"கோ ஆப்டெக்ஸ் என்றாலே விலை அதிகம் என்ற கருத்து நிலவுகிறதே?" என்று கேட்டால் அது தரத்துக்குத் தரும் விலை என்கிறார்கள்.

''ஒவ்வொரு புடைவை லேபிளிலும் பட்டின் எடை, ஜரிகையின் எடை, நிறம், இழை எண்ணிக்கை என்று எல்லாவற்றையும் வெளிப்படையாகக் குறிப்பிட்டு விடுகிறோம். எங்கள் தரத்துக்கு நாங்கள் விற்கும் விலை நியாயம்தான். இன்றைக்கு மூவாயிரம் ரூபாய்க்கு காஞ்சிபுரம் பட்டுச்சேலை கிடைக்கிறது என்றால் அது நிஜமான காஞ்சிப் பட்டா என்று வாடிக்கையாளர்கள் யோசிக்க வேண்டும்.''- இதுதான் கோ ஆப்டெக்ஸ் தரப்பு பதில்.

அப்படியானால் மற்ற கடைகள் போல் ஏன் வாடிக்கையாளர்கள் குவிவதில்லை...?

''எல்லா தரப்பு வாடிக்கையாளர்களின் விருப்பத்தையும் பூர்த்தி செய்வது கொஞ்சம் கஷ்டம். இது அரசுத்துறை நிறுவனம். ஒரு புடைவையின் விலையில் தமிழக அரசு மானியம் இருபது சதவிகிதம். தமிழக நெசவுத் தொழிலாளர்களிடமிருந்து மட்டுமே (கூட்டுறவு அமைப்புகள்) கொள்முதல் செய்யலாம் என்ற கட்டாயம். ஆனால் இந்த சவால்களைச் சந்தித்து முன்னேறி வருகிறோம். வாடிக்கையாளர்கள் விரும்பும் டிசைன், நிறத்தில் ஆர்டர் கொடுத்தால் இரண்டு மாதத்தில் நெய்யச் செய்து கொடுக்கிறோம்...'' என்றனர் கோ ஆப்டெக்ஸ் அதிகாரிகள்.

இவர்களுடைய சமீபத்திய நல்முயற்சி சென்னை, மயிலையில் லஸ் கார்னரில் அழுது வடிந்த ஷோரூமை உயிரூட்டியது தான். ''எல்லா ஷோரூம்களுமே அப்படி உருமாற்றப்பட்டால் வாடிக்கையாளர்கள் வராமல் எங்கே போவார்களாம்!'' என்று கேட்கிறார் மயிலை ஷோரூமுக்குச் சமீபத்தில் சென்று வந்த பெண் ஒருவர்.

**— ஜி.எஸ்.எஸ்.**

---



''எங்கம்மாவ கடிச்சுட்டியாமே. நிஜமா?''

''நீங்க தானே எதுவானாலும் வாயோட வச்சுக்க, கை நீட்டுறவேலை மட்டும் வேணாம்னு சொன்னீங்க!''

"இந்த நடிகைக்கு பழைய கணவர்கள் நிறையப் பேர் போல..."

"எப்படிச் சொல்றீங்க?"

''தீபாவளியை முன்னிட்டு ஜீவனாம்சம் கூடுதலாக வேணும்னு வாசல்ல போர்டு எழுதி வைச்சுக்கிட்டு ஆர்ப்பாட்டம் நடத்தறாங்க!''

— அம்பை தேவா







● கனடா நாட்டு நாடாளுமன்றத்தில் 1998-ம் ஆண்டு தீபாவளி திருநாள் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அன்றைய தினம், நாடாளுமன்றக் கட்டடம் வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப் பட்டு லட்சுமி பூஜை நடத்தப்பட்டு, இனிப்புகளும் வழங்கப்பட்டன. ஒரு வெளி நாட்டு நாடாளுமன்றத்தில் தீபாவளி கொண்டாடப் பட்டது, அதுதான் முதல் முறை.

● ஜெயின் மதத்தில் தீபாவளிக்கு முன்பு 8 நாட்களுக்கு உண்ணா விரதம் கடைப்பிடிக்கிறார்கள். இதை 'பர்யூசன் பர்வா' என்று அழைக்கிறார்கள். இந்த விரதத்தின் போது ஓர் அமைதியான இடத்தில் அமர்ந்து தியானம் செய்வார்கள். அந்த எட்டு நாட்கள் காய்கறி உணவைத் தவிர்த்து, வெறும் சுடுதண்ணீர் மட்டுமே அருந்துவார்கள். இந்த எட்டு நாளில் தான், ஜெயின் மதத்திலுள்ள எல்லா வயதினரும் ஒன்றுசேர ஜெயின் கோயில் களுக்குச் சென்று 'கல்பசூத்ரா' படிக்கச் சொல்லிக் கேட்பார்கள்.

● தீபாவளி தினத்தன்றும், பொங்கல் தினத்தன்றும் சிறுவர் முதல் பெரியவர் வரை பட்டங்கள் செய்து வானில் பறக்க விட்டு மகிழ்வது குஜராத் மக்கள் மட்டுமே.

● தீபாவளியைக் கொண்டாடாத ஒரே இந்திய மாநிலம், நம் அண்டை மாநிலமான கேரள மாநிலம்தான்.

● காஷ்மீர் பகுதிகளில் தீபாவளியன்றுதான் நாம் மாட்டுப் பொங்கல் அன்று செய்வது போல கால்நடைகளை அலங்கரித்து பூஜை செய்து வழிபடுவார்கள்.

● ராஜஸ்தான் 'வேடுவ' இனமக்கள் தீபாவளியன்றுதான் வீர விளையாட்டுகளை விளை யாடிக் காட்டுவார்கள், நம் ஜல்லிக் கட்டு போல.

● ஜைனர்கள் தீபாவளிக்கு முதல் நாள் மன்னிப்புக் கேட்பதை ஒரு விழாவாகக் கொண் டாடி வருகின்றனர். அன்றைய தினம் சிறுவர்கள் பெரியவர்களிடம், தாங்கள் தெரிந்தோ தெரியாமலோ தவறுகள் செய்திருந்தால் மன்னிப்புக் கேட்கிறார்கள்.

● தீபாவளி பண்டிகை மதுரை மாநகரில் திருமலைநாயக்கர் ஆட்சிக் காலத்தில்தான் அறிமுகமானது.

● வடமாநிலங்களில் தீபாவளி சமயத்தில், 'இண்டிகோ நீல'வர்ண உடைகள் தான் அதிகம் விற்பனையாகின்றன.

● பட்டாசு செய்யும் கலைக்கு 'பைரோடெக்னிக்' என்று பெயர்.

● சிறுவர்கள் வெடிக்கும் துப்பாக்கியில் வைத்து வெடிக்கப்படும் 'ரோல் கேப்' வெடி இந்தியாவில் சிவகாசியில் மட்டுமே தயாராகின்றது.

● அமெரிக்காவில் 'பட்டாசு' விற்கப்படும் பாக்கெட்கள் மீது நகைச் சுவைத் துணுக்குகள், படங்கள் அச்சடித்தே விற்பார்கள்.

● ஹாலந்து நாட்டு சட்டப்படி குழந்தைகள் பட்டாசு வெடிக் காமல் பார்த்துக் கொள்வது பெற்றோர்களின் கடமை.

—கோவி. இராஜேந்திரன்






ஹா, வலிக்குதே!

ஆயிரம் தடவை சொல்லிருக்கேன் செருப்புப் போட்டுக்கிட்டு பட்டாசு விடு இல்லாட்டி காலைச் சுட்டுடும்னு...

சொன்ன பேச்சைக் கேக்கறதே கிடையாது.

ஐயோ, நான் செருப்பைப் போட்டுக்கிட்டுதான் பட்டாசு விட்டேன்.

அமைமு: அரஸ்

# டுப்பியின் குடும்பம்




Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)